# கல்கி

வைரவிழா ஆண்டு

KALKI 30.12.2001
ரூ. 6.00

## ஆர்யபட்டா விலையில் துப்பட்டா!



# தேடி வந்த செல்வம்!

'தமிழ் சினிமாக் கலைஞர்களில் ஒருவன் ஒரு கோடிக்கும் மேல் பொருள் திரட்டினான். ஆனால் அத்தனையும் பிறருக்கு வழங்கி உயிர்த் துறந்தான்' என்று வரலாறு எழுதப் பெறுமானால் அது என்.எஸ்.கே. ஒருவரையே குறிக்கும்" என்று எழுதினார் கி.ஆ.பெ. விசுவநாதன்.

வாரி வாரி வழங்கும் வள்ளல்தன்மை கொண்ட கலைவாணர், பல ஆண்டுகளுக்கு முன்னால், யாருக்கோ எப்போதோ பரிசளித்த வெள்ளிக் கூஜா ஒன்று, பல கைகள் மாறி மீண்டும் கலைவாணர் குடும்பத்துக்கே வந்து சேர்ந்திருக்கிறது.

"நான் அப்போது, சென்னை பாரதி அரசினர் மகளிர் கல்லூரியில் வரலாற்றுத் துறைத் தலைவராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். அப்போது அதே கல்லூரியில் வேதியியல் துறையில் பேராசிரியையாகப் பணியாற்றிக் கொண்டிருந்த சாந்த லட்சுமி என்பவர், தம் வீட்டில் பரண் மீது கிடைத்த வெள்ளிக் கூஜாவைப் பற்றிச் சொன்னார். விழுப்புரத்தில் வாங்கப்பட்ட அந்தக் கூஜாவில் என்.எஸ்.கே (-) டி.ஏ.எம்' என்ற பெயர் பொறிக்கப்பட்டிருப்பதால் அது, என்.எஸ். கிருஷ்ணன், மதுரம் தம்பதியால் யாருக்கோ அன்பளிப்பாகத் தரப்பட்டதாக இருக்கலாம் என்று சொன்னார். அந்தச் செய்தியைக் கேட்டதும் எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது. கலைவாணர் உபயோகித்த பெல்ஜியம் கண்ணாடி, வேலைப்பாடு மிகுந்த ஒரு ஸ்டூல், இரண்டையும் அவரது நினைவாகப் பாதுகாத்து வருகிறேன். சென்டிமென்டலாக இந்த வெள்ளிக் கூஜாவையும் பாதுகாக்க ஆசைப்பட்டபோது, சாந்தலட்சுமியும் மனமுவந்து தந்தார். கலைவாணர் 1957ல் மறைந்தார். அவர் மறைந்து நாற்பது ஆண்டுகள் கழித்து, இந்த வெள்ளிக் கூஜா அவரது மருமகளான என்னிடமே எதிர்பாராத வகையில் வந்து சேர்ந்ததை மிகப் பெரும் பாக்கியமாகவே நினைக்கிறேன்" என்கிறார் அன்புக் கொடி நல்லதம்பி.

- க. அனந்தபத்மநாபன்

படங்கள்: யோகா

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# மீண்டும் நீதி கேட்கிறாள்!

பஸ் கட்டண உயர்வு, மின் கட்டண உயர்வு, சட்டக் கல்லூரி மாணவர்மீது தாக்குதல் போன்ற பிரச்னைகளால் ஏற்கெனவே ஒன்றுபட்டிருக்கும் எதிர்க்கட்சிகளை மேலும் ஒருங்கிணைக்கும் விதத்தில் கண்ணகி சிலையை அகற்றியதன் மூலம், புதிய பிரச்னைக்குப் பிள்ளையார் சுழி போட்டிருக்கிறது தமிழக அரசு!

தமிழக அரசு சொல்லும் காரணங்களை நொண்டிச் சாக்கு என்கிறார்கள் தமிழ்ச் சான்றோர்கள். 33 வருடங்களாக இருக்கும் ஒரு சிலை, திடீரென்று போக்குவரத்துக்கு இடையூறு விளைவிக்கும் விதமாக இருப்பதாகச் சொல்வது அபத்தம். பாரதி சாலையிலிருந்து நேரடியாக கண்ணகி சிலையைத் தாண்டி போக்குவரத்து செல்ல வேண்டிய அவசியமே இல்லை. இரவில் படுத்துத் தூங்கும் ஏழைகளுக்கு ஆபத்து என்று சொல்வதும் தவறு. உண்மையைச் சொன்னால் அப்படித் தூங்குபவர்களுக்கு சிலை இருந்தால்தான் பாதுகாப்பு. இப்போது இருக்கும் ஆட்சியாளர்கள், ஜோசியம், யாகம், பரிகாரம், வாஸ்து என்று ஈடுபாடு காட்டுபவர்கள். அதன் காரணமாகவே சிலை அகற்றப்பட்டிருக்கிறது'' என்று சொல்கிறார் தமிழறிஞர் ஒருவர்.

முச்சந்தி முனையில் தலையை விரித்துக் கொண்டு ஆவேசமாக நிற்கும் பெண் சிலை ஆட்சியாளர்களுக்கு நல்லதல்ல என்று ஆருடம் சொல்லப்பட்டதால்தான் சிலை தூக்கப்பட்டது.

என்றும், 'இல்லையில்லை அந்த இடத்தில் சிலை இருப்பது வாஸ்து தோஷம். அதனால்தான் சிலை தூக்கப்பட்டது' என்றும் இருவித கருத்துக்கள் சொல்லப்பட்டு வருகின்றன.

இது பற்றி வாஸ்து நிபுணர் ஆர்.கே.பகவதி ராஜ் அவர்களைக் கேட்டோம். சென்னையில் உள்ள சிலைகளை வாஸ்து அடிப்படையில் ஆராய்ந்து, புத்தகம் எழுதியிருக்கிறார் இவர். ''வாஸ்து சாஸ்த்ர அடிப்படையில் கிழக்கும் மேற்கும் ஆண்களுக்குரிய இடங்கள். வடக்கும் தெற்கும் பெண்களுக்குரியவை. கண்ணகி சிலை சென்னைக்கு கிழக்கில் வைக்கப்பட்டு இருந்தது. மேற்கிலிருந்து வரும் சாலை அங்கே முட்டுகிறது. இதை தென்மேற்கு தெருத் தாக்கம் என்று சொல்லலாம். வாஸ்துபடி பெண்ணுக்கு அல்லாத திசையில், தென்மேற்கு தெருத் தாக்கத்தில் அமைக்கப்பட்டிருக்கும் கண்

கோயிலுக்குப் போகிறோம். பிள்ளையார் ஸந்நிதியில் நிற்கிறோம். அப்போதைக்கு ஒரு க்ஷணம், இரண்டு க்ஷணம் மனஸு குவிந்த மாதிரிதான் இருக்கிறது. அப்புறம் கையை, காலை சொறிந்து


• பகவதி ராஜ்

# அருள்வாக்கு



கொள்கிறோம். மனஸூ பிய்த்துக்கொண்டு கிளம்பி விடுகிறது! அப்படியே எந்தக் குப்பைத் தொட்டிக்கு வேண்டுமானாலும் ஓடட்டும் என்று விட்டு விடுவதா? அப்படி விட்டு விடாமல், நல்லதிலேயே, தெய்வ ஸம் பந்தமாகவே அந்த மனஸை இழுத்தால்தானே தேவலை? எப்படி இழுப்பது? பாழும் மனஸூக்கு இந்த விக்நேச்வர மூர்த்தி, தொப்பையும் தொந்தியுமாக இத்தனை அழகாக உட்கார்ந்திருந்துங்கூட, அவரிடமே தொடர்ச்சியாக ஒட்டிக்கொண்டிருக்க முடியவில்லையே! 'பரவாயில்லையப்பா!' என்று இங்கேதான் நம் ஸமயாசார புருஷர்கள் ஆறுதல் தர வருகிறார்கள். 'மனஸின் நேச்சர் அப்படித்தான் அப்பா! அதைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் திருத்தி நிலையாக ஒருமுகப்படுத்த முடியுமப்பா! அதற்கு எதிலும் 'சேஞ்ச்' வேண்டும். தெய்வ ஸம்பந்தமாகவுங்கூட அப்படி வேண்டும். அதையும்தான் நம்முடைய மதம் தருகிறதே! விக்நேச்வரரிடம் ஈடுபாடு குறைகிறதா, அழாதே! இதோ 'சேஞ்சா'க ஸூப்ரஹ்மண்யர் ஸந்நிதி, அப்புறம் இன்னும்பல 'சேஞ்ச்'கள் - அம்மன், ஸ்வாமி, தக்ஷிணாமூர்த்தி, துர்க்கை, நடராஜா, மநுஷ்ய ரூபத்தில் வந்த அறுபத்து மூவர் என்று எல்லாம் ஒன்று சேர்த்துத்தானே கோவில் என்று வைத்திருக்கிறோம்? ஒவ்வொன்றிடமும் ஒரு க்ஷணம், இரண்டுக்ஷணம் மனஸ் ஈடுபட்டுக் கும்பிட்டு விட்டுப் போயேன். மொத்தத்தில் ஒரு கணிசமான நாழி உன் மனசு தெய்வ ஸம்பந்தமாகவே ஈடுபட்டிருக்கும்' என்கிறார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய
ஸ்வாமிகள்

ணகி சிலை, பாதகங்களை உண்டாக்கும் என்பது ஓரளவு, சரிதான். ஆனால் அந்தச் சிலையை தூக்கியதால் வாஸ்து பரிகாரம் செய்தாகிவிட்டது என்றால் அது சரியல்ல. கடற்கரைச் சாலையில் மேற்கிலிருந்து வரும் சாலைகள் முட்டும் இடத்தில் காந்தி, ஒளவையார், உழைப்பாளர் சிலைகள் இருக்கின்றன. கோட்டைக்குப் போகும் வழியில் சமாதிகள், போர் வீரர்கள் நினைவுச் சின்னம் ஆகியவையும் உண்டு. வாஸ்து அடிப்படையில் அவை உகந்த இடத்தில் அமைந்திருப்பதாகச் சொல்ல முடியாது. எனவே என் அபிப்ராயம் என்னவென்றால் வாஸ்து அடிப்படையில் அல்லாமல் ஜோஸ்யர்கள் சொன்னதன் அடிப்படையில் சிலை அகற்றப்பட்டிருக்கலாம்'' என்கிறார் பகவதி ராஜ். இச்செயலால் சிலையை திறப்பதில் முன்னிலையில் இருந்த கருணாநிதிக்கு நல்லது நடக்க வாய்ப்பிருக்கிறது என்கிறார் அவர்!

மூத்த பத்திரிகையாளர் ராகவசிம்மன் ஆலோசனையின் பேரில்தான் ஆட்சியாளர்களால் சிலை அகற்றப்பட்டது என்றும் ஒரு பேச்சு உலா வருகிறது. இந்த பத்திரிகையாளர் சட்டமன்றத் தேர்தலுக்கு முன்பிருந்தே ஜெயலலிதாவின் வெற்றிக்காக மாதா, மாதம் மதுராந்தகம் ராமர் கோயிலில் ஜெவுக்காக சுதர்ஷன ஹோமம் நடத்துபவர் ''அரசன் நன்றாக இருந்தால்தான் மக்கள் சுபிட்சமாக இருப்பார்கள். அந்த அடிப்படையில் தான் அவருக்காக ஹோமம், யாகங்கள் செய்கிறேன். ஆனால் சிலை விவகாரத்தில் என் தலையை உருட்டுவது கொஞ்சமும் சரி அல்ல'' என்கிறார் ராகவசிம்மன்.

அகற்றப்பட்ட சிலை பொதுப் பணி துறை அலுவலகத்தில் இருக்கிறதா அல்லது அருங்காட்சியகத்தில் இருக்கிறதா என்று சொல்லாமல் குழப்புகிறார்கள் அதிகாரிகள். இந்த முறை அது மீண்டும் வைக்கப்பட்டால், கடற்கரை மணலில், கடலை நோக்கித்தான் அமைக்கப்படுமாம்.

''நீதி கேட்டுப் போராடிய கண்ணகி சிலையை அகற்றியதன் மூலம் இந்த ஆட்சியில் யாரும் நீதி கேட்கக் கூடாது'' என்று உணர்த்தியிருக்கிறார்கள் என்கிறார்கள் எதிர்க்கட்சிப் பிரமுகர்கள். எது எப்படியோ பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு சிலையாகியும் நீதி கேட்கிறாள் கண்ணகி.

- ப்ரியன்

படம்: ராஜன்

# டென்னிஸ் உற்சவம்!

மார்கழி மாதம் என்றாலே சென்னைவாசிகளுக்கு சீஸன் உற்சாகம் பிறந்துவிடும். ஆன்மிகம், இசை, நாட்டியம், நாடகம்... என்று பல்வேறு துறையினருக்கும் திருவிழா கொண்டாட்டமாய் இருக்கும். தற்போது அந்த வரிசையில் டென்னிஸ் ரசிகர்களும்.

கடந்த ஐந்து ஆண்டுகளாக 'கோல்டு ஃபிளேக் ஓபன்' டென்னிஸ் போட்டியாக அமர்க்களப் படுத்திக் கொண்டிருந்த இந்த ஏடிபி டென்னிஸ் போட்டி இப்போது 'டாடா ஓபன் 2002' என்ற புதிய பெயரில் நடைபெறவுள்ளது.

இதுவரை ஐ.டி.சி வசமிருந்த ஸ்பான்சர்ஷிப் தற்போது டாடாவின் கைகளில். பழம் நழுவிப் பாலில்தான் விழுந்திருக்கிறது. விளையாட்டுத் துறையில் மிகுந்த ஈடுபாடு காட்டி வரும் டாடாவின் ஸ்பான்சர்ஷிப் கிடைத்திருப்பது மகிழ்ச்சி!

இரண்டுமுறை ஃபிரெஞ்ச் ஓபன் பட்டம் வென்றுள்ள ஸ்பெயின் வீரர் சொர்ஜி புருகெரா ஒற்றையர் பிரிவில் முதல்நிலை வீரராகக் களமிறங்குவது சென்னை ரசிகர்களின் ஆவலை அதிகப்படுத்தியுள்ளது.

அடுத்ததாக ஸ்வீடனின் தாமஸ் ஜோகன்ஸன். இவர் வசம் ஆறு பட்டங்கள் (இந்த ஆண்டில் மட்டும் இரண்டு!) உலகத் தர வரிசையில் முதல் இருபது வீரர்களுக்குள்ளாக இடம் பிடித்திருக்கிறார்.

கஸ்டவோ குயர்டன், மாரட் சபின், கேஃபல்நிகோவ் கேம்பில், மார்செலோ ரியாஸ், கிரெக் ருசெட்ஸ்கி போன்ற முன்னணி வீரர்கள் இவரிடம் மண்ணைக் கவ்வியுள்ளதால் புருகொராவுக்குச் சரியான சவால். 'நானும் சளைத்தவனல்ல' என்று அறைகூவல் விடுப்பது ஃபிரான்ஸ் வீரர் ஃபேப்ரைஸ் சாண்ட்ரோ. இவரது ஸ்டைலான ஆட்டத்துக்கு ஏராளமான ரசிகர்கள். 2001ல் இவரிடம் களப்பலியானவர்களில் ஆந்த்ரே அகஸ்ஸி, டிம் ஹென்மேன், நிக்கோலஸ் கீஃபர் போன்ற பெருந்தலைகளும் அடக்கம்!

இவர்களோடு ஆன்ட்ரி பாவெல், டொமினிக் ஹெர்பாட்டி என்று நட்சத்திர வீரர்களின் பட்டியல் நீள்கிறது.

இரட்டையர் பிரிவில் இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரங்களான லியாண்டர் பயஸ், மகேஷ் பூபதி ஜோடி பங்கேற்பது இன்னமும் உறுதி செய்யப்படாவிட்டாலும் நிச்சயம் பங்கேற்பார்கள் என எதிர்பார்க்கப்படுகிறது.

"அமர்க்களமான ஐந்து களங்கள் ஆயத்த நிலையில் உள்ளன. சர்வதேசத் தரத்திலான இப்போட்டி, சென்னை நகர இளம் டென்னிஸ் வீரர்களுக்கு நல்லதோர் அனுபவப் பாடமாக அமைந்து வருகிறது" என்று உற்சாகமாகக் கூறுகிறார் தமிழ்நாடு டென்னிஸ் சங்க இயக்குனரும், தலைமைப் பயிற்சியாளருமான ஜோஷி.

- பா. சங்கர்

• பாவெல்



• புருகொரா



அண்மையில் தமது எண்பதாவது பிறந்த நாளைக் கொண்டாடினார் தி.மு.க. பொதுச் செயலாளர் பேராசிரியர் க. அன்பழகன். அவரைப் பற்றின சுவாரசியமான தகவல்களைத் தருகிறார் அவரது திருமதி.

★ எது குறித்தும் தெளிவான சிந்தனை கொண்டவர். எப்போதும் நிதானம் தவறாதவர். யாருக்காகவும், எதற்காகவும் தன் கருத்துக்களை விட்டுத் தராதவர். ஆடம்பரத்தை வெறுப்பவர். இதுதான் பேராசிரியர்.

★ தினமும் ஐந்தரை, ஆறு மணிக்கு எழுந்து விடுவார். பற்பசை உபயோகிக்க மாட்டார். வஜ்ரதந்தி பல்பொடியால் கையால் துலக்குவார்.

★ முன்பெல்லாம், நடைபாதை வாக்கிங் போவார். இப்போது, மொட்டை மாடியிலேயே பதினைந்து நிமிட வாக்கிங் போகிறார்.

★ விரும்பிச் சாப்பிடுவது தேநீர்தான். ஆனாலும் காலையில் காபி சாப்பிடுவார்.

★ காலை டிபன் வெறும் இரண்டு இட்லி, சில நாட்களில் அரை அல்லது ஒரு முட்டை. பதினொரு மணிக்கு டீ. மதிய உணவு ரொம்ப எளிமையாக இருக்கும். முன்பெல்லாம், சிக்கன். முள் இல்லாத சில துண்டு மீன் சாப்பிடுவார். இப்போது அபூர்வமாகத்தான் அசைவம் சாப்பிடுகிறார்.

★ பிற்பகலில் வெறும் தேநீர் மட்டும்தான். இரவில் இரண்டு சப்பாத்தி, பால்.

★ பிடித்த உணவு இட்டம் என்று புளியோதரையைச் சொல்லலாம்.

★ தினமும் இரவு பத்து மணிக்கு ஆரம்பித்து, நள்ளிரவு வரை ஏதாவது படித்துக் கொண்டிருப்பார். எழுதுவார்.

★ சித்த மருத்துவம் மற்றும் ஆயுர்வேதத்தில் ஆர்வம் உண்டு.

★ அதிகமாக, டீ.வி. பார்க்கமாட்டார். செய்திகள் தவிர, ஸ்போர்ட்ஸ், நேஷனல் ஜியோகிராபிக் சேனல் பார்ப்பதுண்டு.

★ சினிமா பார்ப்பதில் விருப்பம் கிடையாது. பல வருடங்களுக்கு முன்பு ஒரு தடவை திருச்சி சென்றிருந்தபோது பார்த்த படம் 'ஓமர் முக்தர்'. அப்புறம் பார்த்த படம் 'ஜீன்ஸ்' அதன்பின் சினிமாவே பார்க்கவில்லை.

★ காலையில் ஆங்கில, தமிழ் தினசரிகளின் சிறப்புச் செய்திகளைப் படித்து விடுவார். இரவில் பத்திரிகைகளில் வெளியாகும் முக்கிய கட்டுரைகளைப் படிப்பார்.

★ குடும்ப நிர்வாகத்தில் தலையிட்டதே கிடையாது. குடும்ப விஷயங்கள் குறித்து ஆலோசனை கேட்டால், "அதையெல்லாம் நீயே பார்த்துக் கொள்" என்று கூறிவிடுவார்.

★ அவரது அன்பு உள்ளார்ந்த அன்பு. குழந்தைகளைக்கூட தட்டிக் கொடுப்பாரே தவிர, வெளிப்படையாய் அன்பைப் பொழிந்து கொஞ்சமாட்டார்.

# அன்பழகன் 80!



★ இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு மேலாக செல்ல நாய் வளர்க்கிறோம். வீட்டு நாய் மரணமடைந்தால், ரொம்ப சோகப்படுவார். இப்போதுள்ள நாய் ராஜா, தெரு முனையில் இவரது கார் நுழைந்தாலே குதித்து குரல் எழுப்ப ஆரம்பித்துவிடும்.

★ மற்றவர்கள் அவரைப் புகழ்ந்து பேசுவதோ, அவர் காலில் விழுவதோ துளியும் பிடிக்காது. தர்ம சங்கடமாக உணர்வார்.

★ சாதாரண வாட்ச்தான் அணிவார். கழுத்தில் செயின் அணிவது அறவே பிடிக்காது. நான் பரிசளித்த மோதிரத்தை என் மனம் நோகக் கூடாது என்பதற்காக அணிந்திருக்கிறார்.

★ சுமார் முப்பத்தைந்து வருடமாக, வெற்றிலை போடும் பழக்கம் உண்டு. ஆனால் ஆறுமாதங்களாக அதைக் கட்டோடு நிறுத்திவிட்டார்.

தொகுப்பு : எஸ். சந்திரமௌலி

படம் : யோகா

# வெற்றிடம் நிரம்புமா?



**அண்மையில் மறைந்த அப்துல் லத்தீப்புக்கு அஞ்சலி செலுத்துகிறார் இல. கணேசன்.**

''அப்துல் லத்தீப் என் மரியாதைக்குரிய நண்பர். ஐந்தாண்டுகளுக்கு முன்புவரை, அவரைத் தனிப்பட்ட முறையில் தெரியாது. அரசு ஏற்பாடு செய்கிற சர்வகட்சி கூட்டங்களின் போது, பரஸ்பரம் வணக்கம் சொல்லிக் கொள்வதுடன் சரி! ஐந்து வருடங்களுக்கு முன்பு, அவர் மாரடைப்பு ஏற்பட்டு சென்னை பொதுமருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருந்தபோது, நானும், அப்போதைய எங்கள் கட்சி எம்.எல்.ஏ. வேலாயுதமும் அவரை ஆஸ்பத்திரிக்குச் சென்று சந்தித்தோம்.

எங்களை அவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை என்பதால், எங்களைக் கண்டதும், அவருக்கு ஆச்சரியம் கலந்த சந்தோஷம். என் கைகளை இறுக பற்றிக் குலுக்கினார்.

மாற்று லட்சியங்களைக் கொண்டவர் என்றாலும்கூட, நான் பெரிதும் மதித்த மனிதர் லத்தீப். இந்து சமய நூல்கள் பலவற்றையும் ஆழப் படித்த அவர், வெகு சரளமாக மேற்கோள் காட்டுவார்.

என் அண்ணன் மகள் திருமணத்துக்கு அழைப்பிதழ் கொடுத்துக் கூப்பிட அவரது வீட்டுக்குச் சென்றபோது அவர் வீட்டில் இல்லை. எனவே, அழைப்பிதழை அவரது குடும்பத்தாரிடம் கொடுத்து அழைத்து விட்டு வந்தோம். திருமணத்தன்று நேரில் வந்து மணமக்களை வாழ்த்தினார். அவரிடம், அவர் வீட்டில் இருக்கிறபோது, வந்து அழைக்க முடியாது போனது பற்றி நான் குறிப்பிட்டபோது, 'நான் உடம்பு சரியில்லாமல் படுத்திருந்தபோது நேரில் வந்து நலம் விசாரித்ததைச் சந்தோஷமாய்க் குறிப்பிட்டு, 'அப்படிப்பட்ட உங்கள் வீட்டுத் திருமணத்துக்கு நான் வராமல் இருக்க முடியுமா?' என்று கேட்டார்.

எனது பேட்டிகளில் இஸ்லாமியத் தீவிரவாதிகள் என்று குறிப்பிடுவதை தம்மால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை என்று அவர் ஒருமுறை என்னிடம் குறிப்பிட்டார். நான், ''தீவிரவாத நடவடிக்கைகளில் ஈடுபடும் முஸ்லிம்கள் மசூதிகளில் இருந்து கொண்டு செயல்படுகிறார்கள்; தீவிரவாத செயல்கள் புரிகிறபோது அல்லாவின் பெயரைக் குறிப்பிடுகிறார்கள்'' என்று சுட்டிக் காட்டியபோது ''தீவிரவாத செயல்களில் ஈடுபடுவோரை, ஒட்டு மொத்த இஸ்லாமியப் பிரதிநிதிகளாக நினைத்து விடாதீர்கள். அறிவுபூர்வமாய்ச் சிந்திக்கிற மூத்த தலைமுறையினர், இத்தகைய இளைஞர்களின் வன்முறைப் போக்கை ஏற்றுக் கொள்வதில்லை'' என்று விளக்கம் கூறினார்.

தமிழக இஸ்லாமிய மக்களை நிதானத்துடன் சிந்தித்து, வழி நடத்திச் செல்ல அறிவார்ந்த தலைவர்கள் இரண்டு பேர் சமீப காலம் வரை இருந்தார்கள். ஒருவர் அப்துல் சமது; இன்னொருவர் அப்துல் லத்தீப். இன்று இருவருமே நம்மிடையே இல்லை. தமிழக இஸ்லாமியர்களை வழி நடத்திச் செல்ல சான்றாண்மை மிக்க தலைவர்கள் இல்லாமல் ஒரு வெற்றிடம் ஏற்பட்டிருக்கிறது!

- கௌதம்

எல்லாம் ஒரு
நேரந்தான்...!

ஜோதிட திலகம்
ஜோக்காண்டி
சிலை திறப்பு:
மாண்புமிகு புரட்சித்தலைவி
13.12.2001




2001 டிசம்பர் 30
விஷு மார்கழி 15
மலர் : 60
இதழ் : 22


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சட்டாம்பிள்ளை அமெரிக்கா!

உலக வர்த்தக மையம் செப்டெம்பர் பதினோராம் தேதியன்று தாக்கப்பட்டபோது, அமெரிக்கா அதிர்ந்தது; அந்த அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்கு முன்பாகவே ஒஸாமாவுக்கு எதிராக உலகின் ஒட்டுமொத்த கண்டனத்தைத் திரட்டும் முயற்சியில் அந்நாடு இறங்கி விட்டது.

ஆனால், மூன்று மாதங்கள் சென்று இந்திய பாராளுமன்ற வளாகத்தில் பயங்கரவாதிகள் நுழைந்து நாசவேலையில் ஈடுபட முயற்சி செய்தபோது, அதே அமெரிக்கா, 'இந்தியா அடக்கி வாசிக்க வேண்டும்' என்று சட்டாம்பிள்ளைத்தனமாக அறிவுரை கூறியது!

செப்டெம்பர் 11 சம்பவத்தையொட்டி வெளியிடப்பட்ட அமெரிக்க அறிக்கைகளுள் ஒன்று, உலகின் பல 'விடுதலைப் போராட்ட' அமைப்புகளைப் பயங்கரவாத அமைப்புகளாக அறிவித்தது. லஷ்கர் இ தொய்பா, ஜெய்ஷ் இ முகம்மது ஆகிய இரு அமைப்புகளும் முதலில் அப் பட்டியலில் இடம்பெற்றிருந்தன. இந்தோ - பாக் எல்லையில் இயங்கும் அமைப்புகள் இவை. பாகிஸ்தானின் மறைமுக ஆதரவும் ஆசியும் பெற்றவை. பயங்கரவாதப் பட்டியலில் இவை இடம்பெறுவதாகச் செய்தி வந்த மறுநாளே அமெரிக்க செக்ரடரி ஆஃப் ஸ்டேட் அச் செய்தியை ஆணித்தரமாக மறுத்தார். 'அவ்வமைப்புகளை அறிவிப்புப் பட்டியலில் இன்னும் சேர்க்கவில்லை; முடிவு இன்னும் யோசனை நிலையிலேயேதான் இருக்கிறது என்றும் விளக்கம் அளித்தார்.




இன்று... அதே இரு அமைப்புகள்தான் டிசம்பர் 13 அன்று இந்தியாவின் மேலாண்மைக்கு அபாயம் ஏற்படுத்த முயன்றிருக்கின்றன. இந்த உண்மையை ஆதாரங்களோடு வெளியிட்டிருக்கிறது இந்திய அரசு.

இவ்வளவு நடந்த பிறகும் அமெரிக்கா அவ்விரு அமைப்புகளையோ அவற்றை ஆதரித்து வளர்க்கும் பாகிஸ்தானையோ எதிர்த்து கண்டனம் தெரிவிக்கவில்லை. மாறாக, இந்தியா அவசரப்பட்டுத் தாக்குதலில் இறங்கிவிடக் கூடாது என்று எச்சரித்தது. சம்பவம் நடந்து முடிந்து ஒரு வாரம் ஆன பிறகுதான் ஆர அமர லஷ்கர் அமைப்பின் நிதி ஆதாரங்களைக் கைப்பற்றுவதாக மட்டும் அறிவித்திருக்கிறது. பாகிஸ்தானுக்கு எதிராக அவ்வமைப்பு செயல்பட்டதாகவும் இந்தோ-பாக் உறவுகளைக் குலைத்ததாகவும் காரணம் கூறப்பட்டிருக்கிறது! பாக் ஆசியுடன் லஷ்கர் வளர்ந்து செயல்படுவது கண்டனத்துக்கு உள்ளாகவில்லை.

ஜனநாயகத்தை மதியாத சிறிய நாடு பாகிஸ்தான். தாலிபானுடன் அது கொண்டுள்ள கள்ளத்தொடர்பு ஊரறிந்த ரகசியம். அவ்வாறிருக்க பாகிஸ்தானை நம்பி இந்தியாவைக் கைவிடுகிற அமெரிக்கா, அபாயத்தை ரத்தினக் கம்பளம் விரித்து வரவேற்கிறது.

அது மட்டுமல்ல; உலகமயமாக்கலையும் நுகர்வோர் சார்ந்த பொருளாதாரத்தையும் ஏற்று, உலகோடு ஒத்துவாழ தனது கதவுகளைத் திறந்துவிட்டிருக்கும் இந்தியாவின் தகுதியையும் ஆற்றலையும் மிகவும் குறைத்து மதிப்பிட்டு, கையைச் சுட்டுக் கொள்ளப் போகிறது.

பாகிஸ்தானின் ராணுவ ஆட்சி காரணமாகவும் அந்நாட்டின் பூகோள ரீதியான அமைப்பு தருகிற வசதிகள், தொடர்புகள் காரணமாகவும் அமெரிக்காவின் பிரம்மாண்டமான ஆயுத உற்பத்திக்கு நல்லதொரு சந்தை அங்கே கிடைக்கக் கூடும். அதற்காக, பாகிஸ்தானின் தவறுகளைக் கண்டுகொள்ளாமல் இருப்பது பாம்புக்குப் பால்வார்க்கும் கதையாகவே முடியும்.

உலகின் மிகப் பெரிய ஜனநாயக நாடு இந்தியா. ஜனநாயகத்தில் நம்பிக்கை உள்ள அமெரிக்கா, இந்தியாவை ஆதரிப்பதற்கு இந்த ஒரு காரணமே போதும். இந்தியாவின் நுகர்வோர்




சந்தையை நம்பி அமெரிக்காவில் நிறைய உற்பத்தி ஆகிறது என்கிற மற்றொரு காரணமும் இருக்கிறது.

டிசம்பர் 13 தாக்குதலைத் தொடர்ந்து ஆலோசனை ஆராய்ச்சிகளில் இறங்கும் முன்னரே, எல்லைப் பகுதியிலுள்ள பயங்கரவாத அமைப்புக் கூடாரங்களைத் தாக்கி தரைமட்டமாக்கும் உத்தரவை இந்தியத் தலைமை பிறப்பித்திருக்க வேண்டும்.

இந்த நடவடிக்கையினால் உலக நாடுகளின் கண்டனம் எழுந்திருக்கக் கூடும்; ஆனால் நமது தாக்குதல் தற்காப்பு நடவடிக்கையே என்பதால் நிச்சயமாக அதில் நியாயம் இருந்திருக்கும். ஓர் அரிய வாய்ப்பு கைநழுவிப் போய்விட்டது. தாமதிப்பதாலேயே பல காரியங்கள் கெட்டு விடுகின்றன.

ஒஸாமா பின் லேடன் ஒருவனைக் குறிவைத்து ஆஃப்கான் சிவிலியன்கள் ஆயிரக் கணக்கானோரை அமெரிக்க விமான குண்டுகள் கொன்று குவித்தன. தரை யுத்தத்தை, வடக்குக் கூட்டணி வீரர்களைக் கொண்டு, தனக்கு அதிக சேதமின்றி, தந்திரமாக நடத்திக் கொண்டிருக்கிறது அமெரிக்கா.

இந்தியா மட்டும் ஐ.நா. சபையின் பாதுகாப்பு கவுன்சிலில் ஆதாரங்களை முன் வைத்து உலக நாடுகளின் ஆதரவைத் திரட்ட வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது!

அஹிம்சையிலும் அமைதியிலும் சாத்வீகப் போராட்டத்திலும் நம்பிக்கையுடைய நாடுதான் நம்முடையது. ஆனால் நாட்டின் தலைவர்கள் அத்தனை பேருக்கும் ஒட்டுமொத்தமாகக் குறிவைக்கப்படுகிறபோது தற்காத்துக் கொள்ளும் உரிமை நமக்கு இருக்கிறது. மீண்டும் அந்த அபாயம் ஏற்படாமல் பயங்கரவாதத்தை ஒழிக்கும் உரிமை இருக்கிறது.

இந்த உரிமையை நமக்கு அமெரிக்க அரசு வழங்க வேண்டியதில்லை. அதை எப்போது பிரயோகிக்க வேண்டும் என்று அமெரிக்கா நமக்குக் கற்றுத்தரவும் தேவையில்லை! ○

"அப்பா.. அதுக்கு நான் பதில் சொல்றேன்."

"சொல்லு பார்க்கலாம்."

"The answer is: It is a Challange"

"ஓகே..கணேஷ் டோன்ட் ச்சேஞ்ச் தி ஆன்சர். அமிர்தா உன்னுடைய பதில் என்ன?"

"ஐ திங்க் இட்ஸ் அட்ஜஸ்ட்மென்ட்."

"இரண்டு பதிலும் ஒகே தான். உன் பதில் என்ன, லலிதா?

"என்னங்க இது... பிள்ளைங்களோடயே விளையாடுங்க."

"வாட்...? இது விளையாட்டா? கமான் இட்ஸ் சீரியஸ். வாட்ஸ் யோர் ஆன்சர்?.."

"ம்...மை ஆன்சர்... இட்ஸ் அ லாங் ஜேர்னி."

"வெரிகுட்."

'வெரிகுட்டெல்லாம் சரி. உங்க பதில் என்ன?" என்றனர் 3 பேரும் கோரஸாக.

"I think it is sharing. Life is Sharing."

"எப்படிப்பா? என்றான் கணேஷ்...

"Grammar ஏ சரியில்லை'' என்றாள் அமிர்தா.

''ஆம்னி பஸ் ஆர்ம்ஸ் ரெஸ்ட்டிலிருந்து, சிட்டி பஸ்ஸில் ஸ்டாண்டிங்கில் மேலே கம்பியைப் பிடிக்க மற்றவர்களுக்கு நாலு விரற்கடை gap கொடுப்பது வரை, சின்னச் சின்ன வீட்டு சௌகரியங்களிலிருந்து, சொத்துப் பிரிக்கும் சோக நிலை வரை, யூ ஷூட் பி வில்லிங் ட்டு ஷேர். Life is Sharing தான்."

"ஓகேப்பா. அக்ரீட். அடுத்த கேள்வி கேளுங்க."

பேட்டி எடுக்க வந்த நான் மேற்கண்ட வித்தியாசமான குடும்ப உரையாடலைத் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தேன். அம்மா, அப்பா, மகள், மகன் நாலு பேரும் 'what is Life?' என்கிற கேள்விக்கான யுனீக் ஆன்சருக்காகப் போடும் போட்டியை பார்த்து முகமன் இல்லாத பாராட்டுப் புன்னகை வந்தது எனக்கு.

இந்த உரையாடலின் 'அப்பா', நம்முடைய பகல்லா ரோடு ஸ்வர்ணாலயா ஜுவல்லரி சுகுமாரன் தான்!! கடையை இரவு

# வைரக்கல் இலவசம்
# கொடைக்கானல் இலவசம்

மூடிய பின் பேசிக் கொண்டிருந்தார்கள். நேரம் இரவு 8.30. இன்னும் உட்கார்ந்து கேட்க ஆசைதான். குறுக்கிட யத்தனிப்பதற்குள்...

"ஓகே. அடுத்த கேள்வி: வாழ்க்கையில் தொடர்ந்து எதை மெயின்ட்டெயின் பண்ணுவது ரொம்பக் கஷ்டம்?" பட்டென்று அடித்தாள் அமிர்தா, "பொய் சொல்லுவதை!"



நானும் தொடர்ந்து வந்த குபீர் சிரிப்பில் கலந்தேன்.

நிமிர்ந்து பார்த்தார் சுகுமாரன்.

''அடடே நீங்களா? வாங்கரங்ஸ்'' என்றார் என்னைப் பார்த்து. அப்படித்தான் அழைப்பார். "சார். மறக்க முடியாத அனுபவம் சார்'' என்றேன்.

"இன்னும் மறக்க முடியாமல் பண்ணு கிறேன்... உங்களுக்கும் ஒரு கேள்வி...!"

''சார்...! (எனக்கு நேரம் சரியில்லை) அலறினேன்.

"Simple கேள்வி தான்...!"

"சார் உங்க சிம்பிளின் லெவலைதான் பார்த் துக்கிட்டிருந்தேனே?"

"ஓகே What is Sale? What is Marketing?" (ஆன்சர் தரணும். அதி லும் யுனீக்... என் மூளைங்கிற hard disc-ஐ மின்னல் வேகத்தில் சலித்துப் பார்க்க ஆரம் பித்தேன்.)

''ரங்ஸ்! டோன்ட் வொரி, நானே சொல் றேன்...'' (என் குல தெய்வம்தான் தலை யிட்டிருக்க வேண்டும்.)



"Sale is a Sale... Marketing is repeat Sales எப்படி? சரியா?'' என்றார் திரு. சுகுமாரன். (மை காட்!! பின்னாடி யூஸ் பண்ண, மனப்பாடம் செய்து கொண்டேன்.)

"சூப்பர், சார் நான் வந்தது...!"

''சொல்லுங்க'' என்றவர் அடுத்து கணேஷிடம் "பதில் ரெடியா?" என்றார். வந்தது பதில்.

1. அமிர்தா: "கேரக்டர்" 2. கணேஷ்: "பிஹேவியரல் பாலிஷ்" 3 லலிதா: "வசதி யிலும் எளிமை."

''எக்ஸலண்ட்! மை ஆன்சர் ஈஸ் : ஹெல்தி ஹியூமன் ரிலேஷன்ஷிப். அதுதான் most difficult to maintain" என்றவர் திரும்பி என்னைப் பார்த்து "சாரி... they are my best companions"

"புரியுது சார். சரி நியூ இயர் சேல்ஸ் உண்டு தானே?"

"உண்டு. கட்டாயம் உண்டு. 21 டிசம்பர் 2001 முதல் 4 ஜனவரி 2002 வரை."

"அதில் என்ன புதுமையான ஆஃபர்?"

''நான் புதுமையைத் துரத்துகிறேனா அல்லது புதுமை என்னைத் துரத்து கிறதான்னு தெரியலை. ஓகே! வழக்கமான எல்லாரும் அறிந்த கூலி இல்லை. சாதாரண கற்களுக்கு விலை இல்லை. ரூபி எமரால்டு விலையில் 10%- டயமன் விலையில் ரூ. 2000- காரட்டுக்குத் தள்ளுபடி என்பதெல்லாம் உண்டு. அது போக..."

"அது போக...?"

''டயமன் செட் வாங்குகிறவர்களுக்கு ஒரு வைரக்கல் இலவசம்."

"சார்?!?!"

''யெஸ். பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் வாங்கு பவர்களுக்கு 3 நாள் கொடைக்கானல் இலவசமாய்த் தங்கும் பரிசு."

"அப்புறம்?"

"ரூபி எமரால்டு செட் வாங்கினால் ஒரு ரூபி அல்லது எமரால்டு மோதி ரம் அதில் உள்ள தங்கத் துடன் இலவசம். எல்லோ ருக்கும் ஒரு Happy New Year Compliments Bag ம் உண்டு. வாடிக்கை யாளரது பழைய நகைகளுக்கும் நாங்கள் விற்கும் புதிய நகைகளுக்கும் ஒரே ரேட்தான் தரப்போகிறோம்."

'இது போதும் சார். கலக்கிடுறேன் சார்'' என்று அந்த யுனீக் குடும்பத்திடம் விடை பெற்றுப் பறந்தேன்.


SWARNALAYA

S

Jewellery

5, பசுல்லா ரோடு,
தி. நகர்,
சென்னை — 17.
போன்: 8231986,
8231987, 8241201,
Cell : 9841035305

advt.

முருகன் என்றதுமே அழகின் உருவம் மனத்தில் தோன்றும். வயலூர் என்றதுமே வாரியார் சுவாமிகள் ஞாபகம் வரும். "எல்லாம் வல்ல வயலூர் முருகன் அருளாலே..." என்று அவர் தமது வெண்கலக் குரலில் உபன்யாசத்தை ஆரம்பிப்பது மனச் செவியில் கேட்கும். முருகனுக்குப் புகழ் சேர்க்க

# குமார வயலூர் குமரன்

ஓர் அடியார் அவசியமில்லை தான். ஆனால் ஒரு தலத்துக்கு உரிய பெருமையை உலகறியச் செய்ய உகந்ததொரு பாத்திரம் தேவைப்படவே செய்கிறது. அவ்வாறு வயலூரரின் சிறப்புகளைச் சொல்லி சொல்லி மகிழ்ந்தவர், முருகனின் கட்டளையை ஏற்று, அத் திருத்தலத்துக்குப் பிரமாதமாக கும்பாபிஷேகம் செய்து வைத்து, தமிழகத்தின் ஆன்மிக வரைபடத்தில் பிரகாசமானதொரு இடத்தைப் பிடித்துக் கொடுத்தவர் வாரியார் சுவாமிகள். தமிழிலும் தமிழ் மணக்கும் திருப்புகழிலும் தோய்ந்த அவருக்கு, வயலூர் முருகன் பிரத்யேக அருள் சொரிந்த கடவுள்.

இன்று விரோத பாவம் பெருகி உலகில் எங்கும் வன்முறையும் கொடூரக் கொலைகளும் நிகழக் காண்கிறோம். உலகில் உள்ள எல்லா உயிர்களுமே பரம்பொருளின் வடிவம் என்ற இதய பாவனை உண்டானால் இந்த விரோதமெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய் விடாதோ!

இந்த மனப் பக்குவத்தைத்தான் தமக்கு அருளும்படி முருகனிடம் வேண்டுகிறார் அருணகிரிநாதர்:

**எமனை மோதி யாகாச கமன மாம**
**னோபாவ**
**மெனிது சால மேலாக வுரையாடும்**
**எனதி யானும் வேறாகி எவரும் யாதும்**
**யானாகும்**
**இதய பாவ னாதீத மருள்வாயே**



எவரும் யாதும் யானாகும் இதய பாவம் வந்துவிட்டால் விரோதமென்பது ஏது?

இந்த உயர்சிந்தனை பதினைந்தாம் நூற்றாண்டிலேயே அருணகிரிநாதருக்குள் உதித்து அவரை உயர்த்தியிருக்கிறது.

எவரும் யாதும் யானானபின் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்றுதானே வாழ முடியும். புறப்பட்டார் தலம் தலமாக, முருகனைச் சந்தத்தமிழால் போற்றிப் போற்றி மகிழ்ந்தார். அப்படியே அந்தந்த தலங்களின மூர்த்தி, தீர்த்த சிறப்புகளை அப்பாக்களில் பொதித்துப் பொதித்தும் வைத்தார்.

தமிழில், ஏன்... உலகிலேயே இதுபோல் வேறில்லை என்னும் அளவுக்கு, வந்தது வராத சந்த வேறுபாடுகளைக் காட்டி, பொழுது புலர்வதுபோன்ற சௌலப்பியத்

குருஜி ஏ.எஸ்.ராகவன்



யில் அருணகிரிநாதரை முருகன் தடுத்தாட்கொண்டு திருப்புகழ் பாடும்படி பணித்தான் என்பர். 'முத்தைத்தரு' என்று அடி எடுத்துக் கொடுத்ததாகவும் சொல்வார்கள். அதன் பிறகு நிஷ்டையில் ஆழ்ந்துவிட்ட அருணகிரி நாதரை "வயலூருக்கு வா!" என்று முருகனே அழைத்திருக்கிறார். அழைப்பை ஆணையாக ஏற்று அடியவர் செல்லவும், முருகன் ஒரு திருமுகமும் நான்கு கரங்களுமாக மயில்மேல் காட்சி தந்து.

"உன்னைத் திருப்புகழ் பாடக் கட்டளை யிட்டேனே... ஏன் பாடவில்லை?" என்றும் கேட்டிருக்கிறார்.

அருணகிரிநாதர், "திருப்புகழ் பாடும் வன்மை கிடைத்தது ஆனால் எவ்வாறு பாடவேண்டும் என்று தன்மை கிடைக்க வில்லையே!" என்று முருகனிடமே திரும்பக் கேட்க, "மயிலையும் கடப்ப மலர் மாலை யையும் வேலையும் சேவல் கொடியையும் திருவடியையும் பன்னிரு தோள்களையும் இந்த வயலூரரையும் வைத்துப் பாடு" என்று ஆண்டவன் அடியாருக்குப் பாடம் நடத்த

**பக்கரை விசித்ரமணி**
**பொற்கலனை யிட்டநடை**
**பட்சியெனு முக் ரதுர கமுநீபப்**
**பக்குவமலர்த் தொடையும்**
**அக்குவடு பட்டொழிய**
**பட்டுருவ விட்டருள்கை**
**வடிவேலும்**

என்று பாடல் பிறந்திருக்கிறது. நாமும் அருணகிரி நாதர் சென்ற பாதையில் வயலூர் செல்வோம். பாடல் பிறந்துவிடாது என்றாலும் முருகனின் தரிசனம் வாய்க்கும்!



• அருணகிரிநாதர்

துடன் எவ்வாறு பாடினார் என்று சிந்தித்தால் மலைத்துப் போவோம்.

ஆனால் அந்த மலைப்பிலிருந்து விடுபட்டு நாம் வயலூர் செல்வது அதி முக்கியமாகிறது. காரணம், விராலி மலையில் பார்த்த அருணகிரிநாதரை, "வயலூருக்கு வா" என்று முருகனே உபசரித்து அழைத்துக் கொண்ட பெருமைக்குரிய தலம்.

***(விராலி மாமலையில் நிற்ப நீகருதி உற்று வாவென் றழைத்து...)***

இன்னொரு கதையும் உண்டு... திருவண்ணாமலை



• தட்சிணாமூர்த்தி

திருச்சியிலிருந்து மேற்கே ஏழு மைல் தொலைவில் உள்ளது வயலூர். குமார வயலூர், ஆதிவயலூர், அக்னீஸ்வரம் என்று அழகழகான பெயர்கள் இதற்கு. வயல்களும் தென்னஞ்சோலைகளும் சூழப்பெற்று அழகின் நடுவே கொலுவிருக்கிறான் அழகன் முருகன்.

கோயிலுக்கு எதிரே உள்ள குளம் ஆறுமுகப் பெரு

மானின் வேலினால் தோற்றுவிக்கப்பட்ட தாகக் கருதப்படுகிறது. குமார தீர்த்தம், சக்தி தீர்த்தம், அக்னி தீர்த்தம் என்று ஊரைப் போலவே குளத்துக்கும் பல பெயர்கள்.

சதாசிவக் குடும்பமே இத்தலத்தில் தனித்தனி சன்னிதிகளில் விளங்கி அருள் பாலிக்கிறது – சிவன், சக்தி, வினாயகர், முருகன்! ஆதிநாதர் அல்லது அக்னீஸ்வரர் என்று சிவனுக்குப் பெயர். அண்டிய அடியவர்களை மறக்காமல் காப்பாற்றும் சிறப்புடையவன் என்பதால் மறப்பிலி நாதன் என்றும் பெயர். அம்பிகை ஆதி நாயகி.



• ஆதிநாயகர்

ஆதி நாதரும் ஆதி நாயகியும் உறையும் ஆதிவயலூருக்குச் சித்தர்கள் தேடி வந்து வழிபட்டிருக்கிறார்கள். கோயிலை ஒட்டினாற் போல் சித்தர்தோப்பு என்றே ஓர் இடம் இருக்கிறது.

ஒற்றைப் பிராகாரம்தான். ஸ்தல விருக்ஷமான வன்னி மரம் பிரதான வாயிலையொட்டி தெற்கு பாகத்தில் இருக்கிறது. ஐந்து நிலை ராஜகோபுரம் வழியே உள்ளே சென்றால், முன்னறி தெய்வங்களாக அன்னையும் பிதாவும் முதலில் காட்சியளிக்கிறார்கள். 'குமாரன் திருவடி கைத்தொழுவாயே என்ற பாடல் ஞாபகம் வருகிறது...

*'அம்பிகை சம்புகுமாரன்*
*முத்தாரன் சிங்காரன்*
*திருவடி கைத் தொழுவாயே...'*

வள்ளி தேவசேனா சமேதராகக் காட்சி தரும் முருகப் பெருமான் தவிர, சண்டிகேஸ்வரர், மஹாலக்ஷ்மி, பொய்யாகணபதி, அருணகிரிநாதர் சந்நிதிகளும் இருக்கின்றன. உற்சவரான நடராஜர் இத்தலத்தில் நடமிடாத ராஜராக இரு கால்களையும் பீடத்தில் ஊன்றி நிற்கிறார். சுற்றி அரவணைத்துத் திருவாசி இல்லை. இதனை சுந்தர தாண்டவம் என்கிறார்கள்.

மூலவரைப் பாருங்கள் - பால் வடியும் முகம். பக்தர்களைத் தன்பால் ஈர்க்கும் தோற்றம்; முற்றுணர்ந்த முல்லைச் சிரிப்பில் இலேசாய் விரியும் அதரம்... இருபுறத்திலும் தேவி மார் அலங்காரிகளாக நிற்கின்றனர்.



• ஆதிநாயகி

*மங்கை தெய்வானை வள்ளி மணாளன்*
*காங்கேயன் மயில் தீனதயாளன்*
*மங்கள ரூபன் மாயோன் மருகன்*
*திவ்ய சுந்தராகார குமாரன்*
*திருவடி கைத் தொழுவாயே...*

– டி.கே. பட்டம்மாளின் இளமைக் கால இசைத்தட்டில் பரிவான பாபநாசம் சிவன்



பாடல் தொடர்ந்து ஒலிக்கிறது.

இத் தலத்தில் மூலவருக்கு நிகரான சிறப்புடன் அம்மன் சந்நிதி தூணில் ஒரு முத்துக் குமாரசுவாமி இருக்கிறார். மயில் மீது அமர்ந்த கோலத்தில், ஒரு முகமும் நான்கு கரங்களுமாகப் பறந்து புறப்பட்டு வந்து நம் கலி தீர்க்கக் காத்திருப்பது போன்ற தோற்றம். இந்த முத்துக்குமாரசுவாமிக்குத் தினசரி பூஜை உண்டு.

திருப்புகழைப் பாடும் தன்மையை வயலூர் முருகனே அருளினான் என்பதால் அருணகிரி நாதருக்கு இந்த க்ஷேத்திரத்தில் விசேஷ ஈடுபாடு. இத்தலம் குறித்து, எழுபத்து நான்கு சீர்கொண்ட மிகப்பெரிய திருப்புகழை அவர் பாடியிருக்கிறார். வயலூர் பற்றி அவர் இயற்றிய பதினெட்டு திருப்புகழ் பாடல்கள் உள்ளன. தவிர, வயலூர் அல்லாத வேறு முப்பத்தைந்து தலங்கள் பற்றிய பாடல்களில் ஐம்பத்தைந்து இடங்களில் வயலூர்ச் சிறப்பைப் பாடியிருக்கிறார்:

காவேரி சூழும் குளிர் வயலூர், திரிசிரகிரி அயல் வயலி, அதிமோகர வயலூர், வயற்பதி, செய்ப்பதி என்று விதவிதமாகப் புகழ்ந்து பாடியிருக்கிறார்.

எல்லாவற்றினும் மனோகரமான வர்ணனை 'நாத விந்து கலாதி'யில் இடம் பெறுவதாகச் சொல்லலாம்:

***ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை***
***சோழ மண்டல மீதே மனோகர ராஜ***
***கம்பீர நாடாளு நாயக, வயலூரா...!***

என்று செழிப்பும் சிறப்பும் தெய்வீகமும் மணக்க, சந்தத்தையும் சொல்லையும் யாத்திருக்கிறார்.

எங்கு சென்றாலும் அவர் வயலூரை மறக்கவில்லை என்பது தெளிவு. நாம் மட்டும் மறந்துவிடலாமா! நம்மை மறக்கவிடாமல் வயலூரானே ஆட்கொண்டு அருள்வான் என்பதும் அருணகிரிநாதரின் தீர்மானம்:

***என்னால் பிறக்கவும் என்னா லிறக்கவும்***
***என்னால் துதிக்கவும் கண்களாலே***
***என்னா லழைக்கவும் என்னால் நடக்கவும்***
***என்னா லிருக்கவும் பெண்டிர்வீடு***
***என்னால் சுகிக்கவும் என்னால் முசிக்கவும்***
***என்னால் சலிக்கவும் தொந்த நோயே***
***என்னா லெரிக்கவும் என்னால் நினைக்கவும்***
***என்னால் தரிக்கவும் இங்குநானார்***
***கன்னா குரித்தஎன் மன்னா எனக்கு நல்***
***கர்ணா மிர்தப்பதம் தந்தகோவே...***

... ... ... ... ... ... ... ... ...

***மன்னா குறத்தியின் மன்னா வயற்பதி***
***மன்னா மூவருக்கொரு தம்பிரானே***

என்று வயற்பதியானைப் பாடியிருக்கிறார்.

'நான் பிறப்பதற்கும் இறப்பதற்கும் துதிப்பதற்கும் கண்களால் ஒருவரை அழைப்பதற்கும் கால்களால் நடப்பதற்கும் ஓரிடத்தில் இருப்பதற்கும் சிற்றின்பங்களை அனுபவிப்பதற்கும் சலிப்படைவதற்கும் வினைச் செயல்களினால் வரும் நோய்களை எரிப்பதற்கும் பல நினைவுகளை நினைப்பதற்கும் இன்ப துன்பங்களைத் தாங்குவதற்கும் நான் யார் முருகா...? என்னால் ஆவது ஒன்றும் இல்லை. எல்லாம் உன் செயல்களாகவே நடைபெறுகின்றன' என்கிற உண்மையை இந்தத் திருப்புகழ் நம் மனத்தில் பதியச் செய்கிறது.

இத்தனை விஷயங்களை நடத்தி வைக்கிறவன், அவனைப் பற்றிய நினைவில் நம்மை நிறைக்கும் நல்ல காரியத்தையும் செய்தருள மாட்டானா!

**(அடுத்த வாரம் : பழமுதிர் சோலை முருகன்)**

# BOSCH

சமீபத்திய திமுர் பட்ஜெட்டினால் பாதிப்பு யாருக்கு இருக்கிறதோ இல்லையோ நம்மைப் போன்ற சாதாரண மத்தியத்தரக் குடும்ப சகோதரிகளுக்கு அது பெரும் அதிர்ச்சிதான். உடனே, பிரசவ வைராக்கியம் போல, "நாம் இனி ஒருவேளைதான் காபி சாப்பிடணும், அநாவசியமாக லைட், ஃபேன் எல்லாம் போடக்கூடாது" என



## கரண்ட் பில் கையைக் கடிக்குதா? கவலை வேண்டாம்...!

நம்மில் பலர் நினைக்கக் கூடும். இது சில நாளைக்குத்தான். பிறகு 'சே, ஒரே டென்ஷன்; காபி சாப்பிட்டாலென்ன... ஃபேனை ஃபுல்லில் வைங்க...' என 'பழைய குருடி கதவைத் திறடி' சமாச்சாரம்தான். நாம் சிக்கனத்தைக் கடைப் பிடித்தால் மேற்கண்ட எந்த ஒரு சிச்சுவேஷனையும் மிக எளிதாக சமாளிக்கலாம்- உதாரணத்திற்கு BOSCH FULLY AUTOMATIC GAS INSTANT WATER HEATERSஐ எடுத்துக் கோங்களேன்- இது முழுக்க முழுக்க ஒரு ஜெர்மன் தயாரிப்பு! நம் வீட்டு சமையலுக்கு உபயோகப்படும் கேஸ் சிலிண்டர் மூலம் மிக எளிதாகவும் உடனேயும் முக்கியமாக மிக மிகச் சிக்கனமாகவும் நம் தேவைக்கு ஏற்ப சூடான வெந்நீர் பெறலாம்! இது சம்பந்தமாக BOSCH தயாரிப்புகளின் தமிழக டிஸ்ட்ரிபியூட்டரைச் சேர்ந்த CHIEF EXECUTIVE திரு. செல்லப்பா அவர்களிடம் கேட்டபோது "மற்ற நாட்டு தயாரிப்புகள் போல 'USE & THROW' மாதிரி இல்லாமல் LONG STANDல் காலம் பூராவும் நம் குடும்பத்தின் ஒரு அங்கமாக நமக்கு சுடச்சுட வெந்நீர் தயாரிக்க ஜெர்மனி நாட்டுத் தயாரிப்பான BOSCH வாட்டர் ஹீட்டர் உருவாக்கப்பட்டிருக்கிறது. உங்கள் தேவை எவ்வளவு இருந்தாலும் 5 முதல் 8 லிட்டர் வரை ஒரே ஒரு நிமிடத்திற்குள் சுடச்சுட வெந்நீர் ரெடி! எந்தவித மாமியாரையும் எளிதில் CONVINCE செய்து விடலாம்! செலவைப் பற்றி? மூச்! ஒரு பக்கெட் நிறைய சுடு தண்ணீருக்கு நீங்கள் செலவு செய்வது வெறும் 0.45 பைசாதான். அதாவது நான்கு பேர் உள்ள ஒரு குடும்பத்திற்கு தினமும் அவர்கள் வெந்நீர் உபயோகிக்கும் பட்சத்தில் ஒரு கேஸ் சிலிண்டரானது அவர்களுக்கு குறைந்து இரண்டரை மாதங்களுக்காவது வரும்!

மின்சாரத்தை கம்பேர் பண்ணும்போது இது மிக மிக சீப்! வரப்போகும் கரெண்ட் பில்லை நினைத்துக் கொண்டே குளிக்க வேண்டாம்! மேலும் SHORT CIRCUIT, ஷாக் அடிக்குமே என்ற பயமுமில்லை. யார் வேண்டுமானாலும் மிக எளிதில் இதை OPERATE பண்ணலாம்! இடத்தையும் அடைத்துக் கொள்ளாது. அவ்வளவு அடக்கம்! இன்றைய அவசர நாகரீக உலகத்தில் நேர்மையான, சிக்கனமான உபயோகமான பொருள் ஒன்று உண்டென்றால் அது BOSCHஐ தவிர வேறெது? உங்கள் ரசனைக்கேற்ப மூன்று வெவ்வேறு மாடல்களில் நியாயமான விலையில் கிடைக்கிறது.

மேலும் விவரங்களுக்கும், வியாபார விசாரணைகளுக்கும் நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: VIGNESHWAR ENTERPRISES, No. (21) 14, Jayalakshmipuram 1st Street, Nungambakkam, Chennai-600 034. Ph: 91-044-825 5565. E-mail: vigneshwar@vsnl.net

---

இது ஒரு 'Lady Entrepreneur' மூலம் promote செய்யப்படும் நிறுவனம்.

Advt

ஆர்த்ரைடிஸ்' என்றால் 'வீங்கிய மூட்டு' என்று பொருள். கால்மூட்டுக்களில் வலி, வீக்கம் இரண்டுமிருக்கும். இந்த வீக்கம் நரியின் தலை போல இருப்பதால், சித்த மருத்துவத்தில், 'நரித்தலை வாயு' என்றே சொல்கிறார்கள். ஆர்த்ரைடிஸ், ரூமாட்டிஸத்தின் ஒரு வகையே!

உடல் பருத்தல், ஆர்த்ரைட்டிஸ் இரண்டுமே உடலில் ஏற்படும் கழிவுப் பொருட்களின் சேர்க்கையால் ஏற்படுகிறது. அஜீரணம், மலச்சிக்கல் போன்ற கோளாறுகள் இலேசாக பச்சைக் கொடி காட்டத் தொடங்கியதுமே, உடலில் உள்ள எல்லாத் திசுக்களிலும் அமிலச் சுரப்பு அதிகமாகிறது. 'யூரிக் அமிலம்' ஏற ஏற, வாய்வுத் தொல்லை வாட்டி எடுக்கிறது. இறுதியில் 'ஆர்த்ரைட்டிஸ்' என்ற நாம காரணம் சூட்டப்பட்டு நீடித்த வியாதியாகிறது.

**இந்த வார யோகா மொழி**

இடைத்தீனி இடையைப் பெருக்கும்.

பழங்கால வைத்தியர்கள் இருவிதமான முறையில் உடல் சுத்திகரிப்பு முறையைக் கையாண்டார்கள்.

1) பேதி மருந்துகளின் மூலம் கழிவைக் கீழ் நோக்கி சுத்தம் செய்தல்.

2) வாந்தி எடுக்கவைப்பதன் மூலம் மேல் நோக்கிச் சுத்திகரித்தல்.

தொப்புள் ஸ்தானத்திலிருந்து கால்கட்டை விரல் வரை வாத தோஷம் (காற்று தத்துவம்) உள்ளது. அது மலத்தில் அடங்கும். பேதியில் மறையும்.

தொப்புள் ஸ்தானத்திலிருந்து மார்பு இருதயம் வரை, பித்த தோஷம் (நெருப்பு தத்துவம்) உள்ளது. அது சிறுநீரில் அடங்கும். வாந்தி எடுப்பதால் மறையும்.

இருதய ஸ்தானத்திலிருந்து உச்சந்தலை வரை சிலேத்தும தோஷம் (நீர் தத்துவம்) உள்ளது. அது ஆண்களுக்கு விந்துவிலும் பெண்களுக்கு 'சுரோணிதத்'திலும் அடங்கும். அது தவறாது தலைக்கு மூழ்கும் தைல ஸ்நானம் மற்றும் பிரம்மசரிய கட்டுப்பாட்டில் மறையும். இந்த மூன்று வகையாலும் சுத்தம் செய்து கொண்டால், எமனையே வெல்லலாம் என்கிறார் அகத்தியர்.

காரம், துவர்ப்பு, கசப்பு ஆகியவற்றை அளவுக்கு மீறி சாப்பிடுவதாலும், ஆறிப்போன உணவை உண்பதாலும், அடிக்கடி பட்டினி இருப்பதாலும், அதிகமான பளுவைச் சுமப்பதாலும், பகலில் படுத்து உறங்குவதாலும், இரவில் கண் விழித்து வேலை செய்வதாலும், வாத நோய்கள் ஏற்படுகின்றன.





தொடர்ந்து, 'கோமுகாசனம்' என்னும் ஆசனத்தைச் செய்து வந்தால், முற்றிய ஆர்த்ரைடிஸ் நோய் கூட குணமாகும் என்று உத்தரவாதமே தரலாம். அந்த அளவுக்கு அற்புத பலன் தரும் உயரிய ஆசனம். பசு அமர்ந்த நிலையில்

அதன் முக அமைப்பை ஒத்திருப்ப தால் இந்தப் பெயர்.

டாக்டர் ஏ.எஸ். அசோக்குமார்

**செய்முறை:**

1) விரிப்பின் மீது கால்களை நீட்டி அமர வும்.
2) வலது காலை மடித்து வலது பாதத்தை இடது தொடையின் கீழ் வைக்கவும்.
3) இடது காலை மடித்து வலது தொடை மீது வைத்து, வலது பாதத்தை இடது தொடையின் பக்கத்தில் தரைமீது பதியும்படி வைக்கவும்.
4) நிமிர்ந்து உட்கார்ந்து இடது கையைத் தலைக்கு மேல் உயர்த்தி மடித்து, கையை முதுகுக்குப் பின்புறம் கொண்டு வந்து முதுகைத் தொடவும்.
5) வலது கையைச் சாதாரணமாகப் பின் புறம் கொண்டு வந்து, இடது கை விரல் களைப் பிடிக்க முயற்சிக்கவும்.
6) மெள்ள, முன்னால் குனிந்து முகவாய்க் கட்டை மேலுள்ள முட்டியின் மீது தொடும்படி வைத்து, இடது கை முட்டி, தரையில் படும்படி கொண்டு வரவும்.

# மூட்டுவலிக்கு முடிவு!

7) சாதாரண மூச்சில் இந்த நிலையில் கண்களை மூடி 30 எண்ணிக்கை இருக் கவும்.
8) மெதுவாக எழுந்து நிமிர்ந்து அமர்ந்து சிறிது ஓய்வு எடுக்கவும். மறுமுறை முன்னால் குனிந்து செய்யவும். இரண்டு தடவைகள் செய்தால் போதும்.
9) கைகளைப் பிரித்து, கால்களைப் பிரித்து நீட்டி அமரவும்.
10) மாற்று ஆசனமாக இடது காலை மடித்து, பின் வலது காலை மடித்து முன்பு கூறியது போல், இரண்டு தடவை செய்து முடிக்கவும்.

## கோமுகாசனம் செய்வதால் ஏற்படும் பலன்கள்

1) சுழி முனை நாடி போதிய அளவு பிராண வாயு பெறுகிறது. அதனால் ஐம்புலன்களும் சீராகின்றன.
2) மூட்டுவாத நோய் குணமாகும்.
3) மலச்சிக்கல், பசியின்மை, அஜீரணம், முதுகுவலி, கை கால்களில் ஏற்படும் வலிகள் ஆகியவற்றைப் போக்கும்.
4) 'மூலபந்தம்' எனும் பயிற்சி இதில் இயற்கையாக ஏற்படுவதால் பிராண சக்தி சேமிக்கப்படுகிறது.
5) நுரையீரல், இருதயம், மார்பு பலம் பெறுகிறது.
6) குடலிறக்கம், விரைவீக்கம், நீர் அண்டம், வாயு அண்டம் முதலிய நோய்கள் தீரும்.
7) தொடர்ந்து செய்து வந்தால், தூக்க மின்மை, கூன்முதுகு, தலைவலி நீங்கும்.
8) மூல வியாதிக்கு நல்ல ஆசனம்.
9) வலது, இடது தோள்பட்டைகளில் காணும் ஏற்றம் இறக்கம் மற்றும் இறுக் கம் ஆகியவற்றைப் போக்குகிறது.
10) நீரிழிவு நோய்க்கு அதிக பலன்தரும்.
11) இரத்த ஓட்டத்தைச் சரி செய்து, அதிக மாகச் சுரக்கும் அமிலத்தைச் சமப் படுத்துகிறது.
12) சிறுநீரகங்களுக்குப் புத்துணர்ச்சி அளித்து, மூத்திரக் கோளாறுகளைத் தடுக்கிறது.

அடுத்தவாரம் டோலாசனம், விரிக்ஷாச னம், பாத ஹஸ்தாசனம் என மூன்று ஆசனங்கள் பார்க்கலாம்.

படங்கள்: ஸ்ரீஹரி

எச்சரிக்கை: இங்கே தரப்பட்டுள்ள யோகாசன பயிற்சி முறைகள் தகவலுக்காக மட்டுமே. இவை வழிகாட்டி முறைகள் அல்ல. யோகாசன நிபுணரின் நேரடி கண்காணிப்பில்தான் பயிற்சி தொடங்க வேண்டும்.



• தி போர்ஸ்





• எம்பயர் ஸ்டேட்



# அழைத்தது அமெரிக்கா!

இறக்கை கட்டிப் பறந்து கொண்டிருந்தது ஏர் - இந்தியா ஜம்போ ஜெட் மட்டுமல்ல, என் மனசும்தான்!

இடம்: - அட்லாண்டிக் மகா சமுத்திரத்துக்கு நாற்பதாயிரம் அடி உயரே...!

'வீகலி ப்லான்டு' என்ற ஹாலிவுட் படத்தை, ஹாய்யாகப் பார்த்து முடித்து, இலேசாகக் கண் அசந்தபோது...

கல்கி - டயானா வர்ல்ட் டிராவல்ஸ் நடத்திய குவிஸ் போட்டியில் முதல் பரிசு பெற்ற ஷங்கராகிய என்னை, அமெரிக்கா அன்புடன் அழைத்ததும், அமெரிக்காவின் கிழக்குக் கரையிலிருக்கும் முக்கிய நகரங்களைப் பார்க்க நான் முடிவெடுத்ததும், மினி ஃபிளாஷ்பேக் ஆக வந்து சென்றது.

ஜே.எஃப். கே சர்வதேச விமான நிலையம்... நியூயார்க் நகரம்.

''அமெரிக்கா வந்திருக்கும் காரணம்?''

''சுற்றுலா.''

இமிகிரேஷன் அதிகாரி, சின்ன புன்னகையுடன் தொலைவிலிருக்கும் கஸ்டம்ஸ் அதிகாரியின் காதில் விழும்படி முத்திரை குத்தினார்.



அண்ட் ஸ்பேஸ் மியூஸியம்





• ஆர்லிங்டன் சிமிட்ரி

வெளி முற்றத்தில், எனது சகோதரர் அருண், என்னை நியூஜெர்ஸியில் உள்ள அவரது இல்லத்துக்கு அழைத்துப் போக வந்திருந்தார். பத்து டிகிரி செல்ஸியஸ் குளிரில் நடு நடுங்கியபடி அவரது காரில் சென்று அமர்ந்தேன். அடுத்த ஒரு மணி நேரத்தில் பிரம்மாண்டமான 'வெர்ரா ஜோனா' பாலத்தைக் கடந்து அவரது இல்லத்தை அடைந்தோம்.

நியூயார்க் துறைமுகத்தில், முதன்முதலாக வலது காலை எடுத்து வைத்து வந்திறங்கியவர் ஐரோப்பிய மாலுமியின் ஜியோ வென்னி - டா - வெர்ராஜோனா! அவரது பெயர்தான் இந்த மெகாப் பாலத்துக்குச் சூட்டப்பட்டுள்ளது.

• ஷங்கர்

அடுத்து நான் பார்த்து வாயைப் பிளந்த கட்டடம் நியூயார்க் பென் ஸ்டேஷன்! ('ண்' அல்ல 'ன்'! அர்த்தமே கவிழ்ந்து விடும் ஆபத்திருக்கு அய்யா!) நகரத்தின் நட்ட நடு சென்டரில் உள்ள முக்கியமான ரயில் நிலையம். நியூஜெர்ஸியிலிருந்து 'என்ஜே டிரான்ஸிட்' இரயிலில் வந்து இறங்கியபோது, ஜகஜ்ஜோதியாக, தகதகவென மின்னிக் கொண்டிருந்தது. பல்லாயிரம் சதுர அடியில் பளபளவென பரவியிருக்கும் இந்த நிலையத்தில், ரயில் போக்குவரத்து மட்டுமல்லாது, சிற்றுண்டி விடுதிகள், சிறப்பங்காடிகள், உல்லாசப் பகுதிகள் இருக்கின்றன. சுற்றுலா பயணிகள் இங்கேயே மொய்த்துக் கிடப்பதில் ஆச்சரியமென்ன!

ரயில்வே நிலையத்தை ஒட்டி அமைந்துள்ள 'மாடிஸன் ஸ்கொயர் கார்டன்' அரங்கின் பிரம்மாண்டத்தை விவரிக்க புதிய வார்த்தைகள் தேட வேண்டியிருக்கிறது... சுமார் 82,000 சதுர அடியில், இருபதாயிரம் பேர் உட்கார்ந்து பார்க்கக்கூடிய மெகா ஆடிட்டோரியம். 1971ல் முகம்மது அலி, ஜோ ஃபிரேசியர் குத்துச்சண்டை

**கல்கி - டயானா வேர்ல்ட் டிராவல்ஸ் இணைந்து நடத்திய குவிஸ் போட்டியில் முதல் பரிசு பெற்ற ஷங்கரின் பயண அனுபவம்!**

ஆக்ரோஷமாக நடந்தது இங்குதான். எல்விஸ் பிரெஸ்லி, ஃபிராங்க் சினாட்ராவிலிருந்து மைக்கேல் ஜாக்ஸன், எல்டன் ஜான் வரை இங்கே ஆடாத, பாடாத பிரபலங்களே இல்லை. இந்த அரங்கை ஒட்டி, இரண்டு பெரிய உணவகங்களும், எண்பத்து ஒன்பது சொகுசு அறைகளும் உள்ளன. இங்கேயும் எப்போதும் மக்கள் கூட்டம்

அலைமோதிக் கொண்டேயிருக்கிறது உற்சாகமாக!

'ஹைர ஹைர ஹைரப்பா' என ஐஸ்வர்யா - பிரசாந்த் ஆடிய அதே அழகு கட்டடம், செப்டம்பர் 11 தாக்குதலுக்குப் பிறகு மீண்டும் நியூயார்க்கின் மிக உயர்ந்த கட்டடம் என்ற அந்தஸ்து பெற்றுவிட்டது.

1250 அடி உயரமுள்ள எம்பயர் ஸ்டேட் கட்டடத்தில் 102 மாடிகள் உள்ளன. எல்லாவற்றுக்கும் உச்சாணியில் உலோகம் மற்றும் கண்ணாடியினால் அமைத்த கோபுரம், ஓங்கி உலகளந்து ஒடிலசாய் அமைந்துள்ளது. இம்மாம் பெரிய கட்டடத்தில் கீழிருந்து மேலே செல்ல, வெறும் ஏழே நிமிடங்கள்தான்... (அப்கோர்ஸ்... லிஃப்டில்தான்!) எண்பத்தாறாவது மாடியில், நின்றால் நகரம் முழுவதையும், கண்டுகளிக்கும்படி வசதி செய்யப்பட்டுள்ளது. டாப் ஆங்கிளில் அமெரிக்கா அப்படியே மல்லாக்கப்படுத்த அழகான கட்டடக் காடாக காட்சியளிக்கிறது! எழுபது வயதாகும் இந்தக் கட்டடம், நேற்றுதான் திறப்புவிழா நடந்தது போல புதுப் பொலிவுடன் இருப்பதும் ஓர் ஆச்சரியம். இந்தப் பிரம்மாண்டமான வளாகத்தில் அலுவலகங்கள், உணவகங்கள், திரையரங்குகள் என ஸ்பெஷல் மிக்ஸர் போல கலந்து கட்டி கலக்கியிருக்கிறார்கள்.

கூரையில்லாத இரட்டை மாடி பஸ்ஸில் மேல் பகுதியில் அமர்ந்தவாறே, வானளாவிய கட்டடங்களை அண்ணாந்து பார்த்தபடியே புகழ்பெற்ற 'டைம் ஸ்கொயரை' நோக்கிச் சென்று கொண்டிருந்தபோது... ஓர் இன்ப அதிர்ச்சி ஸாரி, இசை அதிர்ச்சி காத்திருந்தது.

அதுவரை வெகு சீராக சென்று கொண்டிருந்த பஸ் ஸ்தம்பித்து நின்றுவிட்டது. நம்ம ஊர் மாண்புமிகுக்களும், மறியல்களும் அநாவசியமாய் வந்து திகில் ஊட்ட, என்னவோ ஏதோ என்று எட்டிப் பார்த்தேன். பாப் இசைப் பாடகர் மைக்கேல் ஜாக்ஸன், ஆரவாரித்துக் கொண்டிருந்த ரசிக வெள்ளத்துக்குக் கையசைத்துக் கொண்டிருந்தார்! சில வினாடிகள்தான்! அவருடைய பாதுகாப்பு வளையம் ஜாக்ஸனை அப்படியே கவ்விக் கொண்டு போய்விட்டது. சே! ஷங்கருடன் கைகுலுக்கும் பாக்கியமிழந்தார் ஜாக்ஸன்!

உலகப் புகழ் பெற்ற 'வால் ஸ்ட்ரீட்'ல் உள்ள நியூயார்க் பங்குச் சந்தையைக் காணச் சென்றபோது, அருகிலிருந்த, அதாவது செப்டம்பர் 11க்குப் பிறகு நான்காயிரம் அப்பாவிகளின் கல்லறையாக மாறிவிட்ட உலக வர்த்தக மைய இரட்டைக் கோபுரங்களின் இடிபாடுகளையும் காண முடிந்தது. மனமெல்லாம் கனத்துப் போக, சில விநாடிகள் மௌனமாக நின்றேன்.

அடுத்து வனப்பான, கறுகறுப்பான பேட்டரி பார்க் நோக்கிச் சென்றேன். இங்கிருந்துதான் ஹட்ஸன் நதியில் அமைந்துள்ள சுதந்தரதேவி சிலையைப் பார்க்கச் செல்ல வேண்டும். பிரான்ஸ் நாட்டினரால், அமெரிக்காவுக்கு அன்பளிப்பாகத் தரப்பட்ட இந்த சுதந்திரதேவி சிலை அமெரிக்காவின் அந்தஸ்துக்குரிய அடையாளங்களுள் ஒன்று. விமானத் தாக்குதலுக்குப் பிறகு, சுற்றுலாப் பயணிகளை, லிபர்டி தீவுக்குச் செல்ல அனுமதிப்பதில்லை. ஃபெர்ரி எனப்படும் படகில், கரையிலிருந்து மூன்று கி.மீ தூரத்துக்குப் பயணம் செய்து,


• மியூசியம் ஆஃப் ஆர்ட்!

மன்ஹாட்டன், புருக்ளீன்,வில்ஸ்போரோ பாலங்கள் என ஒன்றரை மணி நேரம் நீடித்த உல்லாச சவாரி மறக்க முடியாதது.

'சென்ட்ரல் பார்க்'கை காணப் போகிறோம் என்ற த்ரில் நிமிடத்துக்கு நிமிடம் அதிகமாகிக் கொண்டே போனதற்கும் காரணமிருக்கிறது. 'அமெரிக்கா போனால் அதைப் பார்க்காமல் வராதே!' என்று ஆளுக்கு ஆள் தசாங்க தூபம் போட்டு அனுப்பியிருந்தார்கள். 'சென்ட்ரல் பார்க்'கை அடையும் முன்பே, கிரைஸ்லர், உல்வொர்த், ஃபிளாட் அயர்ன் போன்ற வானளாவிய கட்டடங்களை அண்ணாந்து பார்த்ததில் கிடைத்தது இலேசான கழுத்து வலி!

எண்ணூற்று நாற்பது ஏக்கரில் பரவியுள்ள நியூயார்க் கட்டடக் காடுகளின் இடையே, இயற்கை அழகின் அதிசயமாக மாட்டிக் கொண்ட, தாவர பூமி! பல்லாயிரக்கணக்கான

மரங்கள் கொண்ட பச்சை பசேல்... ஸாரி, வண்ணமயமான வானவில் பூங்கா. ஒவ்வொரு மரமும் ஒவ்வொரு வண்ணத்தில், இலையுதிர் காலத்தின் இயல்பை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. இதை 'ஃபால் கலர்ஸ்' என்று குறிப்பிடுகிறார்கள். வாக்கிங், ஜாக்கிங், ஸ்கேட்டிங், ஹார்ஸ் ரைடிங், போட்டிங் என ஏகப்பட்ட பொழுதுபோக்கு அம்சங்கள் இருந்தாலும், புல்வெளியில் அமர்ந்து புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தவர்களும், மோன நிலையில் காதலித்துக் கொண்டிருந்தவர்களும் இருக்கத்தான் செய்தார்கள்.

'சென்ட்ரல் பார்க்' ரசித்த கலர் கண்களோடு, ராக்ஃபெல்லர் மையத்தையும், அங்குள்ள என்.பி.ஸி ஸ்டுடியோவையும் ஒரு சுற்று சுற்றினேன். மெகா பொருட்காட்சிகளும், சர்வதேச மலர் கண்காட்சிகளும் நடைபெறும் இந்த மையத்தின் பனிக்கட்டிச் சறுக்கு மையம் உலகப் பிரசித்தம்!

நியூயார்க் பார்த்த வியப்பே இன்னும் தானாது இருக்கும்போது பிலடெல்பியா வந்தடைந்தேன்.




பிலடெல்ஃபியாவின் மற்றொரு பழைமையான கட்டடம், நகரத்தின் நடுவே வீற்றுள்ள 'சிட்டி ஹால்'. பென்சில்வேனியா மாநிலம் அமையக் காரணமான 'வில்லியம் பென்'னின் உருவச்சிலை இதன் உச்சியில் அமைந்துள்ளது. 'வில்லியம் பென்' தொப்பியின் உயரத்துக்கு மேல் எந்தக் கட்டடமும் அமையக்கூடாது என்று கனவான் ஒப்பந்தம் ஒன்றிருந்தது. ஆனால் அதையும் மீறி, ட ப கட்டடங்கள் எழுப்பப்பட்டுள்ளன. 'வில்லியம் பென்னின் முதுகுக்குப் பின்னால்தான் கட்டியுள்ளோம். அவரால் திரும்பிப் பார்க்க முடியாதே!'' என்று சமாதானம் சொல்லப்படுகிறதாம்.

பிரபல விஞ்ஞானி, முற்போக்காளர், கண்டுபிடிப்புக் களஞ்சியம், 'பெஞ்சமின் ஃபிராங்கிளின்' பிறந்த பூமியில் கால் பதித்தேன். இவர் வசித்த 'ஃபிராங்கிளின் கோர்ட்' மிகப் பழைமையானது. அருகில் உள்ள அவரது கல்லறையின் மீது நாணயங்களைப் போட்டால் நல்ல அதிர்ஷ்டம் வரும் என்று நம்பிக்கை நிலவுகிறது. இப்பேர்ப்பட்ட நவநாகரிக தேசத்தில், இப்படியொரு நம்பிக்கையா? நான்கூட பத்து சென்ட் நாணயம் ஒன்றைப் போடவேயில்லை!

அடுத்து நான் மிகவும் ரசித்தது பிலடெல்பியாவின் கலைக் கண்காட்சியகம். ஆர்ட் காலரியை விட, அதற்கு வளைந்து செல்லும் 'ராக்கி' படிக்கட்டுகள் மிகப் பிரபலம். இந்தப் படிகட்டுகளில்தான் 'ராக்கி' படத்தில் ஸில்வஸ்டர் ஸ்டாலோன் வேகமாக ஓடி, ஏறி நின்று திரும்பிப் பார்ப்பார். படிக்கட்டுகளுக்குப் பெயர் வந்த விவரம் புரிஞ்சிருக்குமே!

இங்கிலாந்து நாட்டுக்காரரான 'ஜேம்ஸ் ஸ்மித்ஸன்' விட்டுச் சென்ற சொத்தில் உருவான பல அருங்காட்சியகங்கள் இங்குள்ளன. இவரது சொத்தை உபயோகித்து 14 அருங்காட்சியகங்கள் மற்றும் கேலரிகள் உருவாயின. என்றாலும் ஸ்மித்ஸன் ஒருமுறைகூட அமெரிக்கா வந்தது கிடையாது!

இந்த அருங்காட்சியகங்களில் என்னை மிகவும் கவர்ந்தது. 'நேஷனல் ஏர் அண்ட் ஸ்பேஸ் மியூஸியம்'தான். உலகத்தின் முதல் விமானம் முதல் தற்போதைய நவீன ஜெட் இன்ஜின், ராக்கெட், சாட்டிலைட் வரை இங்கு வைத்துள்ளனர்.

இங்கு ஒரு ஐ-மேக்ஸ் அரங்கம் உள்ளது. வெள்ளித் திரையின் உயரம் ஐம்பது அடி, அகலம் எழுபத்தைந்து அடி! நம்ம ஊர் 35 எம்.எம். படங்கள் எல்லாம் ஒத்து வராது. இதற்கென்றே பிரத்யேகமாகப் படம் தயாரிக்கணும். இங்கு 'காஸ்மிக் வாயேஜ்' என்ற விண்வெளிப் படம் பார்த்தேன். விண்வெளிக்கே போய் வந்தது போல படபடப்பும் பிரமிப்பும் அடங்க வெகு நேரமானது.

தொகுப்பு: அனு

# எங்கும் இல்லை!

காடுகளைக்
களைந்தோம்
சோறு சமைக்க!
காணவில்லை
மழை!

கழனிகளைக்
காணாமற் செய்தோம்
வீடுகள் கட்ட!
விளைச்சல் இல்லை
சாப்பிட!

கனிகளை
மறந்தே
கண்டதைத் தின்றோம்
வீட்டுக்குள் அழைத்தோம்
வியாதிகளை!

உண்மை
உழைப்பினை
ஏளனம் செய்தோம்!
வாழ்வில்
வளம்தான் இல்லை!

பணத்திடம்
பாசம் வைத்தோம்
பந்தங்கள்...
பட்டுப்
போயின!

இயற்கையை
எதிர்த்தோம்!
இன்பம்தான்
எங்கும்
இல்லை!

— சுந்தரதாசன்





# சேமிப்பு

தீப்பெட்டியைத் திறந்தேன்...
சேமிக்கப்பட்டிருந்தது
சிறுவர்களின் உழைப்பு!

— டி.எஸ். பாலு

# மௌனம்!

ஏதையும் கூறாத ஒருவரி எழுத
எத்தனையோ சொற்களை
வாரியிறைக்கிறேன்.
மௌனத்தில் உணர்த்துகிற
பிரியங்களை
இசையால்கூட வாசிக்க இயலாது.
மௌனங்களைப் புரிந்து கொள்ளாத
பிரியங்கள்தாம்
சொற்களின் காடுகளில் சிக்கிக்
கொள்கின்றன

மழையும் காற்றும் மட்டுமல்ல
கடலும்கூட
ஆயிரமாயிரம் அலைநாவுகளால்
பேசுகிறது.
மௌனத்துடன் புதைந்துள்ள
வேர்களில் மறைந்துள்ளது
பூக்களின் பிரியம்.

மௌனம் நேரும் போது
கூடவே பிறக்கட்டும்
பொய்யில்லாத
ஒரு புன்னகையும்.

– செந்தூரம் ஜெகதீஷ்

மீண்டும்

# மௌனம்...!

காதல் மொழியின்
மௌன பாஷை!
விருப்பமில்லா சம்மதங்களின்
யதார்த்த வாழ்க்கை!
தனிமையின்
பிறப்பிடம்!
அறிவு ஜீவியின்
இருப்பிடம்!
காதல் உணர்வின்
சரணாலயம்!
இயற்கை அழகின்
பூஞ்சோலைவனம்!
பாடல்களின்
ஊமைராகம்!
கவிஞனின்
கற்பனைக் களஞ்சியம்...!

– திருத்துறைப்பூண்டி தா. முருகேசன்



# காத்திருக்கிறார் கரியமால்.



திருவானைக்காவல், அருள்மிகு ஜம்புகேஸ்வரர் அகிலாண்டேஸ்வரி திருக்கோயில் நிர்வாக அலுவலகப் பராமரிப்புக்கு உட்பட்டது கரியமாலீஸ்வரர் கோயில்.

இந்த அழகிய சின்னஞ்சிறு கோயில் இப்பொழுது பராமரிப்பு ஏதுமின்றி பாழடைந்துள்ளது.

கும்பகர்ணனைக் கொன்ற தீவினை தீர, அங்கதனை அனுப்பி சாளக்கிராம நெடுங் கிரியிலிருந்து கொண்டு வந்த லிங்கத்தை இராமனாம் கரியமால் இங்கு வைத்து பூஜித்துள்ளார். ஸ்ரீராமன் நீராடி இவ்விறைவனை வழிபட்டு வந்ததால், இங்குள்ள குளத்துக்கு ஸ்ரீராமதீர்த்தம் என்றும், ஈஸ்வரன் கரியமாலீஸ்வரர் என்றும் பெயர் பெற்றனர்.

திருவானைக்காவல் கோயிலுக்குரிய ஒன்பது தீர்த்தங்களுள் இதுவும் ஒன்று. தற்பொழுது ஸ்ரீராம தீர்த்த குளம் குப்பைத் தொட்டியாக மாறிவிட்டது.

கரியமாலீஸ்வரர் கோயில் சுற்றுச் சுவர் பராமரிப்பின்றி சிதிலமடைந்துள்ளது. கோயில் மேல் தளத்திலிருந்து இருபதடி உயரத்துக்கு ஓங்கி நிற்கும் கோபுரமெங்கும் மரஞ்செடிகள் கிளை பரப்பி வளர்ந்து நிற்கின்றன. கோபுரக் கட்டமைப்பே வெடித்துப் பிளந்து போய்விடக் கூடிய அளவுக்குச் சிதிலமடைந்துள்ளது.

கோபுரத்தின் மீது பொருத்தப்பட்டிருந்த தாமிரக்கலசம் களவு போய் ஏழு ஆண்டுகள் ஆகியும் இதுவரை புதிய கலசம் எதுவும் பொருத்தப்படாமல், மின் விளக்கு அலங்கார வளைவுக் கம்பி மட்டும் மூளியாகக் காட்சி தருகிறது.

கடந்த ஆண்டு திருவானைக்காவல் அருள்மிகு ஜம்புகேஸ்வரர் திருக்கோயிலுக்கு மகா கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. அப்பொழுது கூட அதன் உப கோயிலான கரியமாலீஸ்வரரை கோயில் நிர்வாகம் கண்டு கொள்ளவில்லை.

ஹரிஹர குருக்கள் எனப்படும் அறுபத்தி ஒன்பது வயதாகும் அர்ச்சகர் ஒருவர் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக இக்கோயிலில் பணிபுரிந்து வருகிறார். ஓய்வு பெற்றுப் போன பிறகும் கடந்த எட்டு வருடமாக அவரே மீண்டும் இங்கு அர்ச்சகராக இருந்து வருகிறார். அவருக்கும் கடந்த எட்டு வருடமாக ஊதியம் கூட்டித் தரப்படவில்லையாம். கோயில் நிர்வாகத்திடம் பலமுறை கேட்டுப் பார்த்தும் பலன் இல்லை என்கிறார் கண்கள் குளமாக.

"நீங்கள் சொல்வதெல்லாம் உண்மைதான். தெப்பக்குளத்தைச் சுற்றிலும் இரும்புக் கம்பிவேலி போடும் திட்டம் மதிப்பீடு செய்வதற்காக மேலிடத்துக்கு அனுப்பப்பட்டுள்ளது. மேலும் கடந்த ஆண்டு நடைபெற்ற கும்பாபிஷேகத்தின்போது ஏற்பட்ட நிதி நெருக்கடி மற்றும் கால அவகாசமின்மை காரணமாக கரியமாலீஸ்வரர் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் நடத்த இயலவில்லை. கோபுரக் கலசம், கோபுர மறு சீரமைப்பு மற்றும் கோயில் கும்பாபிஷேகத்துக்கு என்றும் திட்ட மதிப்பீடு கேட்டு மேலிடத்துக்கு அனுப்பியுள்ளோம். ஏழு ஆண்டுகளாக அர்ச்சகர் சம்பளம் குறித்தும் மேலிடத்தில் முறையிட்டு வருகிறோம்!" எனக் கூறுகிறார்கள் திருக்கோயில் நிர்வாகத்தினர்.

கட்டுரை : படங்கள்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# பாரத் ஓவர்ஸீஸ் வங்கி

## வழங்கும்

உங்கள் வாழ்வை வளமாக்க பல்வேறு கடன் திட்டங்கள்



**Shakti**
கார் மற்றும் வீட்டு உபயோகப் பொருட்களுக்கான கடன் திட்டம்

**SHUBHA LABH**

**Sree Griha**

**Saraswathi**

வாடிக்கையாளர்களது வங்கியாகச் செயல்படும் பாரத் ஓவர்சீஸ் வங்கி உங்கள் தேவைகளுக்கேற்ப பல்வேறு கடன் திட்டங்களை அளிக்கிறது. தொழில்துறை மற்றும் பிற கடன்களுக்கான திட்டங்களும் எங்களிடம் உண்டு.

வங்கி சேவையில் விரைவு, கனிவு மற்றும் தொலைநோக்கு.

மேலும் விவரங்களுக்கு அருகில் உள்ள கிளையை அணுகுங்கள்.

Chennai Branches: Chennai Main © 8110239 Adambakkam © 2452608 Anna Nagar © 6220201 George Town © 5384656 Jafferkhanpet © 4894892 Kalakshetra Colony © 4918022 Nungambakkam © 8218551 Mylapore © 4983914 T.Nagar © 4331340

FORTUNE-CH

# Bharat Overseas Bank Ltd.

A bank owned by 7 banks.

H.O: Habeeb Towers, 756, Anna Salai , Chennai 600 002.
Tel: 852 2983, 8520748.Fax:(91)-(044)- 8594615.
Telex: 041-7493 BOB-IN E-mail : bobl@md3.vsnl.net.in

*We'll be with you, right through*

ஜி. கிருஷ்ணமூர்த்தி

# கண்ணாடி

ஸ்ரீரமணி

'சிலீர்' என்ற சப்தத்துடன் என் கையிலிருந்து நழுவி விழுந்து உடைந்தது அந்த கண்ணாடி.

"குமார், என்னடா சப்தம்?" என்று அம்மா சமையலறையில் இருந்தவாறே கேட்டாள்.

"கண்ணாடி கை தவறி விழுந்துடுச்சு" என்றேன்.

"இருடா, நான் வந்து சுத்தம் செய்ய றேன். கையில் எடுக்காதே. குத்திக்கப் போகுது" என்று எச்சரிக்கைக் குரல் கொடுத்தாள்.

நான் குனிந்து பார்த்தேன். உள்ளங்கை அளவே இருந்த அந்தக் கண்ணாடி நான்கைந்து துண்டுகளாகி என்னைக் கேலியாகப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது. ஒவ்வொன்றிலும் என்னுடைய முகம் தெரிந்தது. என்னைத் தினம் தினம் சித்திரவதை செய்கிற முகம்.

இறைவனுக்குக் கூட மனிதர்களைப் போல் குரூரமான மனம் இருக்கும் போலிருக்கிறது. அந்தக் குரூரமான மனம் விழித்துக் கொள்கிறபோதெல்லாம் என்னைப் போன்ற சிலரைப் படைத்து விடுகிறான். என்னை நீங்கள் பார்த்தீர்களானால் சில நிமிடங்களுக்கு மேல் முகத்தைப் பார்த்துப் பேசினால் அதிசயம். என் முகம் அப்படிப்பட்டது!

சிறு வயதில் நான் நன்றாகவே இருந்ததற்கான சான்றாக சில புகைப் படங்கள் இருக்கின்றன. நான் வளர வளர முகத்திலும் உடம்பின் சில பகுதிகளிலும் கட்டிகள் வளர ஆரம்பித்தன. முதலில் உள்ளூர் மருத்துவர்களிடம் காட்டினேன். ஏதோ மருந்து எழுதிக் கொடுத்தார்கள். கட்டிகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தன.

ஒரு புகழ் பெற்ற மருத்துவமனைக்குச் சென்றேன். எல்லாவித சோதனைகளும் நடத்தினார்கள்.

"இது பரம்பரையில் வரக் கூடிய தோல் வியாதி. உன் தாத்தாவுக்கோ அல்லது அவர் அப்பாவுக்கோ இருந்திருக்க வேண்டும். இதற்கு மருந்தே இல்லை, ஸாரி" என்றார்.

உடைந்து போனேன். என்னை விட அம்மாவுக்கு அதிக கவலை.

"என்ன டாக்டர் அவன்? அதெப்படி மருந்து இல்லாமல் போகும்? அரைகுறையாகப் படிச்சவன் போலிருக்கு. வேறே டாக்டர்கிட்ட காட்டலாம்" என்று தனது ஆதங்கத்தை அந்த டாக்டரைத் திட்டித் தீர்த்துக் கொண்டாள்.

பிறகு பல தோல் நிபுணர்களிடம் காட்டினேன். எல்லோரும் நகலெடுத்தது போல் ஒரே மாதிரி தான் கூறினார்கள். "இதுக்கு மருந்தில்லே ஸாரி. அப்படியே விட்டுடுங்க."

அம்மா விடமாட்டாள். "பக்கத்து வீட்டு லட்சுமி சொன்னடா. யாரோ சித்த வைத்தியராம். எப்படிப்பட்ட வியாதியையும் குணமாக்கிடறாராம். வாடா" என்பாள்.

போவேன். மருந்து வாங்கி வந்து தின்பேன். 'அஸ்க்கு புஸ்க்கு நான் போவேனா' என்று கட்டிகள் கிண்டலடிக்கும். பிறகு வேறொரு மருத்துவரைப் பற்றி கேள்விப்பட்டு அம்மா அழைப்பாள்.

"என்னை ஏம்மா தொந்தரவு செய்யறே. என்னை விட்டுடு" என்பேன் எரிச்சலுடன்.

"இந்த ஒரு முறைடா. எனக்காக" என்று கெஞ்சுவாள்.

இப்படியாக ஊர்விட்டு, மாநிலம் விட்டுச் சென்று பார்த்து ஏமாற்றத்தை மூட்டையாக கட்டிக் கொண்டு வந்தேன். என் மீதே எனக்கு வெறுப்பு வர ஆரம்பித்து அது தேவையில்லாமல் மற்றவர்கள் மீது பொறாமையாகப் பரவியது. அது தவறு என்றும் உறைத்தது. ஆனாலும் விட முடியவில்லை.

என் முகம் இப்படி இருப்பது எனக்கே மறக்க வேண்டும். அப்போதுதான் வெறுப்பு



குறையும் என்று முடிவு செய்தவன் கண்ணாடி பார்ப்பதையே தவிர்த்தேன். கண்ணாடி பார்க்காமலே முகம் கழுவி துடைத்து, தலைவாரிக் கொண்டு கிளம்பி விடுவேன். எனினும் முக க்ஷவரம் செய்யும்போது, வேலை விஷயமாக எங்காவது போய், தற்செயலாக அங்கே கண்ணாடியில் என் முகத்தைப் பார்க்க நேரும் போதும் சில நிமிடங்கள் இதயம் படும் வேதனை இருக்கிறதே. சொல்லி புரிய வைக்க முடியாது.

முகச் க்ஷவரம் செய்வது தவிர வேறு எதற்கும் எனக்குக் கண்ணாடி தேவைப் படாததால் என் அறையில் கண்ணாடியே இல்லாமலிருந்தது.

சில மாதங்களுக்கு முன்பு ஒரு ஞாயிற்றுக் கிழமை கடைவீதியில் சுற்றினேன்.

"மூணு பொருள் பத்து ரூபாய்... மூணு பொருள் பத்து ரூபாய்..." என்ற குரலால் ஈர்க்கப்பட்டு அந்தத் தள்ளு வண்டி கடையை



''எங்கப்பா நம்ம காதலுக்கு சீக்கிரமே பச்சைக் கொடி காட்டிடு வார்னு நினைக்கிறேன்.''

''எதை வச்சு சொல்ற?''

''என்னை எப்பவுமே 'கழுதை'னு கூப்பிடுற அவர், நேற்று உங்களை 'குட்டிச் சுவர்'னு வர்ணிச்சார்!''

- அம்பை தேவா

நெருங்கினேன்.

சிறிய சிறிய பிளாஸ்டிக், இரும்புப் பொருள்கள் இருந்தன. ஒரு ஸ்குரு டிரை வரும் ஒரு சோப்பு டப்பாவும் எடுத்துக் கொண்டவன் மூன்றாவதாக எது எடுப்பது என்று நீண்ட நேரம் தடுமாறினேன். கை அடக்கமான அந்தக் கண்ணாடியைக் கண்ட தும் மனம் சபலப்பட்டது.

'கண்ணாடியை எடுத்துக் கொள் வோமா?' யோசித்தது மனம்.

'உனக்கு எதுக்கு கண்ணாடி. மன் மதன்னு நினைப்போ?' என்று இன்னொரு பக்கம் கிண்டலடித்தது.

''சீக்கிரம் சார், எவ்வளவு நேரமா எடுப்பீங்க'' என்று கடைக்காரன் எரிச்சல டைந்தான்.

சட்டென்று அந்தக் கண்ணாடியை எடுத் துக் கொண்டு விட்டேன். வீடு திரும்பி எனது அறையின் அலமாரியில் வைத்தேன். அதன் பிறகு அதை அடிக்கடி பார்க்க ஆரம் பித்தேன். சந்தோஷமான சூழ்நிலையில் அதைப் பார்த்தால், 'அப்படி ஒன்றும் நான் அழகற்றவனல்ல. என்னைவிட மோசமாக எத்தனை பேர் இருக்கிறார்கள்! அன்று வழியில் ஒருவனைப் பார்த்தேனே. மேலு தட்டே இல்லாமல் மூக்கும் வாயும் ஒன்றாக இணைந்து... அப்பப்பா, கோரம்! அதை விடவா இது மோசம்' என்று நினைப்பேன்.

'அடேய் குமார், வேண்டாம். எந்த சபலத்துக்கும் மனத்தில் இடம் தராதே. திருமணமே செய்து கொள்ளக் கூடாது என்று முடிவு செய்துள்ளாய். மறந்து விடாதே' என்று உள்ளிருந்து எச்சரிக்கை யான குரல் வரும்.

உண்மைதான். இந்த வேதனை என் னோடு போகட்டும். திருமணம் செய்து குழந்தை பிறந்து அதற்கும் இப்படி இருந்து விட்டால்? ஐயோ, இன்று நான்படுகிற வேத னையை அதுவும் பெறுமே. அப்படிச் செய்ய எனக்கு என்ன உரிமை இருக்கிறது? என் சுகத்துக்காக இன்னொரு உயிரை வேத னைப்பட வைக்க விரும்பவில்லை. தவிர, எனக்கு வருகிற மனைவியும் வேதனைப்படு வாளே. அதனால்தான் திருமணமே செய் வதில்லை என்று முடிவெடுத்துள்ளேன்.

''ஆம்பிளைக்கு எதுக்குடா அழகு? பொண்டாட்டியை உட்கார வைச்சு சோறு போடற தெம்புதான்டா முக்கியம்'' என்பாள் அம்மா.

எனக்கு அந்த வார்த்தைகளே பிடிக்க வில்லை. ஆணைப் போலத்தானே பெண்ணுக்கும் உணர்ச்சிகள் இருக்கின்றன. ஓர் ஆண், தன் மனைவி ஐஸ்வர்யா ராய் மாதிரி இருக்க வேண்டுமென எதிர்பார்க்கும் போது, ஒரு பெண், அஜீத்தை போல் எதிர் பார்ப்பதில் என்ன தவறு? தவிர ஆண் என்கிற அங்கிகாரத்தைப் பயன்படுத்தி ஒரு பெண்ணின் கனவுகளை, எதிர்பார்ப்புகளை, தீயிட்டுச் சாம்பலாக்குவது எனக்குப் பிடிக்க வில்லை. அதனால் திருமணம் செய்வ தில்லை என்று முடிவெடுத்தேன்.

அந்த முடிவில் நான் உறுதியாக இருக் கிறேன். ஆனாலும் கண்ணாடியில் முகம் பார்க்கிற அந்த சபலம் மட்டும் போக வில்லை. வயசுக் கோளாறு என்று நினைக் கிறேன். அந்தக் கண்ணாடி இன்று கை தவறி விழுந்து உடைந்து விட்டது.

"பார்த்து எடுக்கக் கூடாதா குமார்? நகரு" என்ற அம்மா விளக்குமாறு முறத்துடன் கூட்ட ஆரம்பித்தாள்.

"போய்த் தொலையட்டும்மா. அதுவும் நல்லதுக்குன்னுதான் நினைக்கிறேன்'' என்றவனை, புரியாமல் பார்த்துவிட்டு வேலையைத் தொடர்ந்தாள்.

எனக்குள் திடீரென சொல்லத் தெரியாத ஓர் உற்சாகம் வந்து விட்டது பெரிய மனப் பாரம் குறைந்ததைப் போலிருந்தது. கண்ணாடியைப் பார்க்கிற சபலம் நாளை எனக்குள் உள்ள உறுதியைக் குலைத்தாலும் குலைக்கலாம். அதனால் அது உடைந்ததே நல்லது என்று நினைத்தவன் உற்சாகமாக அலுவலகம் கிளம்பினேன்.

நிற்க... இதோடு கதையை முடித்து விட்டு உங்களிடம் 'கிரேட்' என்ற பட்டத்தையும் பரிதாபத்தையும் வாங்க முடியும். ஆனாலும் மனம் கேட்காததால் கடைசி பாராவையும் சொல்லி விடுகிறேன்.

அடுத்த ஞாயிற்றுக் கிழமை கடைவீதிக்குச் சென்றவன் 'மூணு பொருள் பத்து ரூபாய்' என்று குரல் வந்த இடத்தில் தயங்கி நின்றேன். பிறகு நெருங்கி ஒரு சீப்பு, சிறிய கத்தரிக்கோல் எடுத்தேன். அதனுடன் அந்த கையடக்க கண்ணாடியையும் எடுத்துக் கொண்டு பணம் கொடுத்து விட்டு நடக்க ஆரம்பித்தேன்.

# வெள்ளி வீணை

நவீனமாய் மடக்கி வைத்துக் கொள்கிற வகையில் ஃபைபர் வீணைகள் வந்துவிட்ட போதிலும், தஞ்சாவூர் வீணை என்றாலே தனி பெருமைதான்!

தஞ்சாவூர் வீணை தயாரிப்பாளரான வெங்கடேஸன், ஒரு கிலோ வெள்ளியைப் பயன்படுத்தி எழிலான வெள்ளி வீணை ஒன்றைத் தயாரித்திருக்கிறார்.





''மற்ற வீணைகளில் இருபத்து நான்கு மெட்டுக் கட்டைகளும் வெண்கலத்தில்தான் பொருத்தப்படும். ஆனால் இந்த வெள்ளி வீணையில் அவற்றையும் வெள்ளியிலேயே பொருத்தியுள்ளோம். மரமே பயன்படுத்தாமல், முழுக்க முழுக்க வெள்ளி வீணை செய்தோம் என்றால், அதில் இனிய நாத ஒலிக்குப் பதிலாக மெட்டல் சப்தம் வருமோ என சந்தேகப்பட்டோம். அதனால் பலா மரத்தினால் முழு வடிவ வீணை செய்து, அதன் மீது வெள்ளித் தகடுகள் பொருத்தினோம். இதிலும் இப்போது இனிய இசை வெளிப்படுகிறது'' என்றார்.

மைசூர் சாமுண்டீஸ்வரி கோயிலுக்குக் காணிக்கையாகத் தருவதற்காக இதைச் செய்திருக்கிறாராம் சேலம் பக்தர் ஒருவர்.

படங்கள், தகவல்: திரு

# IN GOKULAM THIS MONTH

## PATTERNS ON THE FLOOR



*- Cover Story*

Kolam means 'beauty' or 'beautiful'. Drawing Kolams is an art, an ancient art. It is a tradition...



## ALL IN GOOD SPIRIT

*- Humour Contest - I Prize*

The morning bell rings... The teacher walks down the corridor. Students run helter, skelter jumping over benches...

## THE WHITE GIANTS

*- In the Wild*



The home of the polar bear is the frozen Arctic region around the north pole. Here, this beautiful white giant...



## EVOLUTION OF THE CONSTITUENT ASSEMBLY

*- A Report*

January 26 is Republic Day - a day that is marked with pomp and pageant, a day that recalls the patriotic fervour...

## THE STRANGE CREATURE



*- Short Story Competition*

Once upon a time, there lived a poor fisherman with his wife and three children in a small village...

GOKULAM

*The monthly magazine for children*

JANUARY 2002 Rs.6/- ONLY

47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097



மதுரை நேதாஜி சாலையில் நுழைந்ததும் "யாரும் ரோட்ல நடக்கக்கூடாது. பிளாட் பாரத்தில்தான் நடக்கணும். சிவப்பு சேலை அம்மா பிளாட்பாரத்தில் போங்க. கார் பார்க்கிங்ல டிரை சைக்கிளை நிறுத்தியிருக்கிற அய்யா, வண்டிய எடுங்க" போலீஸின் கனிவான பேச்சு ஒலிபெருக்கியில் கேட்கிறது.

நேதாஜி சாலையில் கட்டப்பட்டிருக்கும் வாட்ச் டவரில் இருந்தபடியே காவலர் ஒருவர் போக்குவரத்தைக் கண்காணித்து, கட்டுப்படுத்துகிறார்.

நேதாஜி சாலையில் யாராவது டூவிலர் ஓட்டிச் செல்கிறார் என்றால் அவருக்குக் கண்டிப்பாய் சர்க்கஸ் வேலை தெரிந்திருக்க வேண்டும். தற்போது அந்த நிலை மாறியுள்ளது. நேதாஜி சாலையில் நடப்பவர்கள் நடைபாதையைப் பயன்படுத்துகிறார்கள். போக்குவரத்து வெகு சீராக இயங்குகிறது.

மதுரையில் மொத்தம் 16 இடங்களில் வாட்ச் டவர்கள் கட்டப்பட்டுள்ளன. முதல் கட்டமாக நேதாஜி சாலையில் செயல்பட்டு வருகிறது. விரைவில் மற்ற வாட்ச் டவர்களும் செயல்படும். சென்னைக்கு அடுத்தபடியாக மதுரையில் 'பேட்டன் லைட்' என்ற சிக்னல் விளக்கை அறிமுகப்படுத்தியுள்ளோம். இந்த லைட்டின் சிக்னல் மூலம் தூரத்தில் வரும் வாகனங்களும் சிக்னலைத் தெரிந்துகொள்ளும்.

"கடந்த முறை போலீஸ் கமிஷனராக இருந்த ஜாங்கிட் ஆரம்பித்து வைத்த இந்த வாட்ச் டவர் வெற்றிகரமாகச் செயல்படத் துவங்கியும் மற்ற 15 வாட்ச் டவர்கள் செயல்படாமல் தாமதப்படுத்தப்பட்டு வருகிறது. இந்த வாட்ச் டவர்களும் முழுமையாக உபயோகப்படுத்தப்பட்டால் மதுரையின் இடியாப்ப போக்குவரத்துச் சிக்கல் பெருமளவு குறைந்துவிடும்" என்கின்றனர் பொதுமக்கள்.

படங்கள், தகவல் - மது

# மாடல் ரோடு!



பொது நல வழக்குகளை அதிகம் போட்டதில் முதலிடம் வகிக்கிறார் சூரியப் பிரகாசம்.

"இதுவரை கிட்டத்தட்ட இருபதுக்கும் மேற்பட்ட பொது நல வழக்குகளை நான் போட்டிருந்தாலும் கலைஞர் கைதைத் தொடர்ந்து நான் போட்ட வழக்குகள் தான் நிறைய பேசப்பட்டன'' என்கிறார் சூரி.

கலைஞர் கைதில் எந்த மனித உரிமை மீறலும் நடக்கவில்லை என்று போலீஸ் தலைவரும், ஆட்சியாளர்களும் அறிவித்த

# சும்மா இருக்கமாட்டார் சூரியப் பிரகாசம்!

"இது ஏழைகளுக்கு எதிரான உத்தரவு. உடனே உங்கள் கட்சிக்காரரிடம் (அரசாங்கம்) சொல்லி வாபஸ் வாங்குங்கள்'' - சமீபத்தில் ஒரு வழக்கு விசாரணையின் போது இவ்வாறு கருத்து தெரிவித்தார் சென்னை உயர்நீதி மன்ற தலைமை நீதிபதி சுபாஷன் ரெட்டி - அரசு பொது மருத்துவ மனையில் பார்வையாளர்கள ஐந்து ரூபாய் நுழைவுக் கட்டணம் செலுத்த வேண்டும் என்ற தமிழக அரசின் உத்தரவு பற்றிய பொது நல வழக்கு நீதிமன்றத்தில் வந்த போது தான் தலைமை நீதிபதி இப்படிச் சொன்னார். அந்தப் பொது நல வழக்கைப் போட்டவர் வழக்கறிஞர் சூரியப் பிரகாசம். இப்போது வசூலுக்குத் தடை போடப்பட்டு விட்டது.

உயர்நீதி மன்ற வட்டாரத்தில் சூரியப் பிரகாசத்தைப் பற்றிக் விசாரித்தால் ''அவரையா கேட்கிறீர்கள்? சும்மாவே இருக்கமாட்டாரே அந்தச் சூரியப் பிரகாசம்'' என்கிறார்கள். சமீபகாலங்களில்

போது "சி.பி.ஐ. விசாரணை வேண்டும்'' என்று வழக்கு போட்டார் சூரி. உள்ளாட்சித் தேர்தல் சமயத்தில் சில கிராமங்களில் தலைவர் பொறுப்பு ஏலம் விடப்பட்டபோது "அதை உடனே தடுத்து நிறுத்த வேண்டும்'' என்று நீதிமன்றத்தை நாடினார்.

அதே தேர்தலில் ஆளுங்கட்சிக்காரர்கள் வோட்டுப் பதிவு அன்று அராஜகம் நடத்தியபோது 'வாக்கு எண்ணிக்கையை வீடியோ படம் எடுக்க வேண்டும்' என்றும் வழக்கு போட்டார் சூரி. போக்குவரத்து ஊழியர்கள் வேலை நிறுத்தம் நடத்திய போது அனுபவமில்லாத புது ஓட்டுநர்களை வைத்து அரசு, பேருந்துகளை இயக்கியது அல்லவா! அப்போது விபத்துகள் பல நடந்தன. அது தவிர மினி பஸ்களில் கூடுதல் கட்டணமும் வசூலிக்கப்பட்டது. உடனே அதை எதிர்த்து வழக்கு தாக்கல் செய்தார் சூரி. தமிழக காங்கிரஸின் வழக்கறிஞர் பிரிவு தலைவர் இவர்தான்.

"உள்ளாட்சி தேர்தல் தொடர்பாக நான் வழக்குகள் போட்டபோது எனக்கு தொலைபேசியில் மிரட்டல்கள் வந்தன. ஆனால் அதைப் பற்றியெல்லாம் நான்

கவலைப்படுவதில்லை" என்று சொல்லும் சூரி, மறைந்த தி.மு.க. வழக்கறிஞர் சந்திரன் ஜெயபாலிடம் ஜூனியராக இருந்து தொழில் கற்றவர். 18 வருடங்களுக்கு முன்னரே, இளம் வயதிலேயே மத்திய அரசு வழக்கறிஞராக நியமிக்கப் பட்டவர்.

''மிகவும் சென்ஸிடிவ்வான வழக்குகளில் மத்திய அரசு சார்பாக அப்போது நான் ஆஜராகும்போது நீதிபதிகள் என் உருவத்தைப் பார்த்து விட்டு, ''போய் உங்கள் ஸீனியரைக் கூட்டி வாருங் கள்'' என்பார்கள் என்று சொல்கிறார் சூரி.

"இது போன்ற வழக்கு கள் பரபரப்பாகப் பேசப்பட்டு மீடியாக் களில் அடிபடும் என்றா லும் ஏதாவது பலன் கிட்டுமா?'' என்று கேட்டால் "நிச்சயமாக உண்டு" என்கிறார்.

"பஞ்சாயத்து தலைவர் பதவி மற்றும் வோட்டு எண்ணிக்கையை வீடியோ படம் எடுப்பது ஆகிய வழக்குகளில் நீதிமன்ற உத்தரவுகள் அரசால் உடனே செயல் படுத்தப்பட்டனவே'' என்கிறார்.

''தேர்தலின்போது எல் லோரும் வோட்டுப் போட வேண்டும் என்பதைக் கட்டாய மாக்க வேண்டும்." இதுதான் சூரி போடப்போகும் அடுத்த வழக்கு

" விடுமுறை விட்டாலும் நாம் போய் வோட்டுப் போடுவதில்லை. உண்மையான ஜனநாயகம், எல்லோ ரும் வோட்டுப் போடும்போதுதான் மலரும். சமீபத்தில் தேர்தல்களில் வோட்டுப் பதிவு சதவிகிதம் குறைந்து வரு வது ஆபத்தான அறிகுறி" என்கிறார் சூரி.

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்
படம் : ராஜன்

# திரும்பி வந்த அஸ்திரம்!

தலைநகர் சென்னையில், தமிழ் மென்பொருள் கண்காட்சி என்றதும் நம்புவதற்குக் கொஞ்சம் சிரமமாகத்தான் இருந்தது. போய்ப் பார்த்ததும்தான் புரிந்தது. இணையத்தில் பயன்படுத்தப்படும் இரண்டாவது பெரிய மொழி என்ற கௌரவம் தமிழுக்குச் சும்மா கிடைத்து விடவில்லை என்று. கணித் தமிழ்ச் சங்கம்தான் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்திருந்தது. இனிமையாக தமிழ் கற்பிக்கும் அரிச்சுவடி




சிடிக்கள், ஆத்திச்சூடி மல்டி மீடியா, சிடிக்கள் என்று தொடங்கி, தமிழிலேயே மின் அஞ்சல் மென்பொருள் வரை கணிப்பொறியில் தமிழால் முடியும் என்பதைக் கண் முன் காட்டின கண்காட்சியில் நிறுவப்பட்டிருந்த ஸ்டால்கள். தமிழ் இணையப் பல்கலைக் கழகத்தின் தலைவர் முனைவர் வா.செ. குழந்தைசாமி கண்காட்சியைத் தொடங்கி வைத்தது பொருத்தம் என்றால் பத்திரிகையாளர் லேனா தமிழ்வாணனும், இயக்குனர் சேரனும் சிறப்புரை நல்கினார்கள். ''உலகளாவிய எனது நண்பர்கள் அனைவரையும், இணையத் தமிழைப் பயன்படுத்தி மட்டுமே தொடர்பு கொள்கிறேன்'' என்ற லேனா தமிழ்வாணன், ''நல்ல நோக்கத்துக்காக சினிமாவைக் கையாளும் சேரன் கணிப்பொறி தமிழ் குறித்து தமது படங்களில் எங்கேயாவது சொன்னால் புண்ணியம் கிடைக்கும்'' என்றார். கண்காட்சி ஒருங்கிணைப்பாளர்களில் ஒருவரான சாப்ட்வியூ. ஆண்ட்ரோ பீட்டர் பேசும்போது ''கல்கண்டு இதழிலும் கணிப்பொறித் தமிழ்ப் பற்றிச் சின்னச் சின்ன குறிப்புக்கள் கொடுக் கலாம்'' என்றதும் 'நமது அஸ்த்திரம் நமக்கே திரும்பி வந்து விட்டதே' என்று குறுநகையை ஓடவிட்டார் லேனா!

\- ஜெ

படம்: ராஜன்

# பரிசு

"நாளைக்கு என் பையன் பிறந்தநாள். சின்ன பார்ட்டி ஏற்பாடு பண்ணியிருக்கேன் வீட்டுலே. அவசியம் கலந்துக்கணும்."

மானேஜர் என் இருக்கைக்கே வந்து அழைத்ததும் முதலில் பெருமை வந்தது. கூடவே செலவை நினைத்துப் பயம் வந்தது.

இந்த மானேஜர் எங்கள் அலுவலகத் துக்கு வந்து மூன்று மாதம்தான் ஆகிறது. வடக்கே பதினைந்து வருட சர்வீஸ் போட்ட வர். தாமதமாய் கல்யாணமாகி தவமிருந்து பெற்ற பிள்ளையாம்.

"இங்கே ஏன் இப்படி எல்லோரும் மடிசஞ்சியாய் இருக்கீங்க. வடக்கே, மாதம் ஒரு பார்ட்டி, அவுட்டிங்குன்னு குடும்பத் தோட அமர்க்களப்படுத்துவோம்" என்றார்.

"அங்கே சம்பளத்துக்கு மேலே கிம்பளம் நிறைய வரும்போலிருக்கு எல்லோருக்கும்" என்று கிசுகிசுத்தான் கோபி.

பல் விளக்க வேப்பங்குச்சி, காலை டிபன் பழைய சோறு, இரவு சாப்பாடு மோர் சாதம் என்று மகா, இல்லை, மெகா கஞ்சனாய் வாழ்பவன் கோபி.

மானேஜர் பையன் மூன்றாவது படிப்ப தாய்க் கேள்வி. ஏழு வயதுப் பையனுக்குப் பிறந்த நாள் பரிசாய் ஏதாவது கொடுத்தாக வேண்டும். என்ன கொடுப்பது?

மாவு மெஷின் போல இரைச்சலிட ஆரம்பித்தது மனசு.

அதிலும் இந்த வருடம் எனது பதவி உயர்வு வேறு இருக்கிறது. மானேஜர் கண்ணசைத்தால் பதவி உயர்வைக் கைப் பிடிக்கலாம்.

செலவுக்குப் பணம்? மாதக் கடைசி வேறு! ஆமாம், மாதம் முதல் தேதிகளில் மட்டும் வாழ்ந்ததாக்கும் என்று என் மனைவி அடிக்கடி கழுத்தை நொடிப்பது மனத்திரை யில் ஓடியது.

ஏழு வயதுப் பையனுக்கு என்ன பொருள் வாங்கலாம்? வித்தியாசமாய் வாங்கி அசத்தி விட வேண்டும். அந்த அசத்தல் எனது பதவி உயர்வுக்கு உரமாக வேண்டும்.

அலுவலகத்தில் வேலை ஓடவில்லை. பொழுது மட்டும் ஓட, நேரம் முடிந்து வீட் டுக்குப் புறப்பட்டேன்.

பார்ட்டி என்றாரே மானேஜர். டீ பார்ட்டியோ? சேச்சே, அது சுப்பிரமணிய சாமி சமாசாரம்!

பிறகு, மேற்படி தண்ணீர் பார்ட்டியா?

சின்னப் பையன் பிறந்த நாள் விழாவில் போய் அதெல்லாம் இருக்குமா, என்ன?

ஜொள்ளிட்ட நாக்கை அடக்கினேன். கிடந்து அலையாமல் சும்மாகிட!

வடக்கத்தி நாகரிகமாய் 'பஃபே'யாக இருக்குமோ?

அவர் எப்படி வேண்டுமானாலும் பார்ட்டி தரட்டும். அது அவர் கவலை. இப் போது எனக்கு முக்கியம் பணம். வெள்ளை யப்பன் இருந்தால்தான் பரிசுப் பொருள் வாங்க முடியும்.

மண்டைக் குடைச்சலுடன் வீடு திரும்பினேன். மனைவியின் முகம் கண்ட தும் எனக்குள் சூரியப் பிரகாசம். அவள் கையிலுள்ள சிறுவாட்டுப் பணம் ஞாபகத் துக்கு வந்தது.

"எங்கப்பாவும், அண்ணனும் கார்த்திகை, பொங்கல்னு அனுப்பிச்ச பணம் ஒரு முந்நூறு ரூபாய் இருக்கு. கடிதார் வாங்கிக் கணும்னு ரொம்ப நாள் ஆசை. கூட்டிட்டுப் போறீங்களா?"

மூன்று நாள் முன்பு அவள் முத்தாய் உதிர்த்த வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

"பாரு, பாருக்குட்டி" என்று கொஞ்சலாய் பார்வதியை அழைத்தேன்.

"பாரு, உனக்கு இந்தப் புடவை ரொம்ப அழகாயிருக்கு."

"நிஜம்மா?" என்றாள் பெருமையுடன்.

கிருஷ்ணா



"ஆமாம். புடைவையிலேதான் நீ மிகவும் அழகாயிருக்கே" என்றதும் அவள் முகம் மாறிவிட்டது.

பத்துவருடமாய் என்னுடன் குடும்பம் நடத்துபவளாயிற்றே!

"எதுக்கு இப்பப் பணம்?"

நேரிடையாய்க் கேட்டுவிட்டாள். கற்பூர புத்தி!

சொன்னேன், பிறந்தநாள் பார்ட்டி பற்றி.

"உன் புருஷன் பதவி உயர்வு பெற்று அதிகாரியானால் உனக்குப் பெருமையில்லையா. ஆபீசரோட பொண்டாட்டின்னா சமுதாயத்துல உன் மதிப்பு எப்படி உயரும்."

என் சாம்பிராணிப் புகையில் நன்றாக மயங்கி விட்டாள்.

"ஹூம்! நம்ம சதாபிஷேகத்துலதான் நான் சுடிதார் போட்டுண்டு வீடியோவுக்கு போஸ் கொடுக்க முடியும் போலிருக்கு" என்று பெருமூச்சு விட்டாள்.

"இல்லை பாரு. சஷ்டியப்த பூர்த்தி சமயமே உன் ஆசையைப் பூர்த்தி செய்யறேன்" என்று ஜோக்கடித்து, துட்டை அடித்து விட்டேன்.

"அப்பா, பொம்மை வாங்கப் போறியா?"



"படிக்கற காலத்துல கள்ள நோட்டு அடிக்கறியே இது சரியா?"

"சுயநிதிக் கல்லூரில படிக்கற எனக்கு, பீஸ் கட்ட வேற வழி தெரியல, ஸார்!"

— அம்பை தேவா

எனது ஐந்து வயது மகன் ஓடி வந்து காலைக் கட்டிக் கொண்டான்.

பேட்டரியில் ஓடும் சங்கீதப் பேருந்து பொம்மையை அவன் பிறந்த நாளுக்கு வாங்கித் தருவதாய் வாக்களித்து, வாக்குத் தவறியது நினைவுக்கு வந்தது. படுபாவி மனச்சாட்சி!

"உனக்கில்லேடா கண்ணா. அப்பா ஆபீஸ் மானேஜரோட மகனுக்கு அது. உனக்கு அடுத்த மாதம் வாங்கித் தருவாரு" என்று என் மனைவி அவனுக்கு விளக்கினாள்.

"நிஜம்மா?" என்றான் கை நீட்டி.

விரித்த அவன் உள்ளங்கையில் அடித்து சத்தியம் செய்தேன். சந்தோஷமாய் ஓடினான்.

நான் கடைக்கு ஓடினேன். 'பணமும் பத்தாயிருக்கணும், பொருளும் முத்தாயிருக்கணும்' என்று கடை, கடையாய் ஏறி இறங்கினேன்.

யுரேகா! கிடைத்துவிட்டது, கரடி பொம்மை. சாவி கொடுத்ததும் இரண்டடி நகர்ந்து, கை உயர்த்தி 'ஹேப்பி பர்த்டே' என்றது. விலைதான் கொஞ்சம் பயமுறுத்தியது. வேறு வழியில்லை. பணத்தை அழுது, பொம்மையை வாங்கிவிட்டேன். என் மகன் கண்ணில் படக்கூடாது என்று கடையிலேயே ஜிகினா பேப்பர் ஒட்டி 'பேக்' செய்து கொண்டேன்.

வீட்டுக்குத் திரும்பியபோது பவர்கட். தீப்பெட்டியைத் தேடித் தவித்தோம். ஒரு டஜன் தீப்பெட்டியும் கை, கால் முளைத்து எங்கே போனது? அதிகம் திண்டாடவிடாமல் மின்சாரம் கண் திறந்தது.

"தீப்பெட்டியெல்லாம் எங்கே போச்சு?" என்று கத்தினேன்.

"இதோ இங்கேப்பா" எனறான் சீமந்த புத்திரன்.

தீப்பெட்டிகளை இணைத்து ரயில் வண்டி செய்திருந்தான். தீப்பெட்டியின் மேல் பெட்டிகளை, உள் அறைகள் மூலம் இணைத்து, பெட்டியின் நாலு பக்கமும் ஜிகினா பேப்பர் ஒட்டி, கோந்து பாட்டில் உதவியுடன் மேலும் கீழும் தீக்குச்சிகளை ஒட்டி அசத்தியிருந்தான்.

அவனைப் பாராட்டுவதா, இல்லை, தீப் பெட்டிகளைக் காலி செய்ததற்காகத் திட்டுவதா என்று புரியவில்லை.

"என் புள்ளை, எடிசன் மாதிரி பெரிய விஞ்ஞானியாவான் பாருங்க" என்று கண்கள் மின்ன பெருமைப்பட்டாள் மனைவி.

மானேஜர் வீட்டின் வாசலில் வாழை மரமும், டிஸ்கோ அலங்காரமும் தூள் கிளப்பின.

மானேஜர், அவர் மனைவி, பர்த்டே செல்ல மகன் – மூவரைச் சுற்றி வீடியோ வெளிச்சம்.

அலுவலகக் கூட்டம் களை கட்டியது.

அவரவர் பரிசுப் பொருளை பவ்யமாய் நீட்ட, வீடியோ காமிரா உள் வாங்கியது.

நானும் முன் சென்று, பைக்குள் கை விட்டேன் பரிசுப் பொருளை எடுக்க.

என்ன இது. சிறு, சிறு பெட்டியாய்... வெளியே எடுக்க, எனது மகனின் தீப்பெட்டி ரயில் வெளியே வந்தது.

"என்னய்யா இது? சிவகாசியிலேயிருந்து வர்றியா?"

மானேஜர் கிண்டலடிக்க, மற்றவர்கள் சிரிக்க, என் உள்ளே கருங்கிவிட்டது.

அசடு வழிந்தபடி கரடி பொம்மை பார்சலை எடுத்து நீட்டினேன்.

"இதுவும் தீப்பெட்டிப் பார்சலா? வெட்டுக்கிளியா?"

யாரோ கிண்டலாய்க் கேட்க, மீண்டும் சிரிப்பலை.

பப்ஃபே ருசிக்காமல், சீக்கிரமே கழன்று கொண்டேன். கோபமாய் வீட்டுக்கு வந்தேன்.

"அப்பா, என் பரிசையும் உன் பையிலே போட்டிருந்தேனே, கொடுத்திட்டியா அதையும். எவ்வளவு கஷ்டப்பட்டு செஞ்சேன் தெரியுமா? கையெல்லாம் வலிச்சுடுச்சு."

என் மகன் ஓடிவந்து கையைப் பற்றிய படி குழந்தைத்தனம் மாறாமல் கேட்கவும், என் கோபம் போன இடம் தெரியவில்லை.

இரண்டு நாள் கழித்து அலுவலக வேலையாக, அலுவலகக் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டேன்.

புறப்படும் போது மானேஜர் அழைத்தார்.

"போற வழியிலேதானே என் வீடு இருக்கு. இந்தக் கவரை வீட்டுலே கொடுத்திடுங்க" என்றார்.

வாங்கிக் கொண்டு காரில் ஏறினேன். பத்து நிமிடப் பயணத்தில் மானேஜர் வீடு.

வாசல் வராந்தாவில் அவர் மகன்.

"ஹலோ அங்கிள்" என்றான்.

"ஹலோ" என்றேன்.

"இதோ பாருங்க. கூகூ... கூகூ..." என்று ரயில் போல சப்தமிட்டபடி தீப்பெட்டி ரயிலை ஓட்டினான்.

ஆம், அதேதான். என் மகன் கொடுத்த பரிசுதான்!

"வந்த பரிசுலேயே எனக்கு இதுதான் மிகவும் பிடிச்சிருக்கு. தாங்க்ஸ் அங்கிள்" என்றான்.

குழந்தைகள் உலகமே தனிதான்!

## "கொடுக்காதே... பிடி!"

ஒரு கஞ்சன்... ஆத்தோட வெள்ளத்துலே போய்க்கிட்டிருக்கான்! கரையிலே இருக்கிற ஒருத்தன் அவனைக் காப்பாற்ற முயற்சி பண்றான்.
கஞ்சனைப் பார்த்து, "உன் கையைக் குடு... கையைக் குடு...ன்னு கத்தினான்!
அவன் கொடுக்கலே... கஞ்சனுக்கு எதையும் கொடுத்துப் பழக்கமில்லே... அதனாலே கையைக் கொடுக்கறதுக்கும் மனசு வரலே... ஆத்தோட போய்க்கிட்டேயிருக்கான்.
கரையிலே இருக்கறவன் யோசித்து... "சரி! என் கையைப் பிடி... கையைப் பிடி"ன்னு சொன்னான்!
கஞ்சன் உடனே 'கப்பு'னு பிடிச்சிக்கிட்டான்! உடனே இவன் இழுத்து கரையிலே போட்டுட்டான்.

- தென்கச்சி கோ. சுவாமிநாதன் சொல்ல, ரசித்தவர்: சி.ஜி. பாலசுப்ரமணியன்





# ஸ்ரீ ரஞ்ஜனி ஜுவல்லர்ஸின்



## இனிய புத்தாண்டு வாழ்த்துக்கள்

**916 K.D.M தங்கம் மற்றும் Non K.D.M தங்க நகைகள் தரமான முறையில் செய்து விற்பனை செய்கிறோம்.**

ராசி கற்கள் - மரகதம், முத்து, பவளம், புஷ்பராகம், மாணிக்கம், நீலம், கோமேதகம், வைடூரியம் மற்றும் வைரம் (பெல்ஜியம்) உங்கள் ராசி மற்றும் பிறந்த தேதிக்கேற்ப வெள்ளியிலும், தங்கத்திலும் ஆர்டரின் பேரில் விருப்பத்திற்கேற்ப வடிவமைத்து தருகிறோம், கற்கள் ஒரிஜினல் என்று முழு உத்திரவாதம் தருகிறோம்

வெள்ளி கவசங்கள், பாத்திரங்கள், ஆபரணங்கள் மற்றும் பரிசு பொருட்கள் தரமான முறையில் செய்து விற்பனை செய்கிறோம். NON K.D.M. தங்க நகைகளுக்கு செய் கூலி இல்லை 916 K.D.M. தங்கநகைகளுக்கு செய் கூலியில் 50% தள்ளுபடி உண்டு.

**மாதாந்திர நகை சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து பயனடைவீர்**



ஸ்ரீ ரஞ்ஜனி ஜுவல்லர்ஸ் A/C
45, பரி பூரண விநாயகர் கோயில் தெரு,
மைலாப்பூர், சென்னை 600 004

**✆ 4984237, 4980476**

விழாகாலச் சலுகை
இந்த சலுகை
டிசம். 25 முதல்
ஜனவரி 15 வரை



# S.V. முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கை யில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு **(80G, Income Tax Excemption)** உண்டு

## S.V. HOME FOR AGED

#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; 475 1356; 475 5799
Email: svhome1rediffmail.com

# சிவகாமியின் சபதம்

## நாற்பத்து ஒன்றாம் அத்தியாயம்

## பாசறை

புத்த விஹாரத்திலிருந்து புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம், அக் குதிரை வீரர்களில் மூன்று பேர், பரஞ்சோதிக்கு முன்னாலும், மூன்று பேர் பின்னாலுமாகப் பரஞ்சோதியைத் தங்களுக்கு நடுவிலேயே விட்டுக்கொண்டு சென்றார்கள்.

பொழுது நன்றாய் விடிந்த பிறகு, பரஞ்சோதி அவர்களுடைய தோற்றத்தைக் கவனித்தான். அவர்கள் திடகாத்திரமுள்ள ஆஜானுபாகுவான மனிதர்கள் என்று தெரிந்துகொண்டான்.

இந்த வீரர்கள் ஏதோ ஒரு சைனியத்தைச் சேர்ந்தவர்களாய்த்தான் இருக்க வேண்டும். முக்கியமான யுத்த காரியமாகத்தான் போய்க்கொண்டிருக்கிறார்கள். இவர்களுடன் தன்னை ஏன் அந்தப் புத்த பிக்ஷு சேர்த்து அனுப்பினார்?

நேரமாக ஆக, பரஞ்சோதியின் மனக்கலக்கம் அதிகமாயிற்று. அவன் அந்த வீரர்களுக்கு முன்னால் போகவோ, பின்னால் போகவோ முயன்றபோதெல்லாம், அவர்கள் அதற்கு இடங்கொடாமல் அவனை நடுவிலேயே விட்டுக் கொண்டு போனார்கள். இதைப் பார்க்கப் பார்க்க அவன் உள்ளத்தில் தனக்கு இவர்கள் வழிகாட்டி அழைத்துப் போகிறார்களா அல்லது சிறைப்படுத்திக்கொண்டு போகிறார்களா என்ற சந்தேகம் உதித்தது.

ஸ்ரீ பர்வதம் வடக்கே கிருஷ்ணா நதிக்கரையில் இருக்கிறதென்பது பரஞ்சோதிக்குத் தெரியும். ஆனால் அதிகாலையில் கிளம்பியதிலிருந்து இந்த வீரர்களோ மேற்குத் திசையை நோக்கியே போய்க்கொண்டிருந்தார்கள்.

**அமரர் கல்கி**

ஒருவேளை கொஞ்ச தூரம் மேற்கு நோக்கிப் பிரயாணம் செய்தபிறகு, வடக்கு நோக்கித் திரும்பலாம் என்று அவன் எண்ணியபடியும் நடக்கவில்லை.

சூரியன் உச்சி வானத்திற்கு வரும் வரையில் அவர்களுடன் பிரயாணம் செய்த பின்னர், பரஞ்சோதி, தான் உண்மையில் சிறையாளியா இல்லையா என்பதை நிச்சயமாய்த் தெரிந்து கொள்ள விரும்பினான். அவ்விடத்தில் வடக்கு நோக்கித் திரும்பிய பாதையில் அவன் தன் குதிரையைத் திருப்பினான்.

கண் மூடித் திறக்கும் நேரத்தில், அந்த ஆறு குதிரை வீரர்களும் தன்னைச் சூழ்ந்து நிற்பதைக் கண்டான். அவர்களுடைய வேல்களின் முனைகள் அவனுடைய குதிரை மீது உராய்ந்துகொண்டிருந்தன.

எண்ணெய் ஊற்றி ஆயத்தமாய் வைத்திருக்கும் தீபத்தின் திரியானது அதன்மீது தீப்பட்டதும் சுடர்விட்டு எரியத் தொடங்குவதுபோல், பரஞ்சோதியின் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த ஆத்திரம், இப்போது கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. கோபத்தினால் அவனுடைய இரத்தம் கொதித்தது.

கையிலே வேலை எடுத்தான். அதைத் தனக்கு அருகில் இருந்தவன்மீது பிரயோகிப்பதற்காக ஓங்கினான்.

ஆகா! என்ன ஏமாற்றம்! ஓங்கிய வேல் எங்கேயோ போய் விழுந்தது. வேலுக்கு உடையவனும் தொப்பென்று தரையில் விழுந்தான். எப்படி விழுந்தோம் என்பதே முதலில் பரஞ்சோதிக்குத் தெரியவில்லை. அப்புறம் தன் உடம்பின் மீது கயிறு ஒன்று சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான். அந்த வீரர்களில் ஒருவன் சுருக்குப் போட்ட கயிற்றைத் தன் மீது எறிந்து, தன்னைக் கீழே இழுத்துத் தள்ளி விட்டான் என்பதை அறிந்தான்.

இரண்டாவது தடவை இவ்விதம் சூழ்ச்சியினால் தான் வெல்லப்பட்டதை நினைத்தபோது, பரஞ்சோதிக்கு ஒரு பக்கம் வெட்கமும் இன்னொரு பக்கம் ஆத்திரமும் பொங்கின.

அவனுடைய குதிரையோ தன் எஜமானுக்கு இனிமேல் தன்னால் பயனில்லையென்று உணர்ந்துகொண்டது போல், வந்த வழியே திரும்பி ஓடிக் கொண்டிருந்தது.

தப்பிச் செல்வதற்கு இவ்விதம் வழியே இல்லாமற் போகவே, "இனிப் போராடுவதில் பயனில்லை; நடப்பது நடக்கட்டும்" என்று பரஞ்சோதி சும்மா இருந்தான்.

அந்த வீரர்களில் மூவர் குதிரை மீதிருந்து இறங்கிவந்து பரஞ்சோதியின் கரங்களை முதுகுப் பக்கம் சேர்த்து, பின்கட்டு முன்கட்டாகக் கட்டினார்கள்.

அந்த ஆறு குதிரைகளுக்குள்ளே அதிக வலிவும் ஆகிருதியும் உள்ள குதிரையின் மீது அவனை ஏற்றி வைத்தார்கள். அவனுக்குப் பின்னால், அவ் வீரர்களில் ஒருவனும் உட்கார்ந்துகொண்டான். மறுபடியும் குதிரைகள் மேற்குத் திசையை நோக்கிச் சென்றன.

அஸ்தமிக்க ஒரு ஜாமம் இருக்கும்பொழுது, பரஞ்சோதி தனக்கு முன்னால் ஓர் அபூர்வமான காட்சியைப் பார்த்தான்.

அப்போது அவர்கள் சென்ற பாதையானது, வரவர மேடாகி வந்த பீடபூமியின் உச்சியை அடைந்திருந்தது. அங்கிருந்து பார்க்கும்போது வெகு தூரத்துக்கு வெகு தூரம் சமவெளிப் பிரதேசமாகக் காணப்பட்டது. அந்தப் பிரதேசத்தில் கண்ணுக்கெட்டிய தூரம்

சைனியம் தண்டு இறங்கியிருந்தது.

ஆயிரக்கணக்கான போர் யானைகள் கருங்குன்றுகளைப் போல் வரிசை வரிசையாக அங்கு நின்றன. அந்தக் கருங் குன்றுகளுக்கு இடையிடையே அடித்திருந்த கூடாரங்கள் வெண்ணிற மணற் குன்றுகளைப் போல் தோன்றின. மற்றும் எண்ண இயலாத குதிரைகள், ஒட்டகங்கள், ரிஷபங்கள், ரதங்கள், வண்டிகள் ஆகியவை எங்கெங்கும் காணப்பட்டன. சர்க்கரை இறைந்து கிடக்கும் இடத்தில் மொய்க்கும் எறும்புகளைப் போல், லட்சோப லட்சம் வீரர்கள் சில இடங்களில் நெருங்கியும், சில இடங்களில் பரந்தும், வெகு தூரத்துக்கு வெகு தூரம் காணப்பட்டார்கள்.

கூடாரங்களின் மேலே வரிசை வரிசையாகக் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. எல்லாவற்றுக்கும் நடுநாயகமாக ஒரு பிரம்மாண்டமான கொடி வானளாவிப் பறந்து கொண்டிருந்தது.

கொந்தளித்துக் கொண்டிருக்கும் சமுத்திரத்தை நெருங்கும்போது கேட்கும் 'ஹோ' என்ற பேரிரைச்சலைப் போல் இனந்தெரியாதபடி பல ஒலிகள் வந்துகொண்டிருந்தன.

இந்தக் காட்சியைப் பார்த்த பரஞ்சோதியின் வாயிலிருந்து 'ஆஹா' என்ற சத்தம் எழுந்தது.

அங்கே தண்டு இறங்கியிருப்பது பல்லவ சைனியந்தான் என்று எண்ணிய பரஞ்சோதியின் உள்ளத்தில், அப்போது அவனுடைய கட்டுண்ட நிலைமையையெல்லாம் மறக்கச் செய்து கொண்டு ஒரு பெரும் ஆர்வம் பூரித்து எழுந்தது.

அது என்ன ஆர்வம் என்றால், மகத்தான வீரப் போருக்கு ஆயத்தமாகத் துடி துடித்துக்கொண்டு நிற்கும் அந்த மகா சைனியத்தில் தானும் ஒரு போர் வீரனாகச் சேர்ந்துவிட வேண்டும் என்பதுதான்.


ந்தகாரம் சூழ்ந்த இரவில் பிரயாணம் செய்பவன் வழி தெரியாமல் திகைத்துக் கொண்டிருக்கையில், திடீரென்று தோன்றிய மின்னலின் ஒளியிலே தான் போக வேண்டிய பாதையைக் கண்டு பிடிப்பதுபோல, பரஞ்சோதியும் தான் பிறவி எடுத்தது எதற்காக என்பதை அந்தக் கணத்தில் தெளிவாகக் கண்டுகொண்டான். ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதுவதற்காகவோ தோத்திரப் பாடல்களை உருப்போட்டுப் பாடுவதற்காகவோ, கையில் சிற்றுளி கொண்டு கல்லைக் கொத்திக் கொண்டிருப்பதற்காகவோ, வர்ணங்களை குழைத்துச் சுவரில் சித்திரம் எழுதுவதற்காகவோ, தான் பிறக்கவில்லை! கையில் வாளும் வேலும் கொண்டு போர்முனையில் நின்று, எதிரிகளின் தலைகளைப் பனங்காய்களைப் போல் உருட்டி அவர்கள் நெஞ்சில் வேலைப் பாய்ச்சி, இரத்த வெள்ளத்தில் நீந்தி, வெற்றிச் சங்கு முழக்கிப் பகைவர்களை ஹதா ஹதம் செய்து விரட்டி 'வீராதி வீரன்' என்று உலகமெல்லாம் பாராட்டும்படி பெயர் எடுப்பதற்காகப் பிறந்தவன், தான் என்று உணர்ந்தான்.

இந்த எண்ணமானது பரஞ்சோதிக்கு எல்லையற்ற குதூகலத்தை உண்டாக்கிற்று. ஆயனர் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந்து, அவன் பார்த்த மகேந்திர சக்கரவர்த்தியின் கம்பீர உருவம் அவன் கண் முன்னால் எழுந்தது. அதோ வானளாவிப் பறக்கும் கொடியின் அடியில் இந்த மகத்தான சைனியத்தின் பிரதம சேனாதிபதியான மகேந்திரச் சக்கரவர்த்தி வீற்றிருப்பார். அவர் முன்னிலையிலேதான் தன்னைக் கொண்டுபோய் நிறுத்துவார்கள்.

சக்கரவர்த்தியின் சந்நிதியை அடைந்ததும், அவர் பாதங்களில் விழுந்து. 'பிரபு! பல்லவேந்திரா! தங்களுடைய வீர மகா சைனியத்தில் இந்தப் பட்டிக்காட்டில் பிறந்த அறியாச் சிறுவனையும் சேர்த்து கொள்ள அருள் புரிய வேணும்!' என்று வேண்டிக் கொள்வதென்று பரஞ்சோதி தீர்மானித்தான். சித்திரக் கனவுமாச்சு வர்ணச் சேர்க்கையுமாச்சு! ஆயனரும் நாகநந்தியும் எக்கேடு கெட்டாவது போகட்டும்!



இவ்விதம் பரஞ்சோதி எண்ணமிட்டுக் கொண்டே பாசறையை நெருங்கிய போது, அவனுடைய பொங்கி எழுந்த உற்சாகத்தை மீண்டும் சந்தேக நிழல் மறைத்தது. 'இங்கே இறங்கியிருப்பது பல்லவ சைனியந்தானா?' என்பதுதான் அந்தச் சந்தேகம்.

பல்லவ சாம்ராஜ்யத்தின் கொடி ரிஷபக் கொடி அல்லவா? இங்கே பறக்கும் கொடிகளில் காட்டுப்பன்றியின் உருவம் கடூரமாகக் காட்சியளிக்கின்றதே!

ஒருவேளை இது வாதாபிச் சைனியமாக இருக்குமோ! பல்லவ இராஜ்யத்தின் மீது படையெடுத்து வரும் சைனியம் இதுதானோ? - அம்மம்மா! இவ்வளவு பிரம்மாண்டமான படை பலமுள்ள பகைவனா பல்லவ இராஜ்யத்தின் மீது படையெடுத்து வருகிறான்?

பாசறையின் முன் வாசலை அடைந்ததும், வீரர்கள் குதிரைகளின் மீதிருந்து கீழே இறங்கிப் பரஞ்சோதியையும் கீழே இறக்கிவிட்டு அவனை நடத்தி அழைத்துச் சென்றார்கள்.

பாசறைக்குள் புகுந்து சென்றபோது, பரஞ்சோதியின் மனத்தில் முன்னமே தோன்றியிருந்த சந்தேகம் உறுதியாயிற்று.

பாசறையில் ஆங்காங்கு நின்ற வீரர்களின் தோற்றமும், அவர்களுடைய பேச்சின் பாஷையும், இந்த சைனியம் பல்லவ சைனியமாக இருக்க முடியாது என்று ஐயமறத் தெரிவித்தன.

'ஆஹா! பகைவர்களின் பாசறைதான் இது! இங்கே வந்து அகப்பட்டுக் கொண்டோமே? தப்பிச் செல்வதற்கு வழியே இல்லை போலிருக்கிறதே?' என்று பரஞ்சோதி எண்ணியபோது, அவனுடைய சப்த நாடியும் ஒலித்துவிட்டன. சற்று முன் உள்ளத்தில் ஏற்பட்ட குதூகலம் நிராசையாக மாறியது.

அவன் உடம்பைப் பிணித்திருந்த கட்டுக்கள் அப்போது முன்னைவிடப் பதின்மடங்கு அதிகமாக வலித்தன.

மனச்சோர்வினாலும் உடல் வலியினாலும் அவன் நிமிர்ந்து நடக்கக்கூட முடியாமல் தள்ளாடவே, அவனை அவ்வீரர்கள் இழுத்துக்கொண்டு போக வேண்டியதாக நேரிட்டது.

அப்போது சற்றுத் தூரத்தில் அறிமுகமான முகம் ஒன்று தன்னை நோக்கி வருவதைப் பரஞ்சோதி கண்டான். அருகில் நெருங்கியதும் அந்த முகம் நேற்றுமுன் தினம் அவனுக்கு வழித்துணையாகக் கிடைத்த வஜ்ரபாஹுவின் முகந்தான் என்பது தெரிந்தது.

முதலில், பரஞ்சோதிக்குச் சிறிது உற்சாகம் உண்டாயிற்று. உடனே அவன் மனத்தில், 'நாம் இந்தக் கதியை அடைவதற்கு மூலகாரணம் இந்த மனிதன்தான்' என்ற எண்ணம் தோன்றியது.

வஜ்ரபாஹுவோ பரஞ்சோதியைப் பார்த்து, மிக்க அதிசயத்தை அடைந்தவனைப் போல், "தம்பி! இது என்ன கோலம்?" என்றான். பிறகு, அவனை அழைத்து வந்த வீரர்களைப் பார்த்து ஏதோ கேட்டுவிட்டு, "தம்பி, பயப்படாதே! சத்யாச்ரய புலிகேசி மன்னரிடம் உள்ளது உள்ளபடி சொல்லு. உனக்குத் தீங்கு ஒன்றும் நேராது!" என்று கூறினான்.

வஜ்ரபாஹுவின் வார்த்தைகளைக் காட்டிலும் அவனுடைய பிரகாசமான கண்களில் மின்வெட்டைப் போல் தோன்றிய சமக்ஞையானது பரஞ்சோதிக்கு அதிக தைரியத்தை ஊட்டியது.

## நாற்பத்து இரண்டாம் அத்தியாயம்

# சத்யாச்ரயன்

வாதாபியைத் தலைநகராகக் கொண்டு, வடக்கே நர்மதை வரையிலும் தெற்கே துங்கபத்திரை வரையிலும் பரந்து கிடந்த சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியை பாரத நாட்டில் அந்தக் காலத்திலிருந்த வீரர்களுக்குள்ளே ஒப்பற்ற மகா வீரனாகிய புலிகேசியை நேயர்கள் இப்போது சந்திக்கப் போகிறார்கள். அப்படிச் சந்திப்பதற்கு முன்னால், அந்த வீரனின் பூர்வ சரித்திரத்தை நேயர்கள் தெரிந்து கொள்ளுதல் உபயோகமாக இருக்கும்.

புலிகேசியும் அவனுடைய சகோதரர்களும் சிறுவர்களாக இருந்தபோது, அவர்களுடைய சிற்றப்பன் மங்களேசனுடைய கொடுமைக்கு ஆளாக நேர்ந்தது. மங்களேசனுடைய சிறையிலிருந்து அவர்கள்

தப்பி ஓடி, வெகுகாலம் அடர்ந்த காடுகளில் ஒளிந்து வாழ்ந்தார்கள். அப்படிக் காட்டில் வசித்த காலத்தில் அவர்கள் அநுபவித்த அளவில்லாத கஷ்டங்கள் அவர்களுடைய தேகத்தை வஜ்ரதேகமாக்கி, அவர்களுடைய உள்ளத்தில் வயிரம் ஏற்றி அவர்களை இணையற்ற வீர புருஷர்களாகவும் ஈவிரக்கமற்ற கடூர சித்தர்களாகவும் செய்துவிட்டன.

காலம் கைகூடி வந்தபோது, புலிகேசியும் காட்டைவிட்டு வெளி வந்து, சிற்றப்பனை எளிதில் வென்று அப்புறப்படுத்திவிட்டு வாதாபிச் சிங்காதனத்தில் ஏறினான். பின்னர், தன் வீரத் தம்பிமார் துணை கொண்டு வாதாபி இராஜ்யத்தை விஸ்தரிக்கத் தொடங்கினான். வடதிசையில் அவனுடைய ராஜ்யம் விஸ்தரித்துக் கொண்டு போய் நர்மதை நதிக்கரையை எட்டியபோது அவனுடைய சைனியம் உத்தர பாரதத்தின் ஏக சக்கராதிபதியாக விளங்கிய ஹர்ஷவர்த்தனரின் படைகளுடன் முட்ட வேண்டியதாயிற்று.

நர்மதை நதியின் இரு கரைகளிலும் பல வருஷ காலம் போர் நடந்தது. வாதாபிப் படைகள் எவ்வளவோ வீரத்துடன் போர் புரிந்தும், வடநாட்டிலிருந்து மேலும் மேலும் ஹர்ஷரின் சைனியங்கள் வந்துகொண்டிருந்தபடியால், முடிவான வெற்றி காண முடியவில்லை. இந்த நிலைமையில் லட்சோப லட்சம் வீரர்கள் அடங்கிய பெருஞ் சைனியத்துக்கு ஹர்ஷவர்த்தனர் தாமே தலைமை வகித்து வருவதாகத் தெரிய வந்தபோது, புலிகேசி மேலும் அவருடன் போராடுவது விந்திய பர்வதத்தில் முட்டிக் கொள்வதேயாகும் என்பதை உணர்ந்து சமாதானத்தைக் கோரினான். மகா புருஷரான ஹர்ஷவர்த்தனரும் அதற்கு உடனே இணங்கியதுடன் புலிகேசியின் வீர தீரங்களைப் பாராட்டி, நர்மதைக்குத் தெற்கேயுள்ள பிரதேசத்துக்குச் சக்கரவர்த்தியாக அவனை அங்கீகரித்தார்.

பின்னர், புலிகேசியின் கவனம் தென்னாடு நோக்கித் திரும்பிற்று. அவ்விதம் திரும்புவதற்கு முக்கிய காரணமாகவும் தூண்டுகோலாகவும் இருந்தவர்கள் ஜைன முனிவர்கள்.

புலிகேசி சிங்காதனம் ஏறுவதற்கு ஜைனர்கள் உதவி செய்த காரணத்தினால், வாதாபியில் சமண முனிவர்களுக்கு விசேஷ செல்வாக்கு ஏற்பட்டிருந்தது. அவர்களுடைய முயற்சியினாலேயே கங்கபாடி மன்னன் துர்விநீதனுடைய மகளுக்கும் புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனனுக்கும் விவாகம் நடந்தது.

காஞ்சி மகேந்திர சக்கரவர்த்தி ஜைன மதத்திலிருந்து விலகிச் சைவ சமயத்தை மேற்கொண்டபோது, நாடெங்கும் உள்ள சமணர்களின் உள்ளம் கொதிப்பை அடைந்தது. ஏனெனில், கல்வியிற் சிறந்த காஞ்சி மாநகரமானது வெகு காலமாக சமணர்களுடைய குருபீடமாக இருந்து வந்தது. காஞ்சியில் வேகவதியாற்றுக்கு அப்பாலிருந்த பகுதி 'ஜீன காஞ்சி' என்று வழங்கி வந்தது. தென் பெண்ணாற்றின் முகத்துவாரத்தருகில் இருந்த பாடலிபுரம் என்னும் ஊரில் தென்னாட்டிலேயே மிகச் சிறந்த சமணப் பள்ளி புகழுடன் விளங்கி வந்தது. இத்தகைய பிரதேசத்தில், சமணத்தின் செல்வாக்கு தாழ்ந்து சைவம் ஓங்குவது என்பதைச் சமண சமயத் தலைவர்களால் சகிக்கக்கூடவில்லை.

இவர்களுடைய தூண்டுதலுடனே புலிகேசியின் ஏக சக்கராதிபத்திய வெறியும் சேரவே, அவ் வீர மன்னன் இதுவரையில் யாரும் கண்டும் கேட்டுமிராத பிரம்மாண்டமான சைனியத்துடனே தென்னாட்டின் மேல் படையெடுப்பதற்குச் சித்தமானான்.

படையெடுப்புச் சைனியம் கிளம்பியபோது, வெற்றி முழக்கத்துடனே காஞ்சியில் பிரவேசித்து மகேந்திரனுக்கு புத்தி புகட்டலாம் என்ற எண்ணத்துடன் ஜைன ஆசார்யர்களும் சைனியத்துடனே புறப்பட்டார்கள். ஆனால், தலைநகருக்கும் பாசறைக்கும் வித்தியாசம் அதிகம் என்பதையும், சக்கரவர்த்தி புலிகேசிக்கும் போர்த் தலைவன் புலிகேசிக்கும் மிக்க வேற்றுமை உண்டு என்பதையும் விரைவிலேயே அவர்கள் கண்டார்கள். தலைநகரிலே பூஜ்யபாதர், ரவிகீர்த்தி முதலிய ஜைன குருமாருக்குச் சக்கரவர்த்தியைக் காட்டிலும் அதிகமான மரியாதை நடந்தது. போர்க்களத்திலோ அவர்களைத் திரும்பிப் பார்ப்பவர்கள் யாரும் இல்லை. அந்தக் குருமார் வைஜயந்தி பட்டணத்

தைக் கொளுத்தக்கூடாது என்று சொன்னதைப் புலிகேசி அலட்சியம் செய்தபிறகு, அவர்களுக்குப் போர்க்களத்தில் இருக்கவே மனங்கொள்ளவில்லை. புலிகேசியிடம் சிறிது விவாதம் செய்து பார்த்த பிறகு, அவனிடம் விடை பெற்றுக் கொண்டு அவர்கள் திரும்பிச் சென்றார்கள்.

சளுக்கச் சக்கரவர்த்தியை அவருடைய முக்கியப் படைத் தலைவர்கள் சகிதமாக நாம் சந்திக்கும்போது, மேற்கூறியபடி ஜைன குருமார்கள் பாசறையிலிருந்து போய்விட்டதைக் குறித்துத்தான் பேச்சு நடந்துகொண்டிருந்தது.

வானை அளாவிப் பறந்து கொண்டிருந்த வராகக் கொடியின் கீழே, விஸ்தாரமான கூடாரத்தின் நடுவில், தந்தச் சிங்காதனத்தில், மணி மகுடம் தரித்த புலிகேசி மன்னன் கம்பீரமாக அமர்ந்திருந்தான்.

சிங்காதனத்துக்கு எதிரே தரையிலே விரித்திருந்த இரத்தினக் கம்பளத்தில் ஏழெட்டுப் பேர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் படைத் தலைவர்கள் முதலிய பெரிய பதவி வகிப்பவர்களாக இருக்க வேண்டுமென்று, அவர்களுடைய தோற்றத்திலிருந்து தெரிய வந்தது. அவர்கள் எல்லாருடைய கண்களும் பயபக்தியுடன் புலிகேசியின் முகத்தையே நோக்கிய வண்ணம் இருந்தன.

புலிகேசியும் அவனுடைய படைத் தலைவர்களும் பேசிய பாஷையில் தமிழ்ச் சொற்களும் பிராகிருதச் சொற்களும் கலந்திருந்தன. *

"லட்சணந்தான்! இந்த திகம்பர சந்நியாசிகள் என்ன எண்ணிக்கொண்டு நம்முடன் கிளம்பினார்கள் என்று தெரியவில்லை. இவர்கள் இஷ்டப்படியே யுத்தத்தை நடத்துவதாயிருந்தால் உருப்பட்டாற் போலத்தான்" என்று புலிகேசி கூறினான்.

"அவர்கள் போய்விட்டதே க்ஷேமம்: அவர்கள் நம்மோடு வந்து கொண்டிருந்தால் யுத்தம் செய்யவே முடியாது; கோயில்களும் சங்கிராமங்களும் ஸ்தூபங்களும் கட்டிக்கொண்டு போகலாம்!" என்றான் ஒரு படைத்தலைவன்.

எல்லாரும் கலகலவென்று சிரித்தார்கள்.

சிரிப்பு அடங்கியதும் இன்னொரு படைத்தலைவன், "ஜைன முனிவர்களை அனுப்பிவிட்டோம்; சரிதான். ஆனால் புத்த பிக்ஷுவின் இஷ்டப்படிதானே யுத்தம் நடத்துவதாக ஏற்பட்டிருக்கிறது?" என்று கூறி, புலிகேசியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

"ஆகா! அது வேறு விஷயம். பிக்ஷுவின் யோசனையைக் கேட்டதில் இது வரையில் நாம் எவ்வித நஷ்டமும் அடையவில்லை. எந்தக் காரியமும் தவறாகப் போனதுமில்லை" என்றான் புலிகேசி.

பிறகு, எதிரிலிருந்தவர்களில் ஒருவனைக் குறிப்பிட்டுப் பார்த்து, "நம் ஒற்றர் படை வெகு லட்சணமாக வேலை செய்கிறது போலிருக்கிறதே! பிக்ஷுவின் தூதனை நம்முடைய ஆட்கள் கண்டு பிடித்துக் கொண்டு வருவதற்கு மாறாக, தூதனல்லவா நம்மைத் தேடிப் பிடித்திருக்கிறான்?" என்று கூறியபோது, இயற்கையாகவே கடுமையான குரலில் இன்னும் அதிகக் கடுமை தொனித்தது.

அந்த ஒற்றர் படைத்தலைவன் ஒரு கணம் தலை குனிந்திருந்துவிட்டு, பிறகு நிமிர்ந்து புலிகேசியை நோக்கி, "ஏதோ பிசகு நேர்ந்திருக்கிறது. நான் அனுப்பிய ஆட்கள் இன்னும் வந்த சேரவில்லை..." என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே கூடாரத்திற்குள் யாரோ வருவது கண்டு திரும்பிப் பார்த்து, "ஆகா! இதோ வந்து விட்டார்களே!" என்றான்.

அப்போது, பின்கட்டு முன்கட்டாகக் கட்டியிருந்த பரஞ்சோதியை முன்னால் தள்ளிக்கொண்டு, அவனைச் சிறைப் பிடித்து வந்த வீரர்கள் உள்ளே வந்து கொண்டிருந்தார்கள்.

அந்தக் காட்சியைப் பார்த்த புலிகேசி, "இது என்ன? இது என்ன? இந்தச் சிறுவன் யார்?" என்று கேட்டது, பரஞ்சோதியின் காதில் இடி முழக்கம்போல் விழுந்தது.

(தொடரும்)

---

* பிற்காலத்தில் இந்தக் கலப்பு மொழியே கன்னட மொழியாயிற்று.

"மாங்குயிலே பூங்குயிலே சேதி ஒண்ணு கேளு. உன்னை மாலையிடத் தேடி வரும் நாளு எந்த நாளு" என்னும் 'கரகாட்டக்காரன்' திரைப்படப் பாடல் திருச்செங்கோட்டிலிருந்து நாமக்கல் செல்லும்போது ஸ்பீக்கரில் கேட்டால் 'ஏதோ கோயில் நிகழ்ச்சி போலிருக்கிறது' என்று சாதாரணமாக நினைத்துவிட முடியாது.

எடப்பாளையத்தில் இருக்கும் விவேகானந்தா மகளிர் கலை அறிவியல் கல்லூரியிலிருந்து அந்தக் கரகப்பாட்டு ஒலிபரப்பப்படும் வாய்ப்பு நிறையவே இருக்கிறது.

"பாட்டுக்கு ஏற்ப எங்கள் கல்லூரி மாணவிகள் சிலர் கரகம் ஆடவும் செய்வார்கள்" என்று நம்மை ஆச்சர்யப்பட வைக்கிறார் கல்லூரித் தலைவர் கருணாநிதி. பேஷ்! இது கல்வி நிலையம் மட்டுமல்ல. கலைக் கூடமும் போலிருக்கிறது.

மகளிர் பொறியியல் கல்லூரி, பல் மருத்துவக் கல்லூரி, பிஸியோதெரபி, நர்ஸிங், கலை அறிவியல் என்று ஒரு மகளிர் பல்கலைக் கழகமே, எடப்பாளையத்தில் விவேகானந்தர் பெயரில் அமைந்திருக்கிறது.

சரி.. கரகாட்டத்துக்கு வருவோம். "வேகமாக மாறி வரும் நாகரிகத்தில் நமது மண்ணுக்கே உரிய, பல கிராமியக் கலைகள் அழிந்து கொண்டு வருகின்றன. நமது கரகாட்டக் கலையும் அப்படிப்பட்ட கலைகளில் ஒன்று. எனவேதான் எங்கள் பங்குக்கு, அதைக் காப்பாற்றும் விதமாக ஆர்வமுள்ள மாணவிகளுக்குக் கரகாட்டக் கலையைச் சொல்லித் தருகிறோம்" என்கிறார்கள் கல்லூரி நிர்வாகிகள். நிர்வாகம் கொடுக்கும் ஊக்கம் காரணமாக பவானி, செம்பொன் ஜோதி, ரம்யதீபா ஆகியோர் கரகத்தில் கலக்குகிறார்கள். அதிலும் கம்ப்யூட்டர் மாணவி பவானிக்கு 'கரக பூஷண்' பட்டமே கொடுக்கலாமாம்!

கரகத்தை வைத்துக் கொண்டு தரையில் உள்ள கர்சிப்பை வாயில் கவ்வி எடுத்தல், மண் பானை மீது நின்று ஸ்டெப் போடுதல், வாயில் மெழுகுவர்த்தி வைத்து விளக்கேற்றுதல், கண்களைக் கட்டிக் கொண்டு வாழைக்காய் வெட்டுதல் என்று பிரமிக்க வைக்கும் பல ஐட்டங்களைச் செய்வாராம் பவானி.

கொஞ்சம் தப்பினால் பெண்ணின் முகத்தில் ரத்தக் கோடு விழுந்து விடும்.

மறைந்த நடிகர் ஜெய்சங்கர் ஒருமுறை



• ஜோதிகா





• ரம்யதீபா

கல்லூரி வைரம்!



இந்த நிகழ்ச்சியைப் பார்த்துவிட்டு "ரொம்ப ரிஸ்க்கான விஷயமாக இருக்கே. கணக்குத் தவறினால் முகத்தில் பட்டு, பெண்ணின் வாழ்க்கை பாதிக்கப்படுமே" என்று கைகூப்பிக் கேட்டுக்கொண்டாராம்.

"எங்கள் கரகாட்டத்தின் மாஸ்டர் பீஸே அந்த நிகழ்ச்சிதான். அதை எப்படி விட முடியும்?" என்று கேட்கிறார்கள் செம்பொன்னும், ரம்ய தீபாவும். நாங்கள் விவேகானந்த வைரங்களைத் தேடிச் சென்ற போது பவானி ஆப்சென்ட். டைபாய்ட் ஜுரம். ஆனால் அவரது தோழிகள் விடவில்லை. அரை மணி நேரம் பல நிகழ்ச்சிகளைச் செய்து காட்டி வியக்க வைத்தார்கள். அப்படி நாம் வியந்து கொண்டிருந்தபோதுதான் திடீரென்று புயல்காற்றின் சீற்றம், யானைகளின் பிளிறல், நாய்களின் குரைப்பு, ஆம்புலன்ஸ் சைரன்.



• மதுரேஸ்வரிக்கு மகுடம்!

ருக்கிறது. தமிழ் குறைச்சு அறியும் இந்த கொல்லத்து சகோதரி. பரீட்சையின் போது, நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு தோழிகளின் அறைக்குப் போய், சேவல் போல் கூவி விட்டு வருவாராம்! அலறிப் போய் எழுந்து



மாணவிகளின் 'களுக்' சிரிப்புக்கிடையில் திரும்பிப் பார்த்தால் மற்றொரு வைரமான திவ்யா. கல்லூரியின் மிமிக்ரி கலைஞர். ஒரு மிருக காட்சி சாலையையே வாயில் வைத்திருப்பார் போலி அவர்கள் படிக்கத் துவங்குவதை, குறும்புடன் பார்த்துச் சிரிப்பாராம் திவ்யா!

"ஸார், இப்போது டெலிபோன் மணியை மிமிக்ரி செய்வதில் பயிற்சி பெற்று வருகிறார் திவ்யா. அதில் தேறிவிட்டால் எங்களுக்கு எக்ஸாம் சமயத்தில் கவலை யில்லை. வேக்-அப் காலுக்கு

# தர்மமே தப்புச் செய்தால், தாங்குமா நாடு?

• மலர்ச்செல்வி

"தயார் செய்துவிடுவோம்" என்று இன்டலடிக்கிறார் பயோ கெமிஸ்ட்ரி மலர்ச்செல்வி.

மலர் படிப்பது ரசாயனம் என்றாலும் கவிதை படைப்பதில் ஆர்வம். தர்மபுரியில் மூன்று மாணவிகள் பேருந்தில் உயிருடன் எரியூட்டப்பட்ட போது மலருக்குள் நெருப்பாக எழுந்த கவிதை.

"இலக்கணமே பிழையாய்ப் போனால் தாங்குமோ ஏடு. தர்மமே தப்பு செய்தால் தாங்குமோ நாடு!" (தர்மமே தப்பு செய்தால்..? எதைச் சொல்கிறார்? உதைக்கிறதே!) இப்போதும் இதைச் சொல்லும்போது கொதிப்பு வெளிப்படுகிறது.

• திவ்யா

'உயிர்களிடத்தில் அன்பு வேணும்' என்று சிறுமியாக இருந்தபோது படித்தது நெஞ்சில் பதிந்துவிட்டது போலும். "அது காட்டு மிருகங்களாகட்டும். நாட்டிலுள்ள செல்லப் பிராணிகளாகட்டும். அன்பைப் பொழிவோம். பாதுகாப்போம்" என்று மேடைக்கு மேடை முழங்கி அனிமல் வெல்ஃபேர் ஸ்பெஷலிஸ்ட் பேச்சாளர் ஆகி வருகிறார் மலர். அந்த வகையில் மாநில அளவில் நடந்த பேச்சுப் போட்டியில் வென்றது மூன்றாவது பரிசு.

மாணவிகள் மத்தியில் 'ஷைனி, ஷைனி' என்று அடிபடவே 'யாரந்த ஷைனி?' என்றோம். "எங்கள் கல்லூரி ஷைனியைப் பற்றிச் சொல்கிறோம் ஸார்" என்றபடி ஓட்டமும் நடையுமாக டிராக் சூட்டில் வந்து கொண்டிருந்த மகுடேஸ்வரியைச் சுட்டிக் காட்டினார்கள். அவர் வந்ததும் நம் கையில் திணித்தது ஒரு கிலோ எடையுள்ள அவரது சான்றிதழ்கள். மாவட்டம், மாநிலம், வட்டம், சதுரம் என்று எங்கு தடகளப் போட்டிகள் நடந்தாலும், தடைகளைத் தாண்டி கோப்பைகளைத் தட்டி வருகிறார் மகுடேஸ்வரி.

மகுடேஸ்வரியின் சொந்த ஊர் வீரப்பன் உலா வரும் வெள்ளித் திருப்பூர். "இன்னும் சில வருடங்களில் இந்தியாவின் தங்க மங்கையாக உருவாகப் போகிறவர் இவர்தான்" என்று உறுதியாகச் சொல்கிறார்கள் மேடம்களும் தோழிகளும்.

- ஸ்ரீனிவாசன்

படங்கள் : ராஜன்


# PAY NO INCOME-TAX UPTO RS,1,89,000

INVEST LIC JEEVAN SHREE, JEEVAN SURAKSHA, JEEVAN SANCHAY, JEEVAN SNEHA, BIMA NIVESH, JEEVAN DHARA, CHILDREN'S MONEY BACK POLICIES etc., AND EARN UPTO 11% RETURN

LIC JEEVAN SHREE POLICY WITH GUARANTEED TAX FREE RETURN UPTO 10.5% AND LIFE COVER FOR RS. 5,00,000/- SUM ASSURED

| Age | Policy Term | Premium Paying Term | Yearly Premium Rs. | Total Premium Rs. | Maturity Amount with G.A.&L.A. Rs |
|---|---|---|---|---|---|
| 30 | 25 | 16 | 25,272 | 4,04,352 | 18,12,500 |
| 35 | 20 | 12 | 36,863 | 4,42,356 | 14,50,000 |
| 40 | 15 | 10 | 52,141 | 5,21,410 | 11,87,500 |
| 45 | 10 | 6 | 88,467 | 5,30,802 | 9,37,500 |

NSC, NSS, PPF, ULIP, 9.5% P.O. MIS, COMPANY DEPOSIT, UIT & OTHER MUTUAL FUND SCHEMES, MEDICLAIM & HOUSING LOANS.

JEEVAN SNEHA, AN EXCLUSIVE POLICY FOR WOMEN CLOSES ON 31.12.2001

ASK FOR FREE PAMPHLET & FULL DETAILS

**RSN ENTERPRISES**



4850078, 4850539
4345101, 4345263
e-mail :rsn40@yahoo.com

West Mambalam Office : 40/32, Govindan Road, West Mambalam, Ch-33. (Near Srinivasa Theatre)
T. Nagar Office : 23, Rameswaram Road, T. Nagar, Ch-17. (Near Ranganathan Street)

# வட்டமேஜை

✉ 'கல்லூரி வைரம்' கட்டுரைகளைப் படிக்கும் பொழுது, மாணவப்பருவத்தில் 'ஜொலிக்காமல்' இருந்து விட்டோமே என்ற வருத்தம் ஏற்படத்தான் செய்கிறது.

மதுரை, என். பாலகிருஷ்ணன்.

✉ மார்கழி மாதத்தில் விராலிமலை அமர்ந்த பெருமானைத் தரிசிக்க தூண்டிய விதத்தில் குருஜியின் கட்டுரை அமைந்தது. முருகனை அருணகிரியார் பாடியதை விரிவாக விளக்கியது.

சென்னை- 28, ரேவதி சுந்தரராஜன்.

✉ 'கர்நாடக சங்கீதத்தின் உயிரே ஹ்ருதய பாவத்தில்தானிருக்கிறது. வார்த்தைகளை உள்ளத்தில் பதித்துக் கொள்ளாமல் நாவால் உச்சரிக்கும்போது ஹ்ருதயபாவம் 'வி.ஆர்.எஸ்' ஸில் எழுதிக் கொடுத்து, வீட்டுக்கு போய்விடுகிறது' என்று தும்புரு கூறியிருப்பது பாடகர்களின் கவனத்துக்குரியது.

சென்னை - 73, கே.வி. ராமன்.

✉ குமரி மாவட்ட கிராமங்களில் வாழை இலையை மட்டுமல்ல, ஐந்து முடைந்த ஓலைகளைக் கொண்ட ஓர் அடுக்கு ஓலையை, ஒரு பூட்டு ஓலை என்றுதான் சொல்கிறார்கள்.

சரலூர், த. ஜெகன்

✉ 'நிரபராதி' என்ற தீர்ப்பைக் கேட்டு குமுறிக் கொண்டிருக்கும் அத்தனை இதயங்களின் கொந்தளிப்பைக் காட்டும் ஈ.சி.ஜி. போன்று இருந்தது தலையங்கம்.

தஞ்சாவூர் - 7, வளர்மதி ஆசைத்தம்பி

✉ 'ஸரிகமபதநி' ஸ்பெஷல் இசைப் பிரியர்களுக்கு, இசை ரசனைக்குப் பயனுள்ளதாக இருந்தது. 'சிந்தையில் நிற்கும் சில சங்கதிகள்' என்று நித்யஸ்ரீ மகாதேவன் அளித்தது சிறப்பு நல்விருந்து.

சென்னை-30, பா. அச்சுதன்

✉ இசைச் சிறப்பிதழை 'சிறப்பு' இதழாக வெளிக்கொணர வேண்டும் என மெனக்கெட்டிருப்பதை உணரமுடிந்தது ஒவ்வொரு கட்டுரையிலும்.

சென்னை-26, சி. மகேஷ்

✉ மாதுரியின் புதுமாதிரியான 'சீரியல்கில்லர்' சிறுநாடகம் விலாநோகச் சிரிக்க வைத்தது.

மதுரை-4, வீ.பா. கிருஷ்ணன்

✉ டான்ஸி மற்றும் ப்ளசண்ட் ஸ்டே மேல் முறையீட்டு வழக்குகளிலிருந்து, ஜெயலலிதா முழுவதுமாக விடுவிக்கப்பட்ட உயர்நீதி மன்ற தீர்ப்பைப் பற்றி பல பத்திரிகைகள் மேலோட்டமாக கருத்து தெரிவித்திருந்தாலும் கல்கியின்



## இதயங்களின் ஈ.சி.ஜி!

'டான்ஸி ராணி' கட்டுரை மட்டும் வித்தியாசமாகவும் விளக்கமாகவும் இருந்தது. நெறிமுறைகளையும், சட்ட விதிகளையும் தேவையில்லாமல் சொதப்பி வெளிவந்த இந்தத் தீர்ப்பு... அ.தி.மு.க.வின் ஏதேச்சாதிகார ஆட்சிக்கும் எதிர்க்கட்சியினர் மற்றும் பத்திரிகைகள் மீது பழி வாங்கத் துடிக்கும் போக்குக்கும் பச்சைக் கொடி காட்டியது போலாகிவிடும்.

பெங்களூர், எ.சங்கர்.

✉ சட்டம், நீதி என்பது வேறு, தர்மம், நியாயம் என்பது வேறு என்ற உண்மையை, பட்டவர்த்தனமாக உணர்த்தியுள்ளது டான்ஸி தீர்ப்பு! கூடவே பண பலமும், அரசியல் செல்வாக்கும் இருந்தால் ஊசிமுனை அளவிலான சட்டத்தின் ஓட்டையில், ஒட்டகம் அளவிலான அநியாயங்கள் கூட நுழைந்து தப்பிவிட முடியும் என்பதையும் தெளிவாக்கியுள்ளது.

கபிஸ்தலம், ஆர். இரவிகுலரகுவர்மன்



ஆடை விஷயத்தில் அநியாயத்துக்குப் புரட்சி செய்து அசத்திக்கொண்டிருக்கிறார்கள் சீர்மிகு சென்னைப் பெண்கள். கல்லூரி மாணவிகள் விரும்பி அணியும் சில 'லேட்டஸ்ட் அவுட்ஃபிட்' பற்றி விசாரிக்கப் போனால், ஆடைகளின் நவீனம் மட்டுமல்ல, விலையும் இலேசாக அனஸ்தீஷியா தந்து மயக்குகிறது!

• அட்டைப்பட இளமங்கை அணிந்திருக்கும் சுரிதாரின் பெயர் ட்ரெண்டி பார்ட்டி வேர். விலை எட்டாயிரம் ரூபாய். 'ஆரி' எனப்படும் பட்டுநூல் எம்பிராய்டரி செய்யப்பட்டுள்ள துப்பட்டாவுக்குத் தனி விலை. ஜஸ்ட் மூவாயிரம் ரூபாய். சாமியோவ்!

• சொகுசு பாதி, சௌந்தர்யம் பாதி என மினுப்பு காட்டும் ஜெட்க்ரீன் ஷிஃபான் புடைவையின் சிறப்பம்சம் என்ன தெரியுமோ? பள பள முத்துக்கள். பார்டரும் தலைப்பும் அழகாக 'பீட்வர்க்' செய்யப்பட்டு கண்ணைக் கவர்வதால் விலையும் ஸ்பெஷல்தான். ஏழாயிரத்து ஐந்நூறுக்கு ஒரு பைசா குறையாது! கோல்டன், சில்வர், பிங்க், ஹாஃப்வைட், ப்ளூ என பல வண்ண, பல சைஸ் முத்துக்கள் பயன்படுத்தப்படுகின்றன. இந்தப் புடைவையைப் பொறுத்தவரை தண்ணீருக்குத் தடா! ஒன்லி ட்ரை க்ளீன் ப்ளீஸ்...

• மும்பை, டெல்லியில் படர்ந்துவிட்ட, நாகரிகம் சென்னையிலும் கால் பதித்துவிட்டது. வடக்கத்திய கல்யாணப் பெண்கள் போலவே, நம்ம ஊர் பெண்களும் ப்ரைடல் காக்ராக்களை விரும்பி அணியத் துவங்கியிருக்கிறார்கள். எத்னிக் பட்டுத் துணியில் தங்க ஜரிகை எம்பிராய்டரி செய்யப்பட்ட இது, ராஜஸ்தானிய உடை. சனியா சோளி (குஜராத்),

# ஆர்யபட்டா

ஷராரா (பஞ்சாப்), லங்கா ஜம்பர் (கர்நாடகா) லம்பாடி டிரஸ் என மாநிலந்தோறும் புதுப்பெயர் சூட்டிக் கொண்டாலும், இது நம்ம ஊர் பாவாடை-சட்டைதான்! மங்களகரமான அரக்கு நிறத்தில், ஜர்தோஸி வேலைப்பாடு செய்யப்பட்ட காக்ரா சோளியின் விலை பத்தாயிரத்து ஐந்நூறு. அப்போ மாப்பிள்ளைக்கு? டிஸைனர் டோத்தி, ஷர்வானி என சீப்பாக வாங்கிக் கொள்ள வேண்டியதுதான்!

ஆடை அழகு : **ஷங்கரி**
வண்ணப் படங்கள்: **யோகா**
நன்றி: **ப்ரேயஸி ஃபேஷன் ஹவுஸ்**

# தலைக்கு மேலே விமானம்!

**ம**துரையில் இப்போதெல்லாம் தலைக்கு மேல் குட்டி குட்டியாய் ஆளில்லா சிறிய ரக விமானங்கள் 'சர் சர்' என்று பறந்து, ஜாலி திகைப்பில் ஆழ்த்துகின்றன.

மதுரை ஏரோ மாடலிங் ஸ்போர்ட்ஸ் கிளப்பினர்தான் இந்த ரிமோட் விமானங்களைப் பறக்க விடுகின்றனர்.

"இளம் விஞ்ஞானிகளை உருவாக்கும் நோக்கோடு ஆரம்பிக்கப்பட்டது. இந்த கிளப்பில் ஆர்வமும், சிறிது விஞ்ஞான அறிவும் உள்ள யார் வேண்டுமானாலும் சேரலாம். இளம் விஞ்ஞானிகள் தங்களின் புதிய கண்டுபிடிப்புக்கு எங்களது ஆராய்ச்சிக்கூடத்தைப் பயன்படுத்தலாம்" என்கிறார், இந்த கிளப்பின் தலைவர் பார்த்தசாரதி.

இந்த குட்டி விமானங்களில் பெட்ரோலுக்குப் பதில் மெத்தனால் மற்றும் விளக்கெண்ணெய் கலந்து பயன்படுத்தப்படுகிறது. சுமார் ஐந்து கிலோ மீட்டர் வரை பறக்கும் வகையில் ரிமோட் மூலம் விமானங்களைப் பறக்க விடுகிறார்கள்.



**தகவல், படங்கள்: மது**

# தலைக்கு மேலே தலை!

**கா**வல் நிலையம் ஒன்றில் மனிதத் தலை ஒன்று காட்சிப் பொருளாய்த் தொங்க விடப்பட்டிருக்கிறது. அதுவும் மூன்று வருடங்களாக.

திருச்சி, கிராப்பட்டியைச் சேர்ந்த ஒருவர் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, தன் மகனைக் காணவில்லை என்று எடமலைப்பட்டிபுதூர் காவல் நிலையத்தில் புகார் செய்தார். விசாரணையில் அவரது மகனை, அதே ஏரியாவைச் சேர்ந்த இரண்டு வாலிபர்கள் கத்தியால் குத்தி கொலை செய்து, புதைத்து விட்டதாகத் தெரிந்தது.

தாசில்தார் மற்றும் உயர் போலீஸ் அதிகாரி முன்னிலையில் அப்பிணம் தோண்டியெடுக்கப்பட்டு, பிரேத பரிசோதனைக்கு அனுப்பப்பட்டது. பரிசோதனைக்குப் பின்னர் போலீஸார் தலையை மட்டும் எடுத்துக் கொண்டு உடலை பெற்றோரிடம் ஒப்படைத்துவிட்டனர்.

அந்தத் தலை மீண்டும் பல்வேறு மருத்துவ பரிசோதனைகளுக்குப் பின்னர், எடமலைப் பட்டி புதூர் காவல் நிலையம் வசமே வந்து சேர, போலீசார் ரசாயனம் நிறைந்த ஒரு பிளாஸ்டிக் பையில் போட்டு கயிற்றில் கட்டி போலீஸ் நிலையத்தின் உள் அறையில் தொங்க விட்டுள்ளனர்.

பிரேத பரிசோதனை முடிக்கப்பட்ட பிணத்தின் ஒரு பகுதி மூன்று ஆண்டுகளாக ஒரு காவல் நிலையத்தில் பயம் (?) கலந்த பாதுகாப்புடன் வைக்கப்பட்டிருப்பது இங்கு மட்டுமாகத்தான் இருக்கும் எனத் தெரிய வருகிறது.

ஒவ்வொரு ஆண்டும் போலீஸ் நிலையத்தில் உள்ள பொருட்களின் இருப்பு கணக்கு எடுக்கும்போது அந்தத் தலையையும் ஒரு பொருளாக எடுத்து கணக்கில் காட்டுகின்றனர்!

"கொலை வழக்குகள் சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளோடு, ரத்தக்கறை படிந்த உடைகள் அந்தந்த போலீஸ் ஸ்டேஷனில் பாதுகாத்து வைப்பது வழக்கம். அவற்றை ஸ்டேஷன்களில் உள்ள மரங்களில் கட்டித் தொங்க வைத்திருப்பார்கள். அதுபோலவே இங்கு இந்த மனிதத் தலை! விசாரணையின்போது கோர்ட்டில் இதனை ஆஜர் படுத்தவேண்டும் என்பதால் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறோம்." என்கிறார் சம்பந்தப்பட்ட காவல் நிலைய அதிகாரி.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# Are you looking for a suitable life partner ?

## Choose from 60,000 Indians / NRIs

Now you can use our unique Worldwide Matrimonial Service to find an ideal bride or groom from more than 60,000 members of all castes, religions and communities in a fast, convenient and economical method.

**CONFIDENTIALITY ASSURED**

**Register Now**
Call 044 - 498 0334 / 0358
Chennai



**the wedding hub**

**World Wide Matrimonial Service**

Regional Office: "Aswini", 1st Floor, 3, (Old No. 2),
iman Srinivasan Road, Alwarpet, Chennai - 600 018.
Tel - 044 - 498 0334 / 0358
E-mail - contact@theweddinghub.com
website: theweddinghub.com

Branches at: **Delhi - 6522687/89 , Kolkata - 4652907/08 , Mumbai - 6914433**

BUSINESS ASSOCIATES INVITED FROM ALL UNREPRESENTED AREAS.



FREE HOME DELIVERY * GREAT DISCOUNTS

FREE HOME DELIVERY * GREAT DISCOUNTS * NO LOSING * NO STRAINING



# மெடி-சர்வ்

(ஸ்ரீ அனன்யா மெடிகல்ஸின் ஓர் அங்கம்)

உங்களுக்கு தேவைப்படும் மருந்து வகைகளை வாங்கித்தரும் நண்பன்.
நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம்

சென்னையில் எங்கிருந்தாலும் **556 05 12**

இந்த நம்பருக்கு போன் செய்து தேவைப்படும் மருந்து வகைகளை ஆர்டர் செய்யுங்கள்.

*நீங்கள் ஆர்டர் செய்த மருந்துகள் உங்களின் வீடு தேடி உங்கள் கையில்.*

இலவச ஹோம் டெலிவரி சர்வீஸ் மேலும்

**பெற்றிடுவீர் 10% தள்ளுபடி**

இனி உங்களுக்கு அலைச்சல் இல்லை, பண விரயமும் இல்லை

* Conditions Apply

FREE HOME DELIVERY * GREAT DISCOUNTS * NO LOSING * NO STRAINING


FREE HOME DELIVERY * GREAT DISCOUNTS



பருக பருக ஆனந்தம்
அதிக ஆனந்தம்

**சுத்தமான தஞ்சாவூர் டிகிரி காப்பிக்கு**

# ஜீவா காபி

**கல்யாணங்களுக்கும் சுபகாரியங்களுக்கும்**

100% பியூர் பில்டர் காபி பவுடர்

*தயாரிப்பாளர்கள்:*

**ஜீவா காபி ஒர்க்ஸ்**

28, பி.வி. நாயக்கன் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை – 600 005.

இலவச டோர் டெலிவரிக்கு தொடர்பு கொள்ளவும்:(சென்னை) : 8444725, 8442667

டெல்லி, மும்பை, கொல்கத்தா.

E-mail:coffeeps@md3.vsnl.net.in

**வீ**ரையன் ஏற்படுத்திய சந்தேகத்தை பாட்டியிடம் சரவணன் ஓரிரு தினங்கள் கழித்துக் கேட்டான். ஒரு மதியப் பொழுதில்... அன்று சனிக்கிழமை என்பதால் வீட்டில் கறிக்குழம்பு. கிழவிக்கு 'கவுச்சி' என்றால் இந்த வயதிலும்கூட அப்படியொரு தொன்னைத்தனம். காலையிலிருந்தே 'அலர்ட்' ஆகிவிட்டான். கறி போடுகிறவனிடம் வாங்கி வந்த மாமிசத்தைக் கழுவுவது, அதில் மசாலா சமாச்சாரங்களை தடவிப் புரட்டுவது என்று அதன் ஒவ்வொரு கட்ட மாறுதலிலும் கிழவியின் பங்கு இருந்தது. கறி



எடுக்கிற தினத்தைப் பாட்டி ஒரு வைபவம் போல் ஆக்கி விடுவது வழக்கமாயிருந்தது.

அன்றும் அதேபோல அனைத்திலும் பங்கேற்றுவிட்டு மதியச் சாப்பாட்டை பதினொரு மணிக்கே துவங்கிவிட்டாள். வெந்து கொண்டிருக்கும்போதே, 'உப்புப் பார்க்கிறேன்' என்று எடுத்து ஊதி ஊதி சூட்டைத் தணித்து, வாயில் போட்டுக் கொண்டாள். அப்புறம் 'மசாலா நன்றாக சேர்ந்திருக்கிறதா?' என்று ஒரு ரவுண்ட். இறுதியாக, சமையல் பூரணமான பின் நடக்கும் சம்பிரதாயமான சாப்பாடு... அதில் நிதானமாகச் சாப்பிட்டு விட்டு... உட்கார்ந்திருந்தாள் கிழவி... 'பரிபூரண திருப்தி, பரிபூரண திருப்தி' என்பார்களே... அதன் விளிம்பில் இருந்தாள் கிழவி. மேற்கொண்டு சில இன்ச்சுகள் நகர யத்தனித்து வெற்றிலை இடிக்கத் துவங்கியிருந்தாள். சரவணனுக்குப் பாட்டியிடம் இப்போது பேசுவது சரியாயிருக்கும் என்று தோன்றியது. அருகிலமர்ந்து உரலைத் தான் வாங்கி இடித்தபடியே பாட்டியிடம் கேட்டான்.

"பாட்டி... அன்றைக்கு ஒரு கதை சொன்னியே என் கொள்ளுத் தாத்தா பத்தி..."

"ஆமா... இப்ப அதுக்கு என்னடா?"

"அதுலே முக்கியமான விஷயத்தைச் சொல்லாம விட்டுட்டே... அந்தச் சிலை என்னாச்சு?"

"யாருக்குத் தெரியும்? உள்ளதானிருக்கும்..."

"உள்ளன்னா? எங்க?"

"அங்கதான்டா... அப்ப புதைச்சதுதான்... பூவரசி செத்துப்போயி... என் மாமனாரும் செத்துப் போயாச்சு. அப்புறம் காத்து மழைல அந்தக் குடிசை வீடு விழுந்துச்சு. என் வீட்டுக்காரரு அந்த இடத்துல இப்ப இருக்கற வீட்டைக் கட்டினாரு..."

"கட்டுறப்ப தோண்டியிருப்பாங்கள்ல? அந்த இடத்தை..."

கிழவி குரலைத் தணித்து ரகசியம்போல் சொன்னாள்.

"அதுல வினயமா ஒரு காரியம் பண்ணினாரு. பழைய குடிசை இருந்த இடம் நடுவில வர்றாப்பல பண்ணி வீடு

பாஸ்கர் சக்தி

எடுத்துட்டாரு. அங்கன தோண்டவேயில்லை. அதுதான் இப்ப திறக்காம வைச்சுருக்கமே அந்த ரூம்பு முந்திருந்த குடிசை ரொம்பச் சிறிசுதானே. அதுனால அந்த இடத்தைச் சுத்தி தோண்டி வீடு கட்டிட்டு அந்த இடத்தை ரூம்பா மறைச்சுப்புட்டாரு. என் புருசன் விவரமான ஆளு. ஊர்ல சில பேரு கேட்டதுக்கு, குலசாமி என் கனவுல வந்துச்சு. அந்த இடத்துல அது குடியேறி இருக்குன்னு சொல்லிட்டாரு."

சரவணனுக்கு இந்தத் தகவல் அவ்வளவு தெளிவானதாகத் தெரியவில்லை.

"ஏம்பாட்டி அந்தச் சிலையைத் தோண்டி எடுத்துட்டு வீட்டைக் கட்டியிருக்கலாமில்ல. அதை விட்டுட்டு. அந்த இடத்தை மட்டும் தோண்டாம வீடு கட்டுவாங்களாக்கும்?"

"இந்தத் துளைக்கிற கேள்வியெல்லாம் நீ செத்துப் போன எம்புருசங்கிட்ட போய்க் கேளு... வேலையத்தவனே."

"இப்ப அந்த ரூமுக்குக் கீழ தோண்டுனா சிலை இருக்குமா?" என்று நேரடியாகக் கேட்டான் சரவணன்.

கிழவியின் முகம் கோபமாக மாறியது.

"முட்டாள் பயபுள்ள. என்ன கேள்வி கேக்குற? தெய்வ குத்தம்டா அது. அந்த வீட்டைக் கட்டுன எம்புருசன் ஏன் அங்க குடி போகலை தெரியுமா? எம்மேல நம்ம குல தெய்வம் வந்து எறங்கிருச்சு. அந்த வீட்டுக்கு நாம குடிபோகக்கூடாதுன்னு வாக்கு சொல்லிருச்சு. ஒரு பொண் வங்கொலையா மாண்ட இடத்துக்குக் குடிபோன குடும்பம் விளங்காதுன்னு அது சொன்னதாலதான் அந்த வீட்டை வருசக் கணக்கா பூட்டி வச்சிட்டோம். அந்த 'ரூம்'மை மட்டும் வருசத்துக்கொருக்கா நம்ம வீட்டு ஆம்பளை யாராவது போயி சுத்தம் பண்ணி தீபம் போடுவாங்க. அம்புட்டு வில்லங்கமான இடத்தைத் தொடறதுக்கும், குடிபோகவும் யோசிக்கறப்ப தோண்டிப் பாக்க நெனைக்கலாமா! இந்தா பார்றா! இந்தப் பேச்சை இந்தளவுல விட்டுரு. எவங்கிட்டயும் விளையாட்டுப் போக்கா சொல்லிக்கிட்டுத் திரியாத.. என்ன.. மனுசங்ககிட்ட வெளையாடலாம். சாமிகிட்ட விளையாடலாமா?"

சரவணன் சற்று நேரம் அமைதியாக இருந்தான். "சரி, கிழவி. ஆனா.. அவ்வளவு பயப்படுற அந்த வீட்ல வெளியூர்க் குடும்

பத்தை ஏன் குடி வச்சீங்க?"

"அது உங்கப்பன் பண்ண முட்டாள் தனம். சீக்கிரம் அவங்களைக் காலி பண்ணச் சொல்றான்னு அவங்கிட்ட சொல்லப் போறேன்."

"அப்படியா பாட்டி?" என்றான் சரவணன். மனத்தின் ஓரத்தில் இலேசான வருத்தம் எட்டிப் பார்த்தது.

"ஆமாடா.. பாவம் அந்தப் பொம்பளை. மூணு பொட்டைப் புள்ளை வச்சிருக்கா. அவ குடும்பத்துக்கு ஏதும் கெடுதல் வந்திடக்கூடாதுல்ல.."

அது மற்றொரு வளர்பிறை தினம். இவை யாவும் நடந்து ஓரிரு மாதங்கள் கழிந்து விட்டதொரு இரவுப் பொழுது.

நிலவின் ஒளியில் பூவரசம் வீடு சற்றே அச்சம் தருகிற ஒரு பழைய புகைப்படம் போலத் தெரிந்தது. காற்று சற்று வேகமாக அடித்ததில் பூவரச மரத்தின் இலைகள் மரத்திலிருந்து சிதறி விசையுடன் மிதந்து பறந்தன.

பூவரச வீட்டின் பின்னிருந்து பெண் ஒருத்தி வெளிப்பட்டாள். புடைவை முந்தானையைச் சுற்றி இடுப்பில் சொருகி இருந்தாள். கொலுசு கழற்றப்பட்ட பாதம். நுனிக் காலில் முழு எடையையும் தாங்கி ஓசையின்றி வீட்டைக் கடந்து பின்புறச் சுவரில் சற்று சிரமத்துடன் ஏறி இறங்கினாள்.

காற்றில் புடைவை பறக்க முயல அதனை வெகு சிரமத்துடன் பற்றிச் சுருட்டிக் கொண்டு விரைவாக நகர்ந்தாள். பின்புறமிருந்த அந்த மரங்களை நோக்கி...



"என்ன சார் இது! கணக்குப்படி இருக்க வேண்டியதைவிட 100 ரூ அதிகமா இருக்கே?"

"லஞ்சப் பணத்துல ஏதாவது தவறிப் போய் இதில் சேர்ந்து போயிருக்கும் சார்... மற்றப்படி சரியாத்தான் இருக்கும்!"

- சீர்காழி ரேவதி

மரங்களிடையே ஒரு நெருப்புப் பொட்டு தெரிந்தது. ஒவ்வொரு இழுப்புக்கும் ஒளிர்ந்தது.

அவள் மரத்தடியை நெருங்கியதும், அவன் பீடியை அணைத்தான். மற்றொரு கையில் அவளை இழுத்து அணைத்துக் கொண்டான். காற்றின் பெருத்த ஓசையை மீறிக் கொண்டு அவனது மூச்சுக் காற்றின் ஓசை கேட்டது.

"எம்புட்டு நேரமா நிக்கிறது!" என்றான். அவன் வீரையன்.

"எல்லாரும் தூங்கணுமில்ல?" என்றாள். அவள் மூத்தவள் அம்சவேணி.

"என்ன முடிவு பண்ணியிருக்க?" என்றான் வீரையன்.

"பயமாருக்குங்க" என்றாள் அம்சவேணி.

"பயப்படுற சமயத்தையெல்லாம் நாம தாண்டிட்டோம்டி" என்றான் வீரையன். அவளை 'டி' போட்டு அவன் அழைத்த விதத்தில் ஒரு கணவனுக்குரிய உரிமை இருந்தது. அதே அளவு உரிமையுடன் அவளைக் கையாண்ட வண்ணம் அவன் அவளுடன் பேசிக் கொண்டிருந்தான்.

"எங்கம்மாவை நினைக்கிறப்பதான் ரொம்பவும் சங்கடமாயிருக்கு" என்றாள் அம்சவேணி.

"இந்தா பாரு அம்சா. உனக்கு என்னா வயசு?"

"இருபத்தி நாலு" என்றாள் அம்சவேணி சற்றும் யோசிக்காமல்.

"பொய் சொல்ற.. உடல் அமைப்பை வைச்சே நான் கண்டுபிடிச்சிருவேன். இருபத்தி ஒன்பதா, முப்பதா.. என்ன உன் வயசு? பொய் சொல்லாதே!"

"இருபத்தி ஒம்பது" என்றாள் அம்சவேணி. முப்பது என்கிற அவலத்தை ஓராண்டாவது தள்ளி வைக்கிற எண்ணத்துடன், "எப்படி வயசை கரெக்டா கண்டுபிடிக்கிறீங்க?"

"எல்லாம் எக்ஸ்பீரியன்ஸ்தான். பார்த்தாலே உத்தேசமா சொல்லிருவேன். தொட்டுப் பார்த்தா உறுதியாச் சொல்லிருவேன்."

"ச்சேய்" என்று அவனை அடித்தாள் அம்சவேணி.

"என்னை வைய்யறதை விடு. இருபத்தி ஒம்பது வயசுல அம்மாவுக்குப் பயப்படறது

அசிங்கமில்லையா? சின்னப் பிள்ளைத் தனமில்லையா?"

"இல்லைங்க. எங்க அம்மா..."

"சொல்லிட்டடி அம்சா. ஏழெட்டுத் தடவை சொல்லிட்ட. காது மரத்துப் போச்சு. உங்கம்மா கஷ்டப்பட்டவதான். தியாகம் தான். அதுக்காக.. நீயும் அவங்க மாதிரியே கஷ்டப்படணுமா? என்ன சுகத்தைக் கண்டிருக்க நீ...? இன்னேரம் கலியாணம் ஆகி... ரெண்டு மூணு புள்ளைய பெத்திருக்க வேணாமா?"

"நான் எப்படி என் கல்யாணப் பேச்சை எடுக்கிறது? ஆனாலும் அம்மா சொல்லுச்சு. ஜாதகத்துல ஒரு குத்தமாம். அடுத்த ஆவணிக்கப்புறந்தான் கல்யாணப் பேச்சை எடுக்கணுமாம்."

"இதெல்லாம் கதைடி அம்சா, கதை! உங்கம்மா மனசுல என்ன நினைக்கிறது தெரியுமா? நம்மகிட்ட சக்தி இல்ல. பொண்ணுக அதுகளா எவனையாச்சும் இழுத்துக் கிட்டு ஓடட்டும்னுதான் நினைக்கிது."

அம்சா சட்டென்று கோபத்துடன் அவனை விலக்கினாள், "வாயை மூடு. எங்கம்மா கையிலயும் கொஞ்சம் துட்டு இருக்கு. நாங்க ஒண்ணும் வக்கத்துப் போயிடலை."

அவளது சிலிர்ப்பூட்டும் பகுதியைத் தவறாகத் தொட்டுவிட்டதை உணர்ந்த வீரையன் 'சட்'டென்று தனது தொனியை மாற்றினான்.

"ஐய்! கோவத்தைப் பாரு. சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன். அப்படிச் சொன்னா நீ எங்கூட வந்திரமாட்டயான்னு."

"இனிமே எங்க குடும்பத்தை மட்டமாப் பேசுற வேலை வைச்சுக்காதீங்க."

"சரி, சரி. சொல்லலை. மன்னிச்சுக்க." என்று கும்பிட்டான் வீரையன்.

அவள் சமாதானமாகப் புன்னகைத்தாள். மீண்டும் இளக்கமான அவளைத் தன் வசப்படுத்தியவனாக மேற்கொண்டு பேசத் துவங்கினான் வீரையன்.

"இந்தா பாரு அம்சு. நான் எப்பவோ உன்னை என் பொண்டாட்டியா மனசுல நினைச்சாச்சு. இனிமேப் பட்டு அதில எந்த மாற்றமும் கிடையாது. எங்க சாமி மேல ஆணை."

"அப்படியா! நிசமாத்தான சொல்றீங்க?" என்றாள் அம்சவேணி இறக்கத்துடன்.

"ஆமா. ஆனா உங்கம்மாவுக்குக் கோவம் ஜாஸ்தி. என்னமோ தெரியலை. அவங்க



"பஸ்ல போகும்போது தூங்காதீங்க!"

"ஏன்?"

"அப்புறம் ஆபீஸ்ல தூக்கம் வரலன்னு என் உயிர வாங்குவீங்க!"

- வே. ஆறுமுகம்

என்னைச் சரியாப் புரிஞ்சுக்கலை. தப்பாவே நினைக்கிறாங்க. உன்னை நான் கட்டிக் கிடணும்னு வந்து கேட்டா அவங்க நிச்சயம் சம்மதிக்க மாட்டாங்க. என்னமாவது காரணம் சொல்லி, திட்டி... மாட்டேன்னு சொல்லிடுவாங்க."

"அப்ப என்ன செய்யலாம்?" என்றாள் அம்சவேணி உண்மையான கவலையுடன்.

"நாம ரெண்டு பேரும் எங்கயாவது ஓடிப் போயிடறதுதான் ஒரே வழி."

"அய்யய்யோ.. மாட்டேன்.. ம்ஹூம்."

"பச்.. எங்க போயிடப்போறோம். புருசன் பொண்டாட்டியா கால்ல விழுந்தா உங்கம்மா ஆட்டோமடிக்கா சரின்னு சொல்லிடுவாங்க."

"நிஜமாவா?" என்றாள் தயக்கமாக.

"ஆமா அம்சா. எந்த அம்மாவும் மகள் கல்யாணம் பண்ணப் பிறகு புருசனைப் பிரிக்க நினைக்க மாட்டா. மகளை ஒரேயடியா வெறுத்து ஒதுக்கிடவும் மாட்டாங்க. அதிலேயும் உங்கம்மாவுக்கு உன் மேல பிரியம் ஜாஸ்தின்னு சொல்லியிருக்க."

"ஆமாம்" என்றாள் அம்சவேணி. முகத்தில் ஒரு பெருமித உணர்வு.

"அப்புறமென்ன. ஒரு நல்ல நாளாப் பாத்து கிளம்பிடலாம்."

"எங்க போறது?" இப்போது அம்சவேணியின் குரலில் கிளம்பத் தயாராகி விட்ட பயணியின் கவலை.

"ம்ஹூம். இந்த வீரையன் சுத்தாத ஊரா? போகாத நகரமா? ம்.. பாம்பேயில என் கால் படாத இடமே கிடையாது. எந்த ஊரு வேணாப் போகலாம் கண்ணு. எல்லா இடத்திலயும் நமக்கு ஆளிருக்கு."

"அப்படியா!"



## இது புதுசு!

இது சிடிக்கள் சக்கை போடு போட்டுக் கொண்டிருக்கும் காலம். பாடல்களும், படங்களும் மட்டுமல்லாது சில புத்தகங்களும் சிடிக்களாக வெளி வருகின்றன.

லேட்டஸ்ட்: இந்திய மினி யேச்சர் ஓவியங்களை சிடியாக வெளியிட்டுள்ளது மேரிட்டோ கார்ப்பரேஷன் நிறுவனம்.

"பதினான்காம் நூற்றாண்டு முதல் பத்தொன்பதாவது நூற்றாண்டு வரை உருவான கலையம்சமிக்க ஐம்பத்தோரு ஓவியங்களை, சிடியாகத் தொகுத்திருக்கிறோம். ராஜஸ்தானி, மொகல், பஹாரி, டெக்கானி போன்ற மினியேச்சர் பெயிண்டிங்ஸ் புகழ் பெற்றவை. இந்த சிடியைப் பயன்படுத்தி, கம்ப்யூட்டர் மூலம் காலண்டராகவோ, வாழ்த்து அட்டையாகவோ, எம்பிராய்டரி செய்வதற்கோ பயன்படுத்திக் கொள்ளலாம்" என்கிறார் இந்நிறுவனத்தின் தலைவர் பி.வி. பத்ரிநாத்.

க. அனந்தபத்மநாபன்





"ம்.. ஆனா கொஞ்சம் பணம் வேணும். என் காசு முழுக்க வெளியில அங்கங்க கடன், பத்துன்னு 'லாக்' ஆகி நிக்கிது. வந்துதான் வசூல் பண்ண முடியும்."

"அப்புறம் என்ன செய்யறதுங்க?"

"நீதான் ஏற்பாடு பண்ணணும்."

"நானா?"

"ஆமா. நம்ம வாழ்க்கைக்குத்தானேடா கண்ணு. மூணாவது மனுசருக்கா? நமக்குத் தானே."

"நான் என்ன செய்யறது?"

"உங்கம்மா, தன்னோட மூத்த பொண்ணு. என் செல்லம் அம்சவேணிக்கு வைச்சிருக்கிற சீதனத்தை அம்சவேணி எடுத்துட்டு வர்றதுல என்ன தப்பு?"

"ம்ஹூம்.. பயமாருக்கு."

"உனக்கு எல்லாத்திலேயும் முதல்ல பயந்தான். அப்புறம் தைரியமாயிடுவே. யோசிச்சுப் பாரு அம்சா. கையிலே கொஞ்சம் நகை, பணத்தோட கிளம்பறோம். ஜாலியா ஹனிமூன் மாதிரி. சுத்திட்டு அப்படியே எனக்கு பாம்பேலயோ, மெட்ராஸ்லயோ ஒரு வேலை தேடிட்டு... ஒரு மாசம் கழிச்சு வர்றோம். உங்கம்மா கால்ல விழுந்து ஆசி வாங்கிட்டு ஊரறிஞ்ச புருசன் பொண்டாட்டியா திரும்பவும் கிளம்பிப்போயி நம்ம லைஃபை ஸ்டார்ட் பண்றோம். என்ன?"

முப்பது வருடங்களாக வாழ்ந்து வரும் கூட்டுப் புழு வாழ்வின் அயர்ச்சியை விலக்கி, வீரையனின் வார்த்தைகள் விரித்த கனவுலகம் அம்சவேணியைக் கிளர்ச்சியுறச் செய்தது. அவள் இப்போது முழுமையாக வீரையனின் பிடிக்குள்ளிருந்தாள். உடலாலும் மனத்தாலும்...

"என்ன அம்சவேணி?"

"சரிங்க."

(தொடரும்)

பூட்டை உடைத்து

# ரூ. 15 லட்சம் கொள்ளை

## டிப்-டாப் வாலிபர்கள்

## 4 பேருக்கு வலைவீச்சு

இந்தத் தொல்லை
எதற்கு?
வந்துவிட்டது

# உமா சேஃப்டி லாக்கர்கள்!



* லாக்கர் இருக்கும் இடம் யாருக்கும் தெரியாது.
* லாக்கரைத் திறக்கும் விதம் திருடர்களுக்கு தெரியாது.
* திருடர்களால் திறக்கவோ, உடைக்கவோ முடியாது.
* திண்டுக்கல் பூட்டின் தொழில்நுட்பம்.
* Dindigul Dual-Lock Control with Master keys பொருத்தப்பட்டது.
* ஒரிஜினல் சாவிகள் தொலைந்து போனால் கூட மாஸ்டர் சாவிகளைக் கொண்டு திறந்து, பூட்டிக் கொள்ளலாம். ஆனால் தொலைந்து போன ஒரிஜினல் சாவிகள் கொண்டு வேறு எவராலும் திறக்க முடியாது.



## Digimatic (Electronic) லாக்கர்கள்:

* Secret Password-ஐக் கொண்டு திறந்து கொள்ளலாம்.
* தவறான Password-ஐ உபயோகித்தால் அலாரம் ஒலிக்கும்.
* Password-ஐ எத்தனை முறை வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம்.
* Automatic Door Lock Facility

| SL. No. | Mechanical Keys | | Dimensions H W D | Weight Kg | Electronic | |
|---|---|---|---|---|---|---|
| | Model | Rate | | | Model | Rate |
| 1 | USK-1 | 3,250 | 10" X 14" X 8" | 20 | - | - |
| 2 | USK-2 | 4,000 | 12" X 15" X 10" | 24 | - | - |
| 3 | - | - | 15" X 12" X 10" | 24 | USE-01 | 7,000 |
| 4 | USK-3 | 4,250 | 15" X 15" X 8" | 29 | USE-02 | 7,250 |
| 5 | USK-4 | 5,000 | 12" X 18" X 12" | 32 | USE-03 | 8,000 |
| 6 | - | - | 18" X 12" X 12" | 32 | USE-04 | 8,000 |
| 7 | USK-5 | 7,000 | 15" X 18" X 15" | 44 | USE-05 | 10,000 |
| 8 | USK-6 | 7,000 | 18" X 15" X 15" | 44 | USE-06 | 10,000 |

மேற்கண்ட மாடல்கள் தவிர தங்களின் தேவைக்கேற்ற அளவுகளின்படி தயார் செய்து கொடுக்கிறோம்.




# UMA & CO.

H.O. New No. 96 (274), LINGHI CHETTY STREET, CHENNAI - 600 001. PH: 5244511/ 5230362

MOBILE: 98400 34334 B.O.: New. No. 57(35), Ramani's Kalpatharu, 4th Floor, East Sambandam Rd, R.S. Puram, Coimbaroe - 641 002. Ph: 98423 34433

**Dealers:** **Huron Technologies Pvt.Ltd**, Bangalore. Ph:5511690/5573191. **Visalam &Co.** Karaikudi. Ph:439999, Cell: 98424 36925 **Yogalakshmi Enterprises**, Pondicherry. Ph: 346439 Cell: 98430 79749 **Umayal**, Kumbakkonam. Ph: 429966 / 430766 **Amaravathi Furniture.** Udumalpet. Ph: 31479 / 28465

**DEALERSHIP ENQUIRIES SOLICITED**

**Please visit our STall 102 at HOME LIFE EXHIBITION CONGRESS GROUNDS, 22nd Dec 01 To Jan 02**

''மாடியில் குடியிருக்கிற கண்டக்டரோட அழகான பொண்ணை அவர் வீட்டுக்குள்ளேயே போய் சைட் அடிச்சிட்டு வருவேன்னு சொல்றியே. எப்படிடா?''

''அதுவா...? நான் கீழே படியில நிப்பேன். கண்டக்டர் பழக்கதோஷத்துல 'யாருய்யா அது படியில?... மேல ஏறிவா'ன்னு சொல்லுவாரு. நான் போய்ப் பார்த்துட்டு வந்துடுவேன்!''

- சச்சின் சக்திவேல்





'நேற்று மட்டும் மப்ளர் இல்லாமல் போயிருந்தால் சபாவில் உட்கார்ந்திருக்கவே முடியாது!''

''ஏன் ஹாலில் ஏசி குளிர் அதிகமோ?''

''ம்ஹூம். காதை மப்ளரால் இறுக்க கட்டிக்கிட்டுத்தான் அந்தப் பாட்டைக் கேட்க முடிந்தது!'





''மாப்பிள்ளைக்கு ஹேப்பி நியூ இயர் சொன்னது தப்பாப் போச்சு.''

''ஏன்?''

''நான் ஹேப்பியா இருக்கணும்னா உங்க பொண்ணை உங்க வீட்டுக்கே கூட்டிட்டுப் போங்கன்னு சொல்லிட்டார்!''

— ஓ.பி.ஆர்.

"உங்க கச்சேரியை வழக்கமா எத்தனை மணிக்கு முடிப்பீங்க?"

"மணிக்கணக்கெல்லாம் கிடையாது. கல் கணக்குதான். நாலைந்து கல் வந்ததும் முடிச்சுடுவேன்!"

— ஞா. ஞானமுத்து







''பிறந்த நாள்
அன்னிக்கு ஊர்ல
இருக்க
ட்டேன்....ரசிகர்கள் யாரும்
வரவேண்டாம்னு அந்த
ஹீரோ அறிக்கை
விட்டிருக்காரே...ஏன்?''
''நிறைய ரசிகர்கள்
ஊருக்குத் திரும்பிப் போக
ணம் கேட்டுத் தொந்தரவு
பண்றாங்களாம்!''

''சுபாலிக்குப் பாராட்டு
விழாவாமே...ஏன்?''
''இவ்வளவு
விலைவாசிக்கு
மத்தியில கள்ளச்சாராய
விலைய
குறைச்சுட்டானாம்!''

''என்ன வக்கீல் சார்...
வழக்கமா ஒரு கேசுக்கு
வாங்கற பீஸை விட அஞ்சு
மடங்கு
கேட்கறீங்களே...ஏன்?''
''உங்க மேல இருக்கறது
வருமானத்துக்கு அதிகமா
சொத்து சேர்த்த
வழக்காச்சே!''

— அம்பை தேவா

''கடிஜோக்ஸ் இனி
எழுதுவதில்லைன்னு ஏன்
திடீர் முடிவு
எடுத்துட்டீங்க?''
''மனித உரிமை கமிஷனில்
புகார் செய்வோம்னு
மிரட்டல் வந்திருக்குதே!''

— மங்கை

''நேத்து நீங்க பாடும்போது
நிறைய துண்டுச் சீட்டு
அனுப்பினாங்களே...ஏன்?
அவங்க கேட்ட பாட்டைப்
பாடாம கச்சேரியை
முடிச்சுட்டீங்க?''
''ஏன்யா, வயித்தெரிச்சலைக்
கிளப்புற? தயவு செய்து
மங்களம் பாடவும்'னு எல்லா
சீட்டுலயும் எழுதி
அனுப்பியிருந்தாங்க!

— ஜி.வி. பிரியா





**ந**ம்ம சரத்குமார் ('சித்தி' சரத்குமார் என்று நினைத்துவிடக்கூடாது பாருங்கள். அதனால்தான் 'நம்ம..!?) ரொம்ப நாசூக்குப் பார்க்கக் கூடியவன். இடம் பொருள் அறிந்து பேசவேண்டும். இங்கிதமாய் நடந்து கொள்ள வேண்டும். பிறர் மனத்தைப் புண்படுத்தக் கூடாது என்றெல்லாம் சித்தாந்தம் வைத் திருந்தான். ஆனால் அது எத்தனை பேருக் குப் புரிகிறது. குறிப்பாக இந்த பஸ் கண்டக் டர்களுக்குப் புரிகிறதோ?

துவா குடியிலிருந்து தஞ்சாவூருக்கு எட்டு ரூபாய் பஸ் கட்டணம். பத்து ரூபாய் கொடுத்துவிட்டு, பாக்கி இரண்டு ரூபாய்க் காக அவன் பட்டபாடு. பொறியில் சிக்கிய எலி மாதிரி கண்டக்டரின் கையைப் பார்க் கிறான். முகத்தைப் பார்க்கிறான். தோளில் தொங்கிய தோல் பையைப் பார்க்கிறான்.

ஊஹூம்!

கண்டக்டர் கருமமே கண்ணாய் அடுத் தடுத்து டிக்கட் போட்டுக் கொண்டு போனாரே தவிர, மீதிப்பணம் தரவும் இல்லை. தருவதாகச் சொல்லவும் இல்லை.

கண்டக்டர் பிசியாய் இருக்கிறார். மீதி கேட்டு தொந்தரவு பண்ணக் கூடாது என்று சாந்த சொரூபியானான் சரத். வேறு என்ன செய்ய? தோல்விக்கு எதாவது சமாதானம் சொல்ல வேண்டாமா.

பஸ் தமிழ்ப்பல்கலைக் கழக வளாகம் தாண்டிக் கொண்டிருந்தது. இன்னும் ஒரு கிலோ மீட்டர்தான். தஞ்சாவூர் புதுப் பேருந்து நிலையம் வந்து விடும்.

"கண்டக்டர் சார்.."

ராப்பிச்சை தோற்றான் போங்கள்! குரலில்தான் எத்தனை பவ்யம்?

சட்டாம் பிள்ளை மாதிரி திரும்பினார், கண்டக்டர்.

"என்ன?"

"பாக்கிப் பணம்."

"பாக்கியா... எவ்வளவு?"

"இரண்டு ரூபாய்."

"டிக்கட்டை எடுங்க...பார்ப்பம்."

வாங்கிப் பார்த்துவிட்டு, "பாக்கித் தரலையா?"

"இல்லைங்களே." ரொம்ப மரியாதை. வரவேண்டியதை வாங்குவதற்குள் புழுவாய் நெளிந்தான் சரத்.

ஆனால் கொடுக்க வேண்டிய கண்டக்

## தமிழினியன்



டரோ எகிறினார்.

"என்ன சார் நீங்க? பார்த்தால் படிச்ச ஆள் மாதிரி இருக்கீங்க. துவா குடியிலிருந்து தஞ்சாவூர் வரை வாயை மூடிட்டு இருந்தால் எனக்கென்ன தெரியும். அப்பவே கேட்டு வாங்கறதுக்கு என்ன?"

முறைப்பு. வேண்டா வெறுப்பு. கண்டக் டர் விசிறி எறிந்த இரண்டு ரூபாய் நாணயம் சரத்தைப் பார்த்து கைகொட்டிச் சிரித்தது. பிரயாணிகள் சிரித்தது வேறு விஷயம்.

அழவும் முடியாமல், ஆத்திரப்படவும் தைரியம் இல்லாமல் பாதியாய் இளைத்துப் போனான் சரத்.

**வ**ந்த வேலை முடிந்தது. இனி ஊருக்குத் திரும்ப வேண்டியதுதான்.

ஆனால் இந்த தடவை எட்டு ரூபாய் சில்லறையாகக் கொடுத்துத்தான் டிக்கட் வாங்க வேண்டும். தீர்மானத்துடன் கையில்



ஸ்டாலில் 'இரண்டு ரூபாய் சில்லறையாகக் கொடுத்து டோக்கன் வாங்கவும்' என்று போர்டே போட்டிருந்தார்கள். தலைக்குமேல் தொங்கிய அறிவிப்புக்குத் தலை வணங்கினான். இனி கடைசி முயற்சி டவுன் பஸ் தான். அங்கிருந்து புது பஸ் நிலையம் போக இரண்டு ரூபாய். பத்து ரூபாய்த்தாளைக் கையில் பிடித்தபடி ஏறிக் கொண்டான். நெரிசலில் மிதந்த கண்டக்டர் அவனுக்கு முன்னால் பத்து ரூபாயை நீட்டிய பிரயாணியிடம் வந்த கோபத்தை வஞ்சப் புகழ்ச்சியாய் மாற்றிச் சொன்னார். "ரெண்டு ரூபாய் சில்லறை இல்லேன்னா கோபிச்சுக்காமல் அடுத்த ஸ்டாப்பிலே இறங்கிடுங்க சார்..."

அந்தப் பிரயாணி இறங்கினாரோ இல்லையோ, நம்ம சரத் கையிலிருந்த பத்து ரூபாய் நோட்டு, நத்தை கூட்டுக்குள் அடங்கிய விதமாய் மறைந்து போக, கடைசி இருப்பான இரண்டு ரூபாய் நாணயமும் காலியானது.

ஆக-

மறுபடியும் பழைய குருடி கதவைத்திறடி கதைதான்.

ஆனால் இந்தமுறை படு உஷாரானான், சரத்.

# அவ்வப்போது தெரியும் அழகு

இருந்த நாணயங்களைப் பத்திரப்படுத்த பிரயாசைப்பட்டான். ஆனால் முடியவில்லையே.

ஊருக்கு டெலிபோன் பேசியது 3.50. பத்து ரூபாய் கொடுத்தான். 'சில்லறையாகக் கொடுங்கள் சார்' என்று நோட்டைத் திருப்பிக் கொடுத்துவிட்டான் பூத்தில் பூத்திருந்த பூ. நம்ம சித்தாந்த வாதிக்குத்தான் பொதுவாகப் பொய் பேச வராதே. சிரிமைச் செல்வாழையிடம் பொய் சொல்வானா? மூன்றரை ரூபாய் சில்லறை நாணயம் அவுட்! டீ

கண்டக்டர் டிக்கட் கிழித்துக் கொடுத்து நகர்ந்ததுமே, "சார்... பேலன்ஸ்" என்று கை நீட்டினான்.

சட்டென்று திரும்பினார் கண்டக்டர். சரத்தின் சாமர்த்தியத்துக்கு 'ஆப்பு' வைத்ததுபோல் இருந்தது அவரது பார்வை.

"யோவ். உன் ரெண்டு ரூபாயை எடுத்துட்டு நான் எங்கேயும் ஓடிட மாட்டேன்.

உன்னை மாதிரி எத்தனை பேருக்கு நான் சில்லறைபாக்கி கொடுக்கணும் தெரியுமா? அத்தனை பேரும் சிவனேன்னு இருக்காங்க. நீ படிச்ச ஆள் மாதிரி தெரியறே. இப்படிப் பறக்கறியே.."

காறித்துப்பாத குறையாக வாரி வழங்கிவிட்டார் கண்டக்டர்.

ஒருமையில் இப்படி தன் மானம் போகும் என்று கொஞ்சமும் எதிர்பாராத சரத், சப்த நாடியும் அடங்கிப் போனான்.

அந்த வினாடியே அவன் மனத்தில் ஒரு சங்கல்பம்.

ஒன்று, பஸ் கண்டக்டரிடம் சரியான சில்லறை கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் சில்லறை பாக்கி கேட்கவே கூடாது.

சபதத்தை உரசிப் பார்க்க அடுத்த வாரமே அவன் தஞ்சாவூருக்குப் போக வேண்டியதாயிற்று. சில்லறை சேகரிப்பது அத்தனை சுலபமாக இல்லை. ஆகவே கண்டக்டரிடம் பத்து ரூபாய்தான் கொடுத்தான். ஆனால் மீதிக்காக வாயைத் திறக்கவே இல்லை.

பஸ், பேருந்து நிலையத்தில் நுழைந்தது.

சரத்துக்கு ஒரு சின்ன சபலம். இரண்டு ரூபாய் வாங்கினால் டீ குடிக்கலாமே என்று. ஆனால் கண்டக்டரின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவே பயமாக இருந்தது. இறங்கப் போகும் சமயத்தில் வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டாம் என்று மௌனமாய் எழுந்தான்.

யாரோ அவனைக் கூப்பிட்டார்கள்.

கண்டக்டர்தான். என்ன ஓர் ஆச்சரியம்!

"சார்... இந்தாங்க மீதி இரண்டுரூபாய்" என்று அவன் கையில் திணித்தார்.

சரத்துக்கு எங்கோ புஷ்பக விமானத்தில் பறப்பதுபோல் இருந்தது.

கண்டக்டரை அதிசயமாய்ப் பார்த்தான். மகிழ்ச்சி பொங்க, "நன்றி" சொன்னான்.

கண்டக்டரோ அதைச் சட்டை செய்யாத பாவனையில், "நான்தான் சார் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்" என்று புன்னகை செய்தார்.

சரத்துக்குப் புரியவில்லை.

"நீங்கள் ஏன் நன்றி சொல்லணும்."

"பஸ்ஸில் நான் எத்தனை பேருக்கு பாக்கி தருவதானாலும் ஞாபகம் வச்சிருந்து இறங்கும் போதுதான் கொடுப்பேன். ஆனால் அதுவரையில் ரொம்ப பேருக்குப் பொறுமை இருக்காது. சில்லறை பாக்கி கேட்டு என்னைத் துளைத்து விடுவார்கள். ஆனால் நீங்கள்.. கண்டக்டர் மீது நம்பிக்கை வைத்து கடைசிவரை கேட்காமலே வந்தீர்கள். அந்த விசுவாசத்துக்கு நான் நன்றி சொல்லத்தானே வேண்டும்.."

பஸ்ஸை விட்டு இறங்கிய சரத், பிளாட் பாரத்திலேயே கொஞ்ச நேரம் நின்றான்.

சித்தாந்தவாதி அல்லவா?

'உலகம் அவ்வப்போது அழகாகத் தான் இருக்கிறது' என்று சிரித்துக் கொண்டான். ◉

## ஓவியா!

திருச்சி இந்திரா காந்தி கல்லூரி மாணவியான மேனகா, எம்.எஸ்ஸி கம்ப்யூட்டர் சயின்ஸ் படித்தாலும், தூரிகையின் மீது தீராக் காதல்!



ப்ரீ-கேஜியிலிருந்தே இந்த ஓவிய ஆர்வம் வந்துடுச்சு. 'ஏ ஃபார் ஆப்பிள்' என்று டீச்சர் சொன்னால், உடனே சிலேட்டில் ஆப்பிள் வரைந்து விடுவேன். 'பி ஃபார் பால்' என்றால் உடனே பந்து ஒன்று உருவாகும். அதன் பிறகு என் வாழ்க்கையே கோடுகளும் வண்ணங்களுமாய் மாறிப் போச்சு'' என்று சிரிக்கிறார்.

பதின்மூன்று வயதிலேயே மாநில அளவு ஓவியப் போட்டியில் இவர் பெற்றது முதல் பரிசு! அதன் பிறகு 49 பரிசுகளும், மாநில அளவில் 23 பரிசுகளும் பெற்றுள்ளார். 'தனிமை' என தலைப்பிட்டு, இவர் வரைந்த செருப்பு தைக்கும் வயோதிகரின் முழு உருவ ஓவியத்துக்குத்தான் லதா ரஜினிகாந்த் வழங்கும் தயா ரஜினி விருது கிடைத்துள்ளது.

மேனகாவின் ஆதர்ச ஓவியர் ரவிவர்மா!

படம், தகவல் : திருவரசு



உ

# லக்ஷார்ச்சனை பத்திரிக்கை

திருவாரூர் மாவட்டம், குடவாசல் வட்டம்,
**சித்தாடி ஸ்ரீ காத்தாயி அம்மன் ஆலயத்தில்**
நிகழும் விஷு வருடம் தை மாதம் 4, 5
*(17, 18.1.2002)* வியாழன், வெள்ளிக்கிழமை **நவ சண்டி ஹோமமும்,**
6, 7 தேதிகளில் *(19, 20.1.2002)* லக்ஷார்ச்சனையும், அபிஷேகங்கள்,
பச்சை போடுதல் ஸ்ரீ காத்தாயி அம்மன் திருவருளால்
நடைபெறுவதால் ஆஸ்திக அன்பர்கள் யாவரும் கலந்து கொண்டு
ஸ்ரீ அம்பாள் அருளுக்கு பாத்திரர்கள் ஆகும்படி
கேட்டுக்கொள்கிறோம்.

**தங்களால் இயன்ற பொருள் உதவி செய்ய**
**கீழ்கண்ட விலாசத்தில் தொடர்பு கொள்ளவும்.**

1. கே.வி. சுப்ரமணியன், 58, ஸ்டேட் பாங்க் 2வது காலனி, நங்கநல்லூர், சென்னை - 600 061. போன் : 2330944
2. ஆர். இராமதாஸன், 56/31 சுப்ரமணிய முதலி தெரு, நெல்வயல் ரோடு, பெரம்பூர், சென்னை - 600 011. போன் : 5517213

---

# 100 % திருப்தி

**நியாயமான விலையில் அற்புதமான வீட்டு மனைகள்**
(CMDA அப்ருவ்டு மனைகள்)



## சக்தி கார்டன்ஸ்

(பூந்தமல்லி பை-பாஸ் NH-4)
(சவிதா பல் மருத்துவக் கல்லூரி சமீபம்)
**சென்னை - 600 056**

- கிண்டி, கோடம்பாக்கம், கோயம்பேட்டிலிருந்தும் வசதியான 100அடி ரோடு
- சென்னையின் எல்லா பகுதிகளிலிருந்தும் பஸ் வசதி
- உத்தேசிக்கப்பட்டுள்ள பூந்தமல்லி ரயில் திட்டம் ஒரு கூடுதல் வசதி
- சுவையான குடிநீருடன் அருகில் வீடுகளுடன் தேசிய நெடுஞ்சாலையை ஒட்டி அமைந்துள்ள இந்த மனையை உடனே வாங்குவீர்
- உடனே வீடு கட்டவோ அல்லது முதலீடு செய்வதற்கோ சரியான தேர்வு
- சுத்தமான பத்திரம் / நம்பகமான நிர்வாகம்.

**★ சுந்தரம் ஹோம் பைனான்ஸ் லிட் மூலமாக நிதி உதவியும் உண்டு.**
**Free site visit. With pick-up facility from home/office.**

Ph : 4357721/31 Fax.4353183 . Cell : 98400-44018 E-mail: blbestmail@vsnl.net http://business.vsnl.com/blbestates




**BLB Estates (P) Ltd.**
S-3,"Ramana Flats" 27 Rathna Nagar, Off Anna Salai,
(Behind Apollo Cancer Hospital), Teynampet, Chennai - 18.

நன் மதிப்பில் முதலீடு

# தேன் கூடு



பிரிட்டிஷ் பாராளு மன்றத்தின் மேல் உள்ள கோபுரத்தில் அமைக்கப்பட் டுள்ள 'பிக் பென்' கடிகாரம் இது. தொழிலாளர்கள் கயிறு கட்டித் தொங்கியவாறு கடிகாரத்தின் மேல் பகுதி யைத் துடைத்துச் சுத்தப் படுத்துவதைக் காணலாம். 'பிக் பென்' கடிகாரம் என்று கூறப்பட்டாலும், உண்மை யில் இதனுள் அமைந்த மணியின் பெயர்தான் அது.

- ஆர்.மார்க்கண்டன், சென்னை

உலகிலேயே பதவியில் இருக்கும்போது குழந்தை பெற்ற முதல் பெண் பேனசிர் பூட்டோதான். 1990ஆம் ஆண்டு, இவர் பாகிஸ்தான் பிரதமராக இருந்தபோது குழந்தை பெற்றார்.

- கே.காளிமுத்து, கமுதி






கும்பகோணத்தில் ஓடிய ஓர் ஆட்டோவின் பின்புறம் பார்த்து ரசித்த வாசகம் :

*'ஜாதிப் போர் வேண்டாம்*
*சாதிப்போர் வேண்டும்.'*

- ஔவை ஏ.எஸ்.யோகானந்தம்

# ஜல்தி ஒரு தந்தி!




தலைநகர் தில்லியில் யார் வீட்டிலாவது அசுத்த நீர் தேங்கி நின்று, கொசுக்கள் உற்பத்தியாவது தெரியவந்தால் அந்த வீட்டுக்காரர் ஐந்நூறு ரூபாய் அபராதம் கட்ட நேரிடும்! தில்லி மாநகர அதிகாரிகள் இதுவரை சுமார் 16 லட்சம் வீடுகளைச் சோதனையிட்டு அவற்றில் 3899 வீடுகள் 'கொசு உற்பத்தி நிலைய'ங்களாகச் செயல்பட்டு வருவதைக் கண்டுபிடித்துள்ளனராம்!

- ஆர். மார்க்கண்டன், சென்னை.



முசோலினியிடமிருந்து ஹிட்லருக்கு ஒரு தந்தி வந்தது. "நிலைமை படுமோசமாக இருக்கிறது. உணவுப் பொருள் தேவை. உடனே அனுப்புக!" அதற்கு "ஒரு தானியம்கூட அனுப்ப இயலாது. எல்லாம் ரஷ்யப் போர் முனைக்குத் தேவைப்படுகின்றன. ஆகவே வயிற்றை பெல்ட்டினால் இறுக்கிக் கட்டிக் கொண்டு சமாளிக்குமாறு ஆலோசனை கூறுகிறேன்" என ஹிட்லர் பதில் தந்தி கொடுத்தார்.

முசோலினி தளரவில்லை. "தயவு செய்து பெல்ட்டுகளையாவது அனுப்பி வையுங்கள்!" என்று மறு தந்தி கொடுத்தார்.

– க. பூங்கொடி, சித்தோடு

நம் நாட்டில் ரூபாய் நோட்டுக்களை, தபால் கவரில் வைத்து அனுப்புவது சட்டப்படி குற்றம். ஜப்பானில் ரூபாய் நோட்டுகளை ஒரு கவரில் போட்டு சாதாரண தபாலில் அனுப்பி விடுகிறார்கள். அது பத்திரமாகப் போய்ச் சேர்ந்தும் விடுகிறது.

- *அனிதா ராமச்சந்திரன்*



ஜீவராசிகளில் மிகவும் சுத்தமானது சுண்டெலிதான். அது நிமிஷத்துக்கு மூன்று தடவை தன்னைத் துடைத்துக் கொள்கிறது. இதனால் அதன் ஆயுளில் பாதி, சுத்தம் செய்து கொள்வதிலேயே செலவாகி விடுகிறது.

- எஸ்.ராஜமழை, சென்னை



# பாலக்காடு நாராயணசாமியின் பத்துக் கட்டளைகள்



**நா**ரத கான சபாவின் 'நாதப்பிரம்மம்' விருது பெற்ற பாலக்காடு கே.வி. நாராயணசாமியை நாம் சந்திக்கப் போனபோது, லண்டன், ஜெர்மனி ஆகிய நாடுகளில் நிகழ்ச்சிகள் அளித்துவிட்டு வந்த ஜெட்லேக் களைப்போடுதான் இருந்தார்; உடனிருந்து உதவினார் துணைவி பத்மா நாராயணசாமி.

லண்டனில் ஒரு கச்சேரி தவிர, பாரதிய வித்யா பவனில் ஒரு வாரப் பயிலரங்கம், ஜெர்மனியில் மியூனிக் நகரில் ஒரு கச்சேரி. பாலக்காடு ரகுவின் ஜெர்மன் மாணவர் ஹெர்பர்ட் லேங் ஏற்பாடு செய்திருந்தாராம். ஃப்ராங்க்ஃபர்ட்டில் வானொலிப் பேட்டி. "மியூனிக்கில் அவ்வளவு பேரும் மேற்கத்திய ஆடியன்ஸ். மழையாக இருந்தும் அரங்கத்துக்கு வந்து ரசித்துக் கேட்டார்கள். இரவு 8 மணிக்குத் தொடங்கி 10.30 மணி வரை பாடினேன். கடைசி வரை இருந்து கை தட்டிப் பாராட்டினார்கள். புறப்படு முன் இங்கே தொண்டை சரியாகவே இல்லை. அங்கே அந்தக் குளிரிலும் ஒரு பாதிப்பும் இருக்கவில்லை. இருமல்கூட வரவில்லை!" என்றார் கே.வி.என்.

கே.வி.என்னைச் சுற்றி இளைஞர் கூட்டம். அவரது சீடர்கள். கதிர் கேரளாவிலிருந்து; பிரசாந்த்தும் பட்டாபியும் இஞ்சினியர்கள்; கர்நாடகாவிலிருந்து. சோமசுந்தரம், ஓதுவார் ஒருவரின் மகன், சென்னையிலிருந்து பாலாஜி, ஸ்ரீலங்காவிலிருந்து சாரங்கன். "இவரிடம் இசை கற்பது ஒரு தவம் மாதிரி" என்கிறார் சோமசுந்தரம். "கட்டாயம் இசையைத் தொழிலாகக் கொள்ள முடியும்" எனகிறார் பட்டாபி...

ஓர் இசைக் கலைஞரிடம் முக்கியமாக இருக்க வேண்டிய அம்சங்கள் என்ன?

பதிலளித்தார் கே.வி.என்.

1) குரல்வளத்தை, அதாவது சாரீரத்தை, வெகு நன்றாகக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். தெய்வ சிந்தனையோடு, கட்டுப்

பாடான வாழ்க்கை அவசியம். எல்லா வற்றிலுமே மிதமாக இருக்க வேண்டும்.

2. இதயசுத்தி எனப்படும் நல்ல மனசு வேண்டும்.

3. நன்றாகப் பாடுகிற எவரையும் சந்தோஷத்தோடு பாராட்ட வேண்டும்.

4. நல்ல சங்கீதத்தைத் தெரிந்து கொள்வதில், நல்ல குரு கிடைக்கப் பெற்றவராக இருக்க வேண்டும்.

5. சிடர்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் போது அவர்களின் சக்தியையும், தரத்தையும் தெரிந்து சொல்லிக் கொடுக்க வேண்டும். சிடர்களை நம் குழந்தைகள் போல நடத்த வேண்டும்.

6. சொல்லிக் கொடுக்கிறவருடைய நடைமுறைகள், உற்சாகம் ஊட்டுகிற மாதிரி இருக்க வேண்டும்.

7. கற்பனை என்பது எதை வேண்டுமானாலும் செய்யும் மனக்குரங்கு போன்றது. அதற்கு அதிக இடம் கொடுத்துவிடக் கூடாது. பொக்கிஷம் போல நம் முன்னோர்கள் கொடுத்திருக்கிற இந்த இசையைக் காப்பாற்ற வேண்டும் என்கிற உறுதி வேண்டும்.

8. உச்சரிப்பு மிக முக்கியம். மொழிக்கு என்று ஓர் உச்சரிப்பு இருப்பதுபோல, இசை வடிவத்துக்கும் ஓர் உச்சரிப்பு உண்டு. எனவே வார்த்தைகளை இசையோடு வழங்கத் தெரிய வேண்டும்.

9. பாவம் என்பது வார்த்தைகளில் இல்லை. இசையில்தான் இருக்கிறது. ஏன் எல்லோரும் ராகத்தைக் கேட்டே சந்தோஷப்படுகிறார்கள். அதில் வார்த்தைகளா இருக்கிறது? உச்சரிப்பில் சங்கீதத்தின் ஓசைதான் இருக்கிறது. பாவத்தை இசையில் கொண்டு வர வேண்டும்.

10. ரசிகர் நெகிழ்ந்து போய்விடுகிற மாதிரி பாட வேண்டும். ஆனால் பாடகன் நெகிழ்ந்து உணர்ச்சிவசப்பட்டுவிடக் கூடாது. நான் மாஞ்சி ராகத்தில் 'வருகலாமோ' பாடும்போது, மாஞ்சி ராகப் பிரயோகங்கள் எல்லாம் சரியாக இருக்கிறதா என்றுதான் நான் பார்ப்பேன். அங்கே நந்தன் நடராஜர் சந்நிதியில் நிற்கிற காட்சியை அல்ல. நான் நெகிழ்ந்து போய் விடாமல் என்னைக் காப்பது என் இசைதான்.

ஐ.ஐ.டி. போலவே, அண்ணா யுனிவர்சிடியிலும் இசைச் சங்கம் தொடங்கப் போகிறார்கள். தொடங்கி வைத்து முதல் கச்சேரி செய்பவர் கே.வி.என். தான்!

சந்திப்பு: சாருகேசி

# காஞ்சீபுரம் வருகிறோம்

மாதம் ஒரு நகர விஸிட் ஆரம்பமாகிறது. உங்கள் நகரம் பற்றிய அனைத்துச் செய்திகளையும் புதையலாகக் கண்டெடுத்து நகரச் சிறப்பிதழாகத் தரப் போகிறது கல்கி.

முதல் நகரமாக காஞ்சிபுரம் வருகிறோம். உங்கள் நகரின்...

* வரலாற்றுச் சிறப்பு,
* தொடரும் சர்ச்சை
* பொதுப் பிரச்னைகள்
* கிடப்பில் போடப்பட்ட திட்டங்கள்




* ஆன்மிகச் சிறப்பு
* அதிசய மனிதர்கள்

இப்படி...

– உங்கள் ஊரின் 'அ' முதல் 'ஃ' வரை எதைப் பற்றியும் சின்னதாய் நான்கு வரிக் கடிதத்தில் கோடு கிழித்துக் காட்டுங்கள். கல்கி நிருபர் குழு ரோடே போட உங்கள் நகர் நோக்கி வருகிறது!

*கடைசித் தேதி* : **31.12.2001**

"அருமை அம்மா, மெக்ஸிகோவிலிருந்து திரும்பி வரவே மனமில்லை. மெக்ஸிகோ பலவிதங்களில் தென்னிந்தியாவையும், பாட்டியின் கிராமத்தையும் எனக்கு ஞாபகப்படுத்தியது. கடலுக்கு அடியில் சப்மரீனில் போனோம். பழைய 'மாயன்' நாகரிகத்தின் சிதிலத்தைப் பார்த்தோம். கடல் அலைகளுள் ஆடினோம். எங்கள் எல்லோருக்குமே தேவைப்பட்ட விடுமுறை இது. படங்களை மின்-அஞ்சல் மூலம் அனுப்பி வைக்கிறேன். டிஜிட்டல் கேமராவைக் கம்ப்யூட்டரில் இணைத்துப் படங்களை மின் - அஞ்சலில் அனுப்ப அருணாவுக்குக் கூடத் தெரியும். நான் இனிதான் கற்றுக் கொள்ள வேண்டும்..."

விது மின்-அஞ்சல் எழுதுவதை நிறுத்தினாள். கம்ப்யூட்டர் திரையை வெறித்துக்கொண்டு சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள். இனி அவள் கற்றுக் கொள்ள வேண்டியது எவ்வளவு இருக்கிறது. வீட்டு வேலைகள் அவ்வளவுக்கும் தானே பொறுப்பெடுக்க, வாரத்தில் ஐந்து நாட்கள் குழந்தைகளுக்கு அம்மாவாகவும் அப்பாவாகவும் இருக்க, குழந்தைகள் அப்பாவுடன் இருக்கும் வார இறுதி நாட்களில் தனியளாய் இருக்க, ஜீவனாம்சம் இருந்தாலும் நாளடைவில்



# றயில் 13

தன் சொந்தக் காலிலேயே நிற்க. இன்னும் நிறையவே...

அம்மாவிடம் எப்படி விவாகரத்து பற்றிச் சொல்வது? தொலை பேசியில் கூப்பிட விருப்பமில்லை. இப்போது இருக்கும் மன நிலையில், அம்மாவின் குறுக்கு விசாரணையையும் இறுதித் தீர்ப்புகளையும் தாங்கும் சக்தி வித்யாவிடம் இல்லை. பத்தாயிரம் மைல்களும் மின் - அஞ்சலும் தரும் தொலைவும், அந்தத் தொலைவு தரும் உணர்வுபூர்வப் பாதுகாப்பும் அவளுக்குத் தேவை.

"உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல வேண்டும். நானும் ரமேஷும் பிரியப் போகிறோம்..."

இப்படிப் பட்டென்று போட்டு உடைப்பதா. க்ளிக்... க்ளிக்... க்ளிக்... வரிகளை அழித்தான்.

மீண்டும் எழுதினாள். "உன் உடல்நிலை இப்போது எப்படி இருக்கிறது? இப்போது நான் சொல்லப் போகும் விஷயத்தினால் அதிகமாக அதிர்ச்சி அடைய



காஞ்சனா தாமோதரன்


"தமிழ்ப் படத்துக்குப் பாட்டு எழுத டைரக்டர்க்கிட்ட போனியே என்ன சொன்னாரு?"

"ஆதிவாசிகள் மொழியைப் படிச்சிட்டு வரச் சொன்னாரு!"

- சீனு

மாட்டாய் என்று நம்புகிறேன். நானும் ரமேஷும் சட்டபூர்வமாகப் பிரிவது என்று முடிவு செய்திருக்கிறோம். அவர் வேறு ஒரு அப்பார்ட்மெண்ட்டில் குடியிருக்கப் போகிறார்..."

எப்படி எழுதினாலும் இது சரியாக அமையப் போவதில்லைதான். அப்படியே இருக்கட்டும். பச்சைப்பட்டு சுற்றிக் கொடுப்பதனால் மட்டுமே பூசணிக்காய் பொன் வண்டாகி விடாது.

"நான்தான் விவாகரத்துப் பேச்சைத் தொடங்கியது என்பதையும் இப்போதே சொல்லி விடுகிறேன். நீ அதிர்ச்சி அடையலாம். இவ்வளவு நல்ல கணவன் உனக்கு எங்கே கிடைக்கப் போகிறான் என்று வழக்கமான அம்மா வசனம் பேச ஆசைப்படலாம். அப்பாவும் நீயும் ஏதோ தப்பு செய்து விட்டதாகக் கவலைப்படலாம். தயவு செய்து வேண்டாம். ரமேஷ் நல்ல மனிதர் என்பதில் எனக்கும் சந்தேகமில்லை, அம்மா. இரண்டு நல்ல மனிதர்கள் சேர்ந்து வாழ்வதால் மட்டுமே, மணவாழ்வு சரியாக அமைந்து விடுகிறதா என்ன? 'நல்ல' என்பதுமே அந்தந்தச் சூழலையும் நிலைமையையும் பொறுத்து மாறுவது..."

நிறுத்தினான். எழுதியது சிறுபிள்ளைத்தனமாய்த் தெரிந்தது. தெளிவான பதில்கள் அவனிடம் இல்லை என்பது அம்மாவுக்குத் தெரிந்துவிடும். சரி, இப்போதாவது தெரியட்டுமே.

"குழந்தைகள்தான் இதில் முக்கிய கவலை என்பது உனக்கும் புரியும். அதுவும், அவர்களுக்கு இந்த நாட்டில் இருக்கும் ஒரே சொந்த பந்தம் நானும் ரமேஷும் மட்டும்தான் என்று நினைக்கும்போது கவலையோடு பயமும் சேர்ந்து கொள்கிறது. ஆனால், அவர்கள் இந்த விஷயத்தை உள்வாங்கிய விதம் நானும் ரமேஷும் எதிர்பாராதது..."

மெக்ஸிகோவின் நட்சத்திரக் காற்றை அள்ளி வரும் தென்னங்கீற்றுகளின் கீழ், குழந்தைகளுடன் பேசியது நினைவில் அப்படியே உறைந்து போயிருந்தது. என்றும் அழிக்க முடியாத சித்திரமாய்.

"...அதனால, அப்பாவும் அம்மாவும் தனித் தனியா இருக்கலாம்னு நினைக்கிறோம். இரண்டு பேரும் இன்னும் நல்ல ஃப்ரெண்ட்ஸ்தான், "ரமேஷ் சுற்றி வளைத்து நீளமாய்ப் பேசி முடித்தான்.

சிறிது நேரம் மௌனம். இலைகள் சலசலப்பதும், பீங்கான் தட்டுக்களில் முள்கரண்டியும் கத்தியும் உரசிச் சிலம்புவதும், கண்ணாடிக் கோப்பைகளில் ஐஸ்கட்டி கலகலப்பதும் தெளிவாய்க் கேட்டது. 'மாரியாச்சி' இசைக்குழு ஓய்வெடுக்கப் போயிருந்திருக்க வேண்டும்.

"அப்போ நாய்க்குட்டி அப்பாகிட்டே இருக்குமா, அம்மாகிட்டே இருக்குமா?" அம்பிகா கேட்ட முதல் கேள்வி. "நாய்க்குட்டி யார்கிட்டே இருக்கோ, அவங்ககிட்டேதான் நான் இருப்பேன்" ஒரு நிமிட யோசனைக்குப் பிறகு அருணாவைத் திரும்பிப் பார்த்தான்.

"அக்கா யார்கூட இருக்காளோ அவங்க கூடத்தான் நான் இருப்பேன்."

ரமேஷின் அதிர்ச்சி அவன் முகத்தில் தெரிந்தது. குழந்தையின் முதல் கேள்வி. இப்படி ஒரு பங்கீட்டுக் கேள்வியாக இருக்குமென்று அவனுமே நினைத்திருக்க மாட்டான். அழுகை, கோபம், பயம், வெறுப்பு, கசப்பு... ஏதாவது உணர்வுகளைத்தான் இயல்பாக எதிர்பார்த்திருப்பான்.

"நம்ம வீடு, நாய்க்குட்டி எல்லாம் அம்மாகிட்டே எப்பவும் போல இருக்கும். நான் ஒரு தனி அப்பார்ட்மெண்ட்டில் இருக்கப் போறேன். அவ்வளவுதான் வித்தியாசம். அதான் அப்பாவும் அம்மாவும் ஃப்ரெண்ட்ஸ்னு சொன்னேனே..."

'ஃப்ரெண்ட்ஸ்?! சேர்ந்து இருக்க முடியாத ஃப்ரெண்ட்ஸ்?' அருணாவின் உயர்த்திய புருவமும் கூரான பார்வையும் கேள்வி கேட்டன.

அம்பிகா தொடர்ந்தாள். "என் க்ளாஸ்லே வால்ட்டர், ஜினா இரண்டு பேரோட அப்பா- அம்மாவும் டிவோர்ஸ் பண்ணாங்க. அவங்களுக்கு ரெண்டு ரெண்டு வீடு இப்போ. வால்ட்டரோட அப்பாவும் ஒரு நாய்க்குட்டி வாங்கினார். இப்போ வால்ட்-

டருக்கு ரெண்டு நாய்க்குட்டி. ஜினாவோட அம்மா இன்னொருத்தரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாங்க...'' கண்கள் விரிய அம்பிகா நிறுத்தினாள். அப்பாவையும் அம்மாவையும் மாறி மாறிப் பார்த்தாள். கொஞ்சம் குழம்பியவளாய் அருணாவைப் பார்த்தாள். அருணா இறுகிய முகத்துடன் நட்சத்திரங்களைப் பார்த்தாள்.

"அம்பிகாச் செல்லம், நானும் அப்பாவும் தனித் தனி வீட்டுல இருக்கப் போறோம். அவ்வளவுதான் வேற ஒண்ணும் இல்லை. என்ன அருணா?"

அருணா அப்பாவையும் அம்மாவையும் பார்ப்பதைத் தவிர்த்தாள்.

"அம்பிகா, இது நல்லதுக்குத்தான்" என்று சுருக்கமாக முடித்தாள். ரமேஷ் அதிர்ந்து விறைத்துப் போவது தெரிந்தது. விதுவைப் பார்த்த அவன் கண்களில் வலியின் நிழல்.

"குழந்தைகள் எதையும் தாங்கிக் கொள்ளத் தயாராக இருப்பவர்கள், சிறிய உருவில் உள்ள பெரியவர்கள் என்பதாய் இந்தச் சமூகச் சூழல் வெளித்தோற்றம் கொடுக்கிறது. ஆனால், உள்ளிருப்பது இளம் பிஞ்சுதான். அது வெம்பிப் போகுமோ என்று வேதனையாக இருக்கிறது அம்மா. அருணாவையும் அவள் மௌனத்தையும் நினைத்தால் பயமாக இருக்கிறது. அவளே அம்பிகாவுக்கு அம்மா போல் நடந்து கொள்கிறாள் இப்போதெல்லாம்."

அப்பாவும் அம்மாவும் பிரிவது நல்லதுக்குத்தான் என்று அருணா சொன்னது இன்னும் ஊவா முள்ளாய்த் தைத்தது. அவளின் பதினொரு வயது மனத்தில் என்ன ஓடுகிறதென்று தெரியவில்லை.

ஆனால், அருணா, அம்பிகாவை அவளிடமிருந்தும் ரமேஷிடமிருந்தும் அடைக்கோழியின் தீவிரத்துடன் பாதுகாக்கிறாள். இதையெல்லாம் அம்மாவுக்கு மின் அஞ்சலில் எப்படி விளக்கிச் சொல்வது.

"ராஜியையும், ரஞ்சியையும் தவிர எங்கள் இந்திய நண்பர்கள் யாருடனும் இன்னும் இதைப் பகிர்ந்து கொள்ளவில்லை. இங்குள்ள பலரும் என்னைப் புது மணப் பெண்ணாய் வீட்டுக்குக் கூப்பிட்டு விருந்து வைத்தவர்கள் - உனக்குத் தெரியும். நண்பர்களுக்கு முதலில் வருத்தமும் சங்கடமும் இருக்கலாம். ஆனால், ரமேஷுக்கும் எனக்கும் இதில் சங்கடமில்லை என்பதைப் புரிந்துகொண்டால், காலப்போக்கில் பழகிக் கொள்வார்கள் என்று நம்புகிறோம். ராஜிக்கு என் மேல் கொஞ்சம் வருத்தம். இரண்டு



''கொலை நடந்ததை நேரில் பார்த்த சாட்சி யாராவது இருக்காரா?"

"இல்லை, யுவர் ஆனர்... ஆனால் பக்கவாட்டில் பார்த்த சாட்சி ஒருவன் இருக்கான், அழைக்கவா?"

தூத்துக்குடி வி. சகிதா முருகன்.

குழந்தைகளுக்கு அம்மா என்பதை மறந்து விட்டேன் என்று நினைக்கிறாள். அதை வெளிப்படையாகவே என்னிடம் சொல்கிறாள்; ஆனால், நான் தளர்ந்து போகும் நேரங்களில் என்னைத் தாங்கிக் கொள்கிறாள். ரஞ்சியுமே நான் அவசரப்பட்டு விட்டதாக நினைக்கிறாள். திரும்ப முடியாத 'ஈகோ' பிரச்னையாகி விட்டதே இப்போது என்கிறாள். ஆனால் அவளது பலமும் என்னைத் தூக்கிப் பிடித்துக்கொண்டிருக்கிறது. இவர்கள் இருவரின் நட்பிலும் ஏதோ ஒரு மென்மையான இதம் இருக்கிறது. பெண்களுக்குள் மட்டுமே சாத்தியமாகக் கூடிய ஆழமான நட்போ இது..."

ரமேஷைத் தவிர, அவள் வாழ்க்கையில் ஏற்பட்ட உணர்வுபூர்வமான நட்புகள் ராஜியும், ரஞ்சியும்தான். சிறுவயதில் அப்பாவுக்கு ஊர் விட்டு ஊர் மாற்றலாகிக் கொண்டேயிருக்கும். அப்போதுதான் துளிர்க்க ஆரம்பித்த நட்புகளைக் கிள்ளிப் போட்டுவிட்டு, அவள் புதிய நட்புகளைத் தேடி ஓட வேண்டியிருக்கும். எல்லா உறவுகளுக்கும் அடிப்படை நட்புதான் என்று ஜே.என்.யூ. மாணவப் பட்டிமன்றத்தில் முழங்கிப் பரிசு வாங்கியபோது அவளுக்கு உறவுகள் பற்றியும் தெரியாது; நட்புகள் பற்றியும் தெரியாது. அவளுக்கு ரமேஷ்தான் முதல் நட்பு. முக்கிய நட்பு. அதையும் கிள்ளிப் போட்டு ஓட வேண்டிய அவசியம் இப்போது எப்படி வந்தது. "இது நல்லதுக்குத்தான்'' என்று ஒரு பதினொரு வயது நண்டு, விரக்தியுடன்



"நல்ல வரனா தரகர்கிட்டே கேட்டது தப்பாப் போச்சு?"
"ஏன், என்னாச்சு?"
"முருகேஸ்வரன், ஈஸ்வரன், லோகேஸ்வரன்னு மாப்பிள்ளை கொண்டு வர்றாரே..."

- கடற்கரை நடேசன்

சொல்லும் நிலைமை எப்படி வந்தது?

"அம்மா, ரஞ்சியும் ராஜியும் நினைப்பதுபோல் இது ஒரு திடீர் நிகழ்வு இல்லை. ஆனால், கோணல் எங்கே ஆரம்பித்தது என்று தெரியவில்லை. ரமேஷ் சொல்வது போல் இது எனக்கே புரியவில்லை."

விது நீண்ட நேரம் கம்ப்யூட்டர் திரையையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். இதுவரை அம்மாவுக்கு அவள் இவ்வளவு நீள கடிதம் எழுதியதில்லை. சம்பிரதாயமான இரண்டு வரிகளுடன் முடித்து விடுவது வழக்கம். இதை அம்மாவுக்கு அனுப்பவா இல்லை அழிக்கவா. அவள் சுட்டுவிரல் 'மௌஸ்' மீது தயங்கியது. கொஞ்ச நேரம் கழித்து முடிவு செய்யலாம். அவள் ஒரு கஜல் சி.டி.யைக் கம்ப்யூட்டரில் போட்டாள்.

"மேரி தன்ஹாயியோங் தும் ஹீ லகா லோ முஜ்கோ ஸீனே ஸே..."

"என் தனிமையே, நீயாவது வந்து என்னை அணைத்துக்கொள்..." பியாரியம் வர்பர்டோனியின் வரிகள் ஜெகஜித் சிங்கின் குரலில் இழைந்தன. கட்டிப் போட்டிருந்த கண்ணீரும் உணர்வுகளும் இசையுடன் குழைந்து வழிந்தன.

நேரம் கடந்தது.

அறைக்குள் கவிய ஆரம்பித்திருந்த கருக்கலில் கம்ப்யூட்டர் திரை வெளிர்நீலமாய் ஒளிர்ந்தது. கடிதத்தைத் தொடர்ந்தாள். "அம்மா, குற்ற உணர்வும், பயமும், தனிமையும் நிச்சயமின்மையும், கண்ணீரும், குழப்பமும், சுயபரிதாபமும், இன்னும் புரியாத பல உணர்வுகளும் என்னுள் அலைகின்றன. ஆனால், அனைத்துக்கும் அடியில், நான் செய்த முடிவுதான் ரமேஷுக்கும் குழந்தைகளுக்கும் நல்லது என்கிற நிம்மதி ஒரு மெல்லிய இழையாய் ஓடுகிறது. இந்த இழையைப் பிடித்துக்கொண்டே பின்னோக்கிப் போய், மூலகாரணங்களையும் என்னையும் என்றாவது நான் புரிந்துகொள்வது அவசியம். இப்போதைக்கு, இந்தச் சிறு நிம்மதி இழையைப் பிடித்துக்கொண்டு நான் முன்னோக்கிப் போக வேண்டியிருக்கிறது. என் குழந்தைகளுக்காக மட்டுமில்லை. எனக்காகவும் கவலைப் படாதே. அன்பு மகள், விது" 'க்ளிக்' அஞ்சல் மின்வெளியில் அம்மாவை நோக்கிப் பறந்தது.

அம்மாவின் மின் - பதில் பத்தே நிமிடங்களில் வந்தது. விதுவின் கடிதத்திலிருந்து சில பகுதிகளை 'வெட்டி, ஒட்டி' தனது சில வரிகளையும் சேர்த்திருந்தாள்.

"அருமை விது, சம்பிரதாய வார்த்தைகள் நமக்குள் தேவையில்லை. உன் அனுமதியுடன், ரமேஷுக்கு ஒரு மின்-அஞ்சல் நான் அனுப்புவது மரியாதை- அது பற்றி எழுது. உன் கடிதத்தின் சில பகுதிகள்: 'இரண்டு நல்ல மனிதர்கள் சேர்ந்து வாழ்வதால் மட்டுமே, மணவாழ்வு சரியாக அமைந்து விடுகிறதா என்ன?' 'குழந்தைகளின் உள்ளிருப்பது இளம் பிஞ்சுதான். அது வெம்பிப் போகுமோ என்று வேதனையாக இருக்கிறது, அம்மா. அருணாவையும் அவள் மௌனத்தையும் நினைத்தால் பயமாக இருக்கிறது.' 'அனைத்துக்கும் அடியில், நான் செய்த முடிவுதான் ரமேஷுக்கும் குழந்தைகளுக்கும் நல்லது என்கிற நிம்மதி ஒரு மெல்லிய இழையாய் ஓடுகிறது.' என் கடந்த காலத்தின் எதிரொலி இந்த வரிகளில் கொஞ்சம் தெரிகிறது என்றால் நீ ஆச்சரியப்படுவாய். ரஞ்சி, ராஜியுடன் உனக்குள்ள நட்பு பற்றி நீ எழுதியது: '... நட்பிலும் ஏதோ ஒரு மென்மையான இதம் இருக்கிறது. பெண்களுக்குள் மட்டுமே சாத்தியமாகக் கூடிய ஆழமான நட்போ இது.' மற்றொரு பெண்ணாக, சினேகிதியாக உன்னைப் புரிந்து கொள்ள நானும் ஆசைப்படுகிறேன். அப்பா காலத்துக்குப் பிறகு டெல்லிக்கு வருவதையே நிறுத்திக்கொண்டாய். குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு விரைவில் வருவாயா? அன்புடன், அம்மா."

(தொடரும்)

# ஆண்டிப்பட்டிக்கு அச்சாரம்?...

சென்னை காமராஜ் அரங்கத்தில் மரகதம் சந்திரசேகர் நினைவு அஞ்சலிக்கூட்டம். நீண்ட காலத்துக்குப் பிறகு தமிழக காங்கிரஸ் தலைவர்களும், ஸ்டாலினும் ஒரே மேடையைப் பகிர்ந்து கொண்டதால் அரசியல் நெடியை எதிர்பார்த்து அரங்கத்தில் கூட்டம் அலைமோதியது.

ராஜஸ்தான் முதல்வர் அஷோக் கெஹலாட், த.மா.கா. வாசன், வாழப்பாடியார், தங்கபாலு ஆகியோர் ஆப்செண்ட் ஆனவர்கள். வாழப்பாடியாரும் வாசனும் முன்னமே திட்டமிட்டபடி டூர் போய் விட்டார்களாம். வடக்கத்திய முதல்வர் பற்றி தகவல் இல்லை. "மரகதம்மாவால் வளர்க்கப்பட்ட தங்கபாலுவுக்கு என்ன ஆச்சு?" என்று காங்கிரஸ் தொண்டர்கள் கேட்டுக் கொண்டனர்.

எந்த மேடையாக இருந்தாலும் மனத்தில் பட்டதைச் சொல்லி விடுவார் 'சிறுத்தை' திருமாவளவன். அன்றும் அப்படித்தான். "திராவிட இயக்கங்களை விட, தாழ்த்தப்பட்டவர்களைக் கை தூக்கிவிட்டது இந்திய தேசிய காங்கிரஸ்தான் என்று அடித்துச் சொன்னார் அவர். கடைசியாகப் பேசியவர் சிதம்பரம். அதற்கு முன்பு பேசிய ஸ்டாலின், கூட்டம் விரும்பும் சிக்னல்களைக் கோடிட்டுக் காட்டுவார் என்று எதிர்பார்த்தால் புஸ்வாணம்தான். ஸ்டாலின் அப்பா அன்று மேடையில் இருந்திருந்தால் அரசியல் பொடி அரங்கம் முழுதும் வீசப்பட்டிருக்கும். ஆனால் மேயருக்கு இன்னும் அனுபவம் தேவை. 'இரங்கல் கூட்டம் நடத்தும் பொறுப்பை நான் எடுத்துக் கொள்ளத் தயார். ஆனால் தனிப்பட்ட ஸ்டாலினை அலட்சியப்படுத்தினால் நான் கவலைப்பட மாட்டேன். மேயர் பொறுப்பை அல்லவா உதாசீனப்படுத்துகிறார்கள்" என்று நொந்து போய் சொன்னார் ஸ்டாலின். திருமாவளவன் பேச்சுக்கு சூடான பதில் ஸ்டாலினிடமிருந்து வரும் என்று பார்த்தால் அதுவும் மிஸ்ஸிங்.

அன்று கூட்டத்தை ஆர்ப்பரிக்க வைத்தவர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்தான். மறைந்த மரகதம் அம்மையார் இறப்பதற்கு முன்னர் தம்மைத் தொலைபேசியில் பாராட்டியதை நெகிழ்ந்து போய்ச் சொன்னார். "அது போன்ற பாராட்டுகளைப் பெற்ற பிறகு என் பணியைக் குறை காண்பவர்களின் விமர்சனம் கால் தூசுக்கு சமம்" என்று கர்ஜித்தார் ஈ.வி.கே.எஸ்.

மரகதம்மாவுக்குச் சிலை வைக்க வேண்டும் என்று தொடர்ந்து பேச்சாளர்கள் பேசியபோது 'இப்போதிருக்கும் அரசு கொடூரமான அரசு; இது போல் எதிர்காலத்தில் எந்த அரசும் அமையாது. எனவே சிலை வைத்தால் அதை எடுக்க மாட்டோம்" என்று இப்போதைய அரசு உறுதிமொழி கொடுக்க வேண்டும்" என்ற இளங்கோவன் சொன்னபோது கைதட்டல் காதைப் பிளந்தது.

"ஆண்டிப்பட்டியில் அணி மாற்றத்திற்கு அடி கோலிய கூட்டம்" என்று தொண்டர்கள் பேசியவாறே கலைந்தனர்.

— கௌசி

படம் : ராஜன்



**மேஷம்** : நாடாளுமன்றத் தாக்குதலுக்கு வந்த தீவிரவாதிகளைச் சுட்டு வீழ்த்திய சி.பி.ஆர்.எப். வீரர்கள் மாதிரி மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் டன் கணக்கில இந்த வாரம் ஏறும். பணம் பல வழிகளில் வந்து பாக்கெட்டை நிரப்பும். குடும்பத்துல சுபகாரியம் நடக்க சந்தர்ப்பம் வந்து சேரப் போகுது. சிவப்பு நிறப் பொருட்களால் ஆதாயம் உண்டு. வழக்கு விவகாரங்கள்ல உங்களுக்குச் சாதகமான வெற்றி வரும்.

**ரிஷபம்** : 'பொடோ' சட்டத்துக்கு எதிர்ப்பு தெரிவிச்ச எதிர்க் கட்சிகள் தீவிரவாதத்தை ஒடுக்க அரசுக்கு முழு ஆதரவு கொடுக்கும்னு சொன்ன மாதிரி என்னதான் ஒரு பக்கம் எதிர்ப்பு இருந்தாலும் எல்லாத்தையும் அடக்கி ஒடுக்கி வெற்றி பெறுவீங்க. அதுக்கான உழைப்பையும் அலைச்சலையும் தவிர்க்க முடியாது. வெளியூர் டூர் போறதா இருந்தா இப்ப வேண்டாம். நிலைமை சரியில்லை. கொடுக்கல் வாங்கல்ல உஷாரா இருங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு இந்த வாரம் சோதனை மேல் சோதனை. அரசியல்வாதிகள் 'மைக்' கிடைச்ச சந்தோஷத்துல எதையாவது கொட்டிடாதீங்க.

**மிதுனம்** : இங்கிலாந்து - இந்தியாவுக்கான இரண்டாவது கிரிக்கெட் 'டெஸ்ட்' டிரா ஆன மாதிரிதான் இந்த வாரம் உங்களுக்கு. நீங்க ஒண்ணு நினைப்பீங்க. வேறொண்ணு நடக்கும். எதிலேயும் முழுமையான வெற்றி கிடைக்காது. மனசுல ஏதாவது ஒரு குழப்பம் வந்துக்கிட்டே இருக்கும். உடல் நலக்குறைவு ஏற்படலாம். செலவு எகிறும். கொடுக்கல் வாங்கல் விவகாரத்தை இந்த வாரம் ஓரம் கட்டுங்க. கணவன் மனைவிக்குள்ள 'முறை'ப்புகள் வர வாய்ப்பிருக்கு. முன்னபின்ன தெரியாதவங்கிட்ட வாய் கொடுக்கவேண்டாம்.

**கடகம்** : கிரகங்கள் உங்களை 'லுக்' விடுவதால் இந்த வாரம் 'ஓகோ'தான். கொடுக்கல் வாங்கல்ல, வரவு பாக்கெட்டை நிரப்பும். வியாபாரிகளுக்கு ஆதாயம் அமர்க்களமாக இருக்கு. சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் அள்ளிக் கிட்டு வரும். பத்திரிகையாளர்கள் சிற்பிகள், சிந்தனையாளர்களுக்கெல்லாம் பாராட்டு உண்டு. கலைத் துறையைச் சேர்ந்தவங்க 'ஜில்'லுனு புகழ் மழையில நனையலாம். மின்சாரம் இயந்திரங்கள்ல வேலை பார்க்கறவங்க ஜாக்கிரதையா இருக்கணும்.

**சிம்மம்** : அட, அசத்தப் போறீங்க இந்த வாரம். புதிய பட்டங்கள், பதவிகள், பாராட்டுகள் எல்லாம் உங்க முகவரி தேடி வரப்போகுது. சந்தோஷ திக்கு முக்காடல்ல முகத்துல அழகு ஜொலிக்கும். புது ட்ரெஸ், நகைகள் வாங்க வழியிருக்கு. இதுவரை தள்ளிப்போன வெளிநாட்டுத் திட்டம் இப்ப கைகூடும். விவசாயிகள், தொழிலாளர்கள் சமுதாய நலப் பணியாளர்களுக்கெல்லாம் மகிழ்ச்சி குடிகொள்ளும். அலைச்சல் ஜாஸ்தியாகும். பேச்சுல இனிமையைத் தடவிக்கிறது நல்லது.

**கன்னி** : பின்லேடனும் முல்லா உமரும் பாகிஸ்தானுக்குத் தப்பி ஓடிட்ட (?) மாதிரி உங்களை நேரிடையாகவோ மறைமுகமாகவோ டார்ச்சர் பண்ணிட்டிருந்த எதிரிகள் ஓடி ஒளிஞ்சுருவாங்க. போட்டி, பந்தயங்கள்ல வெற்றி பெற வாய்ப்பிருக்கு. கணிதம், எழுத்து, பத்திரிகை போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றமான போக்கு. சட்டம், காவல் இராணுவம் துறைக்காரங்களுக்கு பாராட்டு ஓடோடி வரவாய்ப்பிருக்கு பொருளாதர நிலையில முன்னேற்றம் காணலாம். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து கதவைத் தட்டும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

அக்னிசர்மா பக்கம்

டிசம்பர் 26 முதல் ஜனவரி 1 வரை



பெயர் : மீராகிருஷ்ணா
ராசி : விருச்சிகம்
பலன் : முன்னணிக்கு வருவார்.

**துலாம் :** பங்கு மார்க்கெட்ல ஏறி இறங்குற ரூபாய் மதிப்பு மாதிரி உங்க பொருளாதாரம் இருக்காது. பண நடமாட்டம் சீரா இருக்கும். வசீகர சக்தி அதிகரிக்கும். உங்களைப் பார்த்து நீங்களே பொறாமைப் பட ஆரம்பிச் சுடுவீங்க. எதிர்பார்த்திட்டிருந்த நல்ல தகவல் வந்து சேரும். மனசுல துணிச் சலும் தன்னம்பிக்கையும் அதிகமாகும். எதிரிகள் அடங்கிப் போவார்கள். சனி எட்டாம் இடத்தில் இருக்கிறதால கொஞ்சம் அதிகமா உழைக்க வேண்டி வரும். வெளியூர் பயணத்தைத் தவிர்ப் பது நல்லது. வாகன விஷயத்துல எச்சரிக்கை அவசியம்.

**விருச்சிகம் :** நாடாளுமன்றத்துல பெர்னாண்டஸ் மேலே சலசலப்பு வந்த மாதிரி உங்க குடும்பத்துலயும் ஏதாவது சலசலப்பு வரலாம். கலைத் துறையைச் சேர்ந்தவங்க முன்னணிக்கு உயருவாங்க. அரசுப் பணியாளர்கள், அரசியல்வாதிகள் மதிப்பு, அந்தஸ்து உயரும். எதிலேயும் அவசரம், பதற்றம் வேண்டாம். நிதானம் ரொம்ப முக் கியம். பெற்றோருக்கும் மக்களுக்கும் கருத்து வேறுபாடுகள் வரலாம். புதிய வங்ககிட்ட பழகும்போது அனா வசியமா பேச வேண்டாம்.

**தனுசு :** மனசுல உற்சாகம் அதிகரிக் கும். துணிச்சலும் தன்னம்பிக்கையும் தெம்பாக இருக்கறதால எடுத்த காரி யத்தை எப்பாடுபட்டாவது முடிச்சுடு வீங்க. சுபகாரியங்களுக்காகச் செலவு கள் அதிகமாகும். பர்ஸ் பத்திரம். சட்டம், காவல், இராணுவத் துறை களில் வேலை பார்க்கறவங்களுக்குப் பட்டமும் விருதுகளும் தேடி வரும். வீடு, வாகனம் போன்றவற்றால் ஆதாயம் இருக்கு. இதுவரை இருந்து வந்த பிரச்னைகள் எளிதில் தீரும். தெய்வப் பணியிலும் புனிதப் பணி யிலும் ஈடுபாடு அதிகரிக்கும். உடல் நலத் துலேயும் கவனம் வையுங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வரலாம்.

**மகரம் :** புதியவங்க தொடர்பால இந்த வாரம் நல்லது நடக்கப் போகுது. சிலருக்கு முக்கியமான பதவிகள் வர வாய்ப்பிருக்கு. ஆராய்ச்சி, விஞ்ஞானத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு மதிப்பு உயரும். செலவு, பல வழிகள்ல வரும். சிக்கனம் அவசியம். எல் லார்ட்டயும் சுமுகமாகப் பேசி பழகறது அவசியம். எடுத்து எறிஞ்சு பேச வேண்டாம். பெரியவங்க அதிருப்திக்கு ஆளாகாம இருக்கறதுக்கு முயற்சிப் பண்ணுங்க.

**கும்பம் :** இதுவரை இழுத்தடிச்சுட்டு இருந்த அரசு விவகாரங்கள் இப்ப அனுகூலமாகும். மருத்துவர்கள் புகழ் பெறுவார்கள். இரசாயனம், விஞ்ஞானத் துறைகளைச் சேர்ந்த வங்களுக்கு வரவேற்பும் பாராட் டும் கூடும். எதிரிகள் அடங்கிப் போவாங்க. எடுத்தக் காரியங்களை எப்பாடுபட்டாவது நிறைவேற்றி வெற்றி பெற்றிடுவீங்க. பெண்களுக் குப் பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு. எதிலும் அவசரம் வேண்டாம். விளை யாட்டு விரோதங்கள்ல எச்சரிக்கை அவசியம்.

**மீனம் :** உங்க புத்திசாலித்தனம், திறமை எல்லாமே வெளிப்படும். வசீகர சக்தி கூடும். உழைப்பும் திறமையும் வீண் போகாது. பக்திமார்க்கம் பக்கம் மனம் இழுக்கும். நண்பர்கள் உறவினர்கள் உதவ வருவாங்க. கணவன் மனைவிக் குள்ள மனக்கசப்பு நீங்கும். பார்ட்னர் ஷிப்ல தொழில் பண்றவங்களுக்கு ஆதாயம் கூடும். வீண் வம்பு தும்புக்குப் போக வேண்டாம். புதிய முயற்சிகள் இப்போ வேண்டாம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை அவசியம். பய ணத்தின்போது கவனம் தேவை.

● சச்சின் சக்திவேல், மயிலாடுதுறை

? ஆண்டிப்பட்டி வாக்காளர்களுக்கு உங்கள் அட்வைஸ் என்ன...?

! சிந்தித்துச் செயல்படுங்கள்; தமிழகத்தின் எதிர்காலம் உங்கள் கையில்.

● பா. ஜெயக்குமார், வந்தவாசி

? ராஜ்குமாரை மீட்க பணம் தரப்பட்டிருந்தால் அது நியாயம் என்கிறீர்கள். ஆனால் பணம் தந்ததை மக்கள் மன்றத்தில் வெளிப்படையாக ஒப்புக் கொள்ளவில்லையே?

! பணம் தரப்பட்டிருந்தால் அது அன்றையச் சூழலில் அறிவுடைமை. மறைவாகத் தரப்பட்டிருந்தால் அது அரசியல்; எதிர்க்கட்சியினர் வாய்க்கு அவல் தராத சாணக்கியம்.

● எம். சிவகுருநாதன், தஞ்சாவூர்

? 'முன்பு கமிஷன் வாங்கினார்கள்; இப்போது கமிஷன் போடுகிறார்கள்....' என்று அ.இ.மு.க. பற்றி பா.ஜ.க. தமிழக பொதுச் செயலாளர் இல.கணேசன் கோவையில் பேசினாரே..?

! நாளை வாங்கவும் செய்வார்கள்; போடவும் முன்வருவார்கள்.

● எஸ்.வி.எஸ். மணியன், மதுரை

? நாட்டுக்காக உயிர்துறந்த வீரர்களை அடக்கம் செய்வதற்காகத் தயாரிக்கப்பட்ட சவப் பெட்டியில்கூட ஊழல் செய்து சாதனை புரிந்த தேசவிரோதிகளைப் பற்றி..?

! தமிழ்நாட்டில் சுடுகாட்டுக் கூரை அமைப்பதில் ஊழல் பண்ணியவர்களை விடக் கேவலமான சுயவர்கள்.

● கே. மூர்த்தி, தொட்டியவலக

? திரையுலகை அச்சுறுத்தும் வீடியோ பைரஸி குற்றங்கள் தொடர்வதற்கு அரசின் செயல்பாடு காரணமா அல்லது பொது மக்களின் அலட்சிய மனோபாவம் காரணமா...?

! சினிமாவின் இடத்தை சின்னத்திரை ஆக்கிரமித்துக் கொண்டதுதான் காரணம்.

● பழ. சீனிவாசன், அய்யம்பாளையம்

? 'வானிலிருந்து பால் கொட்டினாலும் பிடித்து வைத்துக் கொள்ள பாத்திரம் இல்லை' என்று ஆதி திராவிடர் நிலை பற்றி சபாநாயகர் காளிமுத்து குறிப்பிட்டுள்ளாரே?

! நல்ல பாத்திரங்களாக அவர்களை மாறவிடாமல், சுயச் சார்பினால் முன்னேற விடாமல், ஜாதி அரசியல் பண்ணி, பொழியாத பாலுக்கு இல்லாத பாத்திரத்தை ஏந்தி நிற்க வைப்பவர்கள் வேறு எப்படிப் பேசுவார்கள்!

● எஸ்.இராஜேந்திரன், கபிஸ்தலம்

? அம்மா இப்படி ஹைதராபாத்தில் போய் உட்கார்ந்து கொண்டால் இங்கே ஆட்சியைக் கவனிப்பது யார்?

! வாஸ்து நிபுணர்களும் ஜோஸியர்களும் பார்த்துப்பாங்க.

● எம்.இராஜேந்திரன், லால்குடி

? டிசம்பர் ஆறாம் தேதி நாட்டில் எத்தவித அசம்பாவிதமும் நடைபெறாததைப் பற்றி..?



* ஹைதராபாத் சலோ!

* காதல் கசப்பு!

* பெரிய புத்திசாலி!

* மலரும் நினைவுகள்!

* 'கவனமான' கொண்டாட்டம்!

□ ரூ.100 பரிசு பெறுபவர் :
ஜி. நீலா,
33எ, முதல் தெரு,
மன்னார்குடி - 614 001

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
சித்ரா கிருஷ்ணமூர்த்தி,
39/48, சௌராஷ்டிரா நடுத் தெரு,
கும்பகோணம் - 1

! ஆறாம் தேதி எதிர்பார்த்து பதின்மூன்றாம் தேதி ஏமாந்துவிட்டோம்!

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

*? தன் பிறந்த நாளன்று 610 கிலோ எடையுள்ள கேக் வெட்டினாராமே ஷரத் பவார்..?*

! அப்படி வெட்டியதால்தானே மீடியாவின் கவனத்தைப் பெருமளவில் பெற முடிந்தது! நாளிதழ்களில் துக்கினியூண்டு செய்திக்குப் பதிலாக நாலு பத்தி ஃபோட்டோவுடன் செய்தி இடம் பெற்றதல்லவா..?

● பா. அச்சுதன், சென்னை - 30

*? புத்திசாலி யார்..?*

! ஜோதிர் ஆதித்ய விக்ரம ராவ் சிந்தியா என்ற பெரிய பெயருடன் காங்கிரஸில் சேர்ந்துள்ள சின்ன பையன்! எடுத்த எடுப்பிலேயே தலைவியின் நல்லாதரவைப் பெற்றுவிட்டாரே!

## நீங்கள் கேட்டவை - தராசு

பாலும் பாத்திரமும்!



# ஆண்டிப்பட்டி வாக்காளர்களுக்கு அட்வைஸ் என்ன?

● எஸ்.பொன்னுசாமி, உடுமலை

*? 'படித்தவன் சூதும் வாதும் செய்தால் ஐயோன்னு போவான்' என்று பாரதி சொல்லியிருக்கிறாரே... அப்படியெனில் படிக்காதவன் சூதும் வாதும் செய்யலாமா?*

! இதற்குப் பெயர்தான் விதண்டாவாதம். படித்தவனே செய்வானானால் ஏற்படக்கூடிய விளைவைத்தான் சொன்னார். படிக்காதவன் செய்தால் 'ஐயோ பாவம்'னு போவான்.

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம் ★

*? ஜெயலலிதா நடிகையாகவே இருந்திருந்தால்...?*

! இன்று டைரக்டராக (தற்காலிகமாக) மாறியிருக்கமாட்டார்.

● ஜி.நீலா, மன்னார்குடி ❒

*? ஊழல் குற்றச்சாட்டு உண்மையா இல்லையா என்பதைவிட, இந்தச் சந்தேகங்களுக்கு அப்பாற்பட்டவர்களாகத் தாங்கள் இருக்க வேண்டும் என்ற தன்மானம் யாருக்குமே இல்லையே..?*

! சீசரின் மனைவிதான் சந்தேகத்துக்கு அப்பாற்பட்டவராய் இருக்க வேண்டும். நவீன ஜூலியோபாட்ராக்கள் அல்ல..!

● ஆர்.கே.லிங்கேசன், கே.கே.புதூர்

*? 'காதல் மன்னன் என்ற பட்டப் பெயரைக் கேட்டாலே வெறுப்புத்தான் வருகிறது' என்று தமது 'வாழ்க்கைப் படகு' சுயசரிதையில் ஜெமினி குறிப்பிட்டுள்ளாரே?*

! இன்று வெறுப்பு வரலாம்; அன்று தேவையாகத்தானே இருந்தது அவருக்கு! அன்றே இந்தப் பட்டத்தை நிராகரித்திருந்தால் பாராட்டியிருக்கலாம்.

● அ. சங்கர், பெங்களூர் - 16

*? குழந்தையாக இருக்கும்போது ஒரு பெண்ணை, தந்தை பாதுகாக்கிறார், பிறகு கணவன், முதுமையில் மகன் பாதுகாக்கிறான். ஆகவே பெண்களுக்குச் சுதந்தரம் என்பது கிடையாது - இது மகாபாரத வசனம். தராசுக்கு இதில் உடன்பாடு உண்டா?*

! நீங்கள் குறிப்பிடும் சுதந்திரம், in the physical sense. பாதுகாப்பு என்பது உடலுக்கும் உடைமைக்கும் மட்டுமல்ல; பெண்ணின் உரிமைக்கும் சேர்த்துத்தான் பாதுகாப்பு அமைய வேண்டும்.

● என்.தாமோதரன், சேலம் - 7

*? பொறுமையை வளர்த்துக் கொள்ள சிறந்த வழி, அ) அரசியல்வாதிகளின் அறிக்கையைப் படிப்பது, ஆ) டி.வி. சீரியல் பார்ப்பது இ) பெண்கள் போனில் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருப்பது... இவற்றில் எது?*

! கேள்வி பதிலுக்கு வரும் கேள்விகளைச் சலிப்பது என்பதை இந்த மூன்றுக்கும் முன்னால் சேர்த்துக் கொள்ளுங்கள்!

● கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர் - 5

*? 'மெகா சீரியல் வசனங்களில் சமத்காரம் இல்லை. சம்பிரதாயமான matter of fact உரையாடலாக இருக்கிறது..' என்று ரிமோட் விநோத் சொல்கிறார். இயல்பாக ஒரு குடும்ப நிகழ்ச்சியில் பங்கேற்கிற மாதிரி யதார்த்தமான நிகழ்ச்சிகள், வசனங்கள் என்று ஒரு சினிமா விமர்சனத்தில் சித்தார்த் எழுதுகிறார். தராசுவின் மதிப்பீடு என்ன..?*

! 'சம்பிரதாயமான' என்பதற்கும் 'யதார்த்தமான' என்பதற்கும் நிறைய வேறுபாடு உண்டு ஸாரே!

# மோர்க் குழம்பு இல்லையா?

Give me a book and a bed and I am happy என்றார் ஓர் அறிஞர். ஒரு கரண்டியும் ஒரு அண்டாவும் கொடுத்துவிட்டால் அறுசுவை நடராசனுக்கு ஆனந்தம். டிசம்பர் சீசனின்போது, ஆறு டஜன் கச்சேரிகள் செய்த வித்வான்களைக் காட்டிலும் அதிக பப்ளிஸிடி பெறுகிறவர் இந்தக் காண்ட்ரூக்காரர்.

"நமது கலாசாரத்தை மறந்துவிடக் கூடாது என்ற ஆர்வத்துடன் லண்டனிலிருந்தும் நியூயார்க்கிலிருந்தும் வருகிற ரசிகர்களுக்குத் தன் கையால் வாழையிலையை விரித்துப் போட்டு, ஜலம் தெளித்துத் துடைத்துப் பரிமாறுவது தனி மகிழ்ச்சியாக இருக்கிறது" என்றார். பழைய ஆடையலங்கார நாகரிகம் ஒரு ரவுண்ட் அடித்துவிட்டுத் திரும்ப வருவது போலவே சாப்பாட்டு விஷயத்திலும் நடந்துள்ளதாம். மாடர்ன் ரசிகர்களுக்காக மாடர்னாக ஐட்டம் தயாரித்தால், 'மோர்க் குழம்பு வைக்கக் கூடாதா, முருங்கைக்காய் சாம்பார் பண்ணக் கூடாதா' என்று கேட்கிறார்களாம்.

'ஹைஜீன், ஹைஜீன்' என்று எல்லாரும் சொல்வதால் எவர்சில்வர், இண்டோலியம் பாத்திரங்களை உபயோகிப்பதாகவும், ஆனால் ஈயம் பூசிய பித்தளைப் பாத்திரத்தில் செய்யப்படும் சமையலின் ருசி எதிலும் வராது என்றார். (ஈயம் போனால் காயம் போகும் என்பது வேறு விஷயம்)

இரண்டு மெகா சீரியல்கள் ஒரே நாளில் ஒரே மணி நேரத்துக்குள் ராஜ் டீவியில் ஆரம்பமாகின. 'ஆர்த்தி' இரவு எட்டு முதல் எட்டரை மணி வரை. அதைத் தொடர்ந்து 'ஸ்ருதி' எட்டரை முதல் ஒன்பது வரை. Time is a circus, always packing up and moving. எத்தனை உண்மை!



அடுத்தடுத்துப் பார்த்ததாலோ என்னவோ, இரண்டிலும் முதல் எபிஸோட் ஒரே மாதிரி இருப்பதுபோல் தோன்றியது. ஆர்த்தி, பத்திரிகையில் பணியாற்றும் தீராங்கனை. பெரிய மனிதர்கள் என்ற போர்வையில் நடமாடும் பிசாசுகளைப் பற்றி எழுதுகிறாளென்று அவளுக்குப் பாரதி மகளிர் மன்றத்தில் பாராட்டு. ஸ்ருதி ஒரு கவிதாங்கனை. கவிதைத் தொகுப்பு வெளியீட்டு விழாவில் பாரதி விருது அவளுக்கு அளிக்கப்படுகிறது.

ஆர்த்தி பாத்திரம் (சிதாராவுக்கு என்ன ஒரு தீர்க்கமான நாசி!) அப்படியொன்றும் புதுமையானதாகத் தெரியவில்லை. ஸ்ருதி (விந்தியா) மரண தண்டனைக்காகக் காத்திருப்பவள் என்பதால் கனை கட்டுகிறது. ஆனால் இதிலும் கூட நிகழ்ச்சிகள் சீராகச் சொல்லப்படவில்லை என்பதோடு, விழாவில் அந்தக் 'கவிஞர்' பேசியது மெகா வளவளா.



போன வருஷம் 'விஜய்' மட்டுமே நடத்திய மார்கழி மகோற்சவத்தை இந்த வருஷம் எல்லாச் சேனல்களும் பிடித்துக் கொண்டுவிட்டன. அரசியலும் சமையலும் சினிமாவும் போலவே கர்னாடக சங்கீதமும் ஆகிவிட்டது. It is brought to your drawing room. காலை நீட்டிப் படுத்துக் கொண்டு கச்சேரி கேட்கலாம். எந்த சபா செக்ரட்ரியும் விரட்ட மாட்டார்.

குறிப்பிட்ட சில பாடக, பாடகிகள்தான் அடிக்கடி காட்சி தருகிறார்கள் என்ற போதிலும், சுதாரகுநாதனின் 'நகுமோமு' கனிரென்று உச்சத்தை எட்டி, கவனத்தைக் கவர்ந்தது. 'ராம நாமமே துதி மனமே' பாட்டும் வெகு சுகம். அதில் 'ரகுநாதனை நினைந்து' என்று ஒரு வரி வருகிறது. 'ரகுநாதனை' திரும்பத் திரும்ப நிரவல் செய்து, தானும் மகிழ்ந்து அவையோரையும் புன்னகைக்க வைத்தார்.

பேட்டியின்போது, தான் போற்றிப் பாதுகாத்து வரும் புகைப்படங்களைக் காட்டினார். அதில் ஒன்று அவருடைய திருமணக் கோலம். அதைக் காட்டி, 'நான் எவ்வளவு சாதுவாக, அப்பாவியாக,



கேலி செய்வோர் உண்டு. இருந்தாலும், வீட்டில் இருந்த படியே சின்னதாக ஏதேனும் தொழில் செய்து குடும்பத்துக்கு வருமானம் ஈட்ட எந்தப் பெண்தான் விரும்ப மாட்டாள்? அவர்களுக்கு வழி காட்டுவது 'இனிய இல்லம்' நிகழ்ச்சியின் 'இனிய நோக்கம். (ஜெயா) நானூறு ரூபாய் செலவழித்து எண்ணூறு ரூபாய் சம்பாதிக்கும் வகையில் சாம்பிராணிக் கட்டிகள் செய்யலாம் என்று ஓர் அம்மையார் நன்றாகவே சொல்லித் தந்தார். தயாரித்த கட்டிகளை அடைப்பதற்கான அட்டைப் பெட்டிகள் எங்கே வாங்குவது, எப்படி மார்க்கெட்டிங் செய்வது முதலான தகவல்களையும் தந்திருக்கலாம். நேரமில்லை போலும்.



இதே நிகழ்ச்சியில், 'சாதனைப் பெண்' வரிசையில், இஞ்சினீயரிங் மாணவி நாஷ்ன் (தமிழ்ப் பெண்தான்) இடம் பெற்றார். தடகளப் போட்டிகளில் பரிசுகள் பல வென்றவர். படிப்பையும் கோட்டை விடாமல், விளையாட்டிலும் வேட்டை கெடாமல் பாலன்ஸ் பண்ணுகிறார். பேட்டியாகக் கண்டிருந்தால் நிறைய விவரங்கள் வந்திருக்கும். அவருடைய சாதனைகளை அவரே சொல்லும்படி இருந்ததால் கூச்சத்துடன் தயங்கித் தயங்கிப் பேசினார். என்றாலும், தட்டுக்கு மேல் தட்டாக அடுக்கப்பட்டிருந்த கோப்பைகளும் ஷீல்டுகளும் பதக்கங்களும் பாராட்டு மெடல்களும் told her records.

கபில்தேவும் அஜய் ஜடேஜாவும் சந்தித்துப் பேசிக் கொண்டிருப்பதை ஜெயின் நியூஸ் காட்டியது.

So what என்று கேட்காதீர்கள். இருவரும் கையில் மட்டை வைத்துக் கொண்டிருந்தார்கள். கிரிக்கெட் மட்டை அல்ல, கால்ஃப் மட்டை. நின்றிருந்த இடமும் கிரிக்கெட் மைதானமல்ல. கால்ஃப் மைதானம். டெல்லி கால்ஃப் கிளப்பில் இருவரும் உறுப்பினர்களாம்.

ஆடி முடித்து திரும்பிச் செல்லும்போது கபிலிடம் ஜடேஜா ரொம்பத்தான் இழைந்து குழைந்து பேசிக்கொண்டிருந்தார். அது இந்தியா_இங்கிலாந்து போட்டி பற்றியதாக இருக்குமென்று தோன்றவில்லை. match - fixing குறித்தும் இருக்காது. தன் வாழ்க்கையை, டாக்குமெண்ட்டரி படமாக எடுத்து வருகிறார் கபில்தேவ். அதில் தனக்கும் ஒரு சான்ஸ் தரும்படி ஜடேஜா கேட்டிருப்பார். அவருக்குக் கிடைக்கிறதோ இல்லையோ, மனோஜ் பிரபாகருக்குப் பிரதானமான இடம் கிடைக்கும் Let a villain be made serviceable என்று கபில் தீர்மானித்திருப்பார்.

**வினோத்**

ஒன்றுமறியாதவளாக உட்கார்ந்திருக்கிறேன் பாருங்கள்!' என்றார். (எல்லாக் கல்யாணப் பெண்களும், கல்யாண தினத்தன்று மணையில் உட்கார்ந்திருக்கும்போது அப்படித்தான் இருப்பார்கள். பிறகு...!)

A woman is quite content with very little, if that very little is precisely what she wants என்று

# கடல் பூக்கள்

நெய்தல் நிலப் பின்னணியில் நேர்த்தியாக கதை பின்ன பாரதிராஜாவை விட் டால் ஆளேது!

கடந்த முறை ஆத்மார்த்த காதலொன்றை, கடலோரக் கவிதையாக வடித்தவர், இந்தமுறை ஒரு நல்ல நட்பை அலையோரம் மலர விட்டிருக்கிறார்.

'கற்பை விடவும் உயர்ந்தது நட்பு' என எழுதிவிடுவது சுலபம். ஆனால் நாடகத்தனம், சினிமாத்தனம் இரண்டிலும் சிக்கிக் கொள்ளாமல் இரண்டரைமணி நேரம் திரைக்கதை அமைக்க வேண்டுமே. அதைச் சாதித்து, அதற்காக தேசிய விருதையும் பெற்றுவிட்டு வந்திருக்கும் பாரதிராஜாவை முதலில் பாராட்டுவோம்.

உயிருக்கு உத்தரவாதம் இல்லாத, முத்து குளித்தலின்போது, இடுப்புக்கயிறை நம்பிக் கொடுத்துவிட்டு, கடலில் குதிக்குமளவுக்கு உயிர் நண்பர்கள் கருத்தய்யாவும் பீட்டரும். இந்த எளிய மீனவர்களை வீழ்த்த தங்கைகள் வடிவில், விதிசதிவலை பின்னுகிறது. ஆனால் நட்பும் அதைத் தாண்டிய மனித நேயமும் அதை வென்று காட்டுகிறது.

கடல்புரத்தைச் சுற்றி நிகழும் யதார்த்தமான நிகழ்வுகளில் இருந்து காட்சிகளை உருவாக்கியிருப்பதால் படத்துடன் ஒன்ற முடிகிறது.

கருத்தய்யா பாத்திரத்தில் முரளியை ஒரு நடிகராகவே பார்க்க முடியவில்லை, நடிப்பில் அத்தனை முதிர்ச்சி! முரட்டுத்தனம், மென்மை இரண்டின் கலவை பீட்டராக வரும் மனோஜ். உள்ளூர் மீனவப் பெண்ணுடன் அந்நியனொருவன் தனித்திருப்பதைக் கண்டு கொதித்து அவனைக் கொல்லத் துரத்தும் மனோஜ், அது போன்றதொரு அவல நிலை தன் தங்கைக்கு வருகிற போது, கரையில் விழுந்த மீனாய்த் துடித்து, தனக்குள்ளிருந்த அற்புத நடிகனை முதல் முறையாக வெளிப்படுத்தியிருக்கிறார்.

உப்புவிற்கும் பெண்மணியாக உள்ளத்தைக் கொள்ளையடிக்கிறார் பிரதியுஷா. இத்தனை திறமையான நடிகை இன்று ஒற்றைப் பாடலுக்கு நடனமாடும் கவர்ச்சி நாயகி ஆகிவிட்டது துரதிர்ஷ்டம். கருத்தய்யாவின் தங்கை கயலாக சுமித்ராவின் மகள் உமா, பீட்டரின் தங்கை மரியமாக சிந்து, சோடை போகாத

காதலை மட்டுமே சுற்றிவரும் செக்கு மாட்டுத்தனம் மிக்க தமிழ்சினிமாவுக்கு, காசியின் கதை முற்றிலும் புதிது என்று சந்தோஷப்படலாம். ஆனால் திரைக்கதை மெலோடிராமாவின் பிடியில் சிக்கிக் கொள்ள, பல இடங்களில் படம் திருதிருவென்று விழிக்கிறது. நல்ல வேளையாக யூகிக்க முடியாத முடிவு ஆபத்பாந்தவனாக வந்து ஆறுதல் தருகிறது.

பார்வையற்ற இளைஞன் காசிக்கு, இசைதான் சுவாசம்! பக்கவாதப் படுக்கையில் இருந்தபடி வார்த்தைகளால் சுடும் அப்பா, கஷ்டப்பட்டு பாடிச் சேர்க்கும் பணத்தைத் தட்டிப் பறித்துப் போகும் அண்ணன், ஆஸ்துமாவுடன் வீட்டு வேலைக்குப் போகும் அம்மா, மாற்று ரவிக்கை கேட்கும் பாசத் தங்கை, வாய் பேசமுடியாத காதலி என்று காசியின் உலகம் விரிகிறது. அவருக்குப் பார்வை கிடைக்க ஏற்பாடு செய்கிறேன் என்று சொல்லி, காசியின் காதலி, தங்கை இருவரையும் சூழ்நிலைக் கைதியாக்கி, பாலியல் பலாத்காரம் செய்யும் பக்கீர் பின்னணியும் பக்கா தமிழ் டைப் வில்லனும் நிறையவே நெருடினாலும், காசியைச் சுற்றிப் பின்னப்



# காசி

பட்டிருக்கும் உருக்கமான காட்சிகள் நம்மை உட்கார வைக்கின்றன. கூடவே இளைய ராஜாவின் இசையும் இருக்கையோடு கட்டிப் போடுகிறது.

படத்தில் பிரமாண்டமாகத் தெரிவது விக்ரமின் உழைப்பு! கண்ணின் கருமணிகளை உள்ளே மறைத்து, உடல்மொழியில் பார்வை யற்ற இளைஞனை அப்படியே கண் முன்பு நிறுத்திவிடுகிறார். குறிப்பாக பாடல் காட்சிகளில் அவர் காட்டுகிற உணர்ச்சிகளை விவரிப்பதை விட, பார்த்து இதயத்தைக் கசிய விடலாம்.

காவேரியைக் காட்டிலும் காவ்யா மாதவன் சோபிக்கிறார். என்றாலும், இத்தனை கொழுகொழு தோற்றத்தில் இருக்கும் அவரை, வறுமையில் வாழும் ஏழைப்பெண்ணாக பார்க்கமுடியவில்லை. மறுபடியும் தனது தோழி நிர்பந்திக்கப்படுவாள் என்று தெரிந்தும், காவேரி கூலாக கல்யாணப் புடைவை வாங்க காசி யுடன் ஷாப்பிங் வருவது கூடுதல் காமெடி!

வினுச்சக்ரவர்த்தி, ராஜீவ், வடிவுக்கரசி, தலைவாசல் விஜய் என்று தேர்ந்த நடிப்பை நல்கும் நட்சத்திர அணிவகுப்பும் கோகுலகிருஷ்ணாவின் ·வசனமும் படத்திற்குப் பலம்.

ஆனாலும் இயக்குனர் வினயன் எதிர்ப்பட்டால் கேட்க வேண்டியது இதுதான். 'வசந்தியும், லட்சுமியும், பின்னே ஞானும்' படத்தை, மலையாளத்தில் மட்டும் யதார்த்தமாக எடுத்துவிட்டு, தமிழில் அதற்கு மெலோடிராமா சாயத்தைப் பூசியது என்?

● அபவ் ஆவரெஜ்

அறிமுகங்கள்.

'முட்டம்' என்கிற ஒரே கிராமத்தை எத்தனை அழகாய்ப் பார்த்திருக் கிறது கண்ணனின் கேமரா! கடல்புரத் தின் இயல்பை சிதைத்துவிடாத மோகனமகேந்திரனின் கலை இயக் கமும் படத்திற்கு வலு சேர்க்கிறது.

பின்னணி இசையில் சோபிக்க வாய்ப்பிருந்தும், கோட்டை விட்டு விட்ட தேவா, மெட்டுகளில் அதை ஈடுகட்டி என்ன பயன்?

இதற்கெல்லாம் அப்பாற்பட்டு பாரதிராஜாவின் ஆளுமை, படம் நெடுகிலும் மண்டிக்கிடப்பதால், மனித நேயம் என்கிற வாசம் வீசும் கடல் பூக்களோடு, நாமும் முட்டத்தில் வாழ்ந்து விட்டுத் திரும்புகிறோம்.

— விஷுவல்தாசன்

○ ஃபெயில்,
○ ஜஸ்ட் பாஸ்,
○ ஆவரெஜ்,
○ அபவ் ஆவரெஜ்
● டிஸ்டிங்ஷன்

சுமி சூப்பர் மார்க்கெட்



# நர்ஸரி ரைம்களுக்கு நிரவல் - ஸ்வரமா...?

ஒரு புதுப் போக்கு கவனிச்சீங்களா...? டெய்லீஸ்ல சும்மா லிஸ்ட் ஆஃப் சாங்க்ஸ் மாதிரி வெளியாயிட்டுட்டிருந்த சங்கீத விமர்சனங்களெல்லாம் இந்த வருஷம் உப்பு–மிளகாய்த்தூள் தூவின பச்சை மாங்காய் மாதிரி சுள்ளுன்னு மாறிட்டிருக்கு. நிறை – குறை இரண்டையும் சொல்ற ஆரோக்கிய போக்கும் தெரியுது. ஹிந்துல ஒரு ஆர்டிஸ்ட்டுக்கு ஒண்ணரை இஞ்ச்தான் சராசரியா ஸ்பேஸ் கிடைக்குது. பட், தின தந்தியில ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன் ஒரே கச்சேரி பற்றி முக்கால் பக்கத்துக்கும் அதிகமா எழுதறார். கலைஞர் பிறந்த – வளர்ந்த கதை, கான்டீன்ல என்ன ஸ்பெஷல், சினிமா பாட்டுக்கும் கர்நாடிக்குக்கும்



என்ன வித்தியாசம்னு நிறைய சைட் லைட்ஸ் அன்ட் சைட் டிராக்ஸ் இருக்கு அவர் ரெவ்யூல. பட் புகழ்ச்சி கொஞ்சம் ஓவர்.

திடீர் திடீரென்று 'கூ சுக்குக்' 'ஜுஜுபி' மாதிரி வார்த்தைல்லாம் போட்டு கலக்கிடறார்!

சுப்புடுவைப் படிச்சுப் பழகினவங்க இந்த வருஷம் அவர் விமர்சனம் இல்லாததை மிஸ் பண்ணுவாங்க. அவரோட நேர் வாரிசாத் தன்னை நினைச்சுக்கிட்டு எழுதற தும்புரு ஸார் விமர்சனங்களில் 'பஞ்ச்'போதாது.

இந்த வருஷம் அகாடமியோட எழுபத்தஞ்சாவது ஆண்டு விழா ஆரம்பிக்குது. எழுபதாவது சங்கீத கலாநிதி உமையாள்புரம் சிவராமன்! அகாடமியோட ஆனிவர்ஸரியைக் கொண்டாட ராஜி கோபாலகிருஷ்ணன் ஒரு ஸ்பெஷல் பாட்டு பாடினாங்களாம். இந்த வருஷத்து சங்கீத கலாநிதி பற்றி சந்தானகோபாலன் ஏற்கெனவே ஒரு பல்லவி பாடியாகிவிட்டது. (நாலஞ்சு வருஷம் முந்தின்னு ஞாபகம்).

சமீபத்தில் ஒரு ஆக்ஸிடெண்ட்ல காலமான இளம் வயலினிஸ்ட் துரை சுவாமிநாதனுக்கு ஒரு அஞ்சலி கீதம் தயார் பண்ணி கச்சேரியில பாடினாங்களாம் சுதா ரகுநாதன்! தனிப்பட்ட முறையில் பார்த்தா டச்சிங்கா இருக்கு. ஆனா சுதா மாதிரி ஒரு ஆர்டிஸ்ட் ஒரு புதுமை பண்ணினா இட் பிகம்ஸ் எ டிரெண்ட். ஒரு தவறான ட்ரெண்டை ஆரம்பிச்சு வைக்கறாங்களோன்ற கவலை ஏற்படுது. நாளைக்கு ஒரு கோ – ஆர்டிஸ்டுக்குக் குழந்தை பிறந்தா தாலாட்டு கம்போஸ் பண்ணி மேடைல பாடுவாங்களா?

...எந்த கவலையும் படாம இன்னிக்குப் பல பேர் என்னென்னவோ புதுப் பாட்டுகளை மேடையில ரொம்ப தைரியமா பாடிடறாங்க! தியாகராஜரோ, முத்துஸ்வாமி தீக்ஷிதரோ சியாமா சாஸ்திரியோ கம்போஸ் பண்ணினப்போ, 'ஆலாபனை, நிரவல் ஸ்வரத்தோட நம்ம பாட்டைக் கச்சேரில பாடுவாங்கடா'ன்னு நினைச்சுக்கிட்டுப் பண்ணலை. பாட்டும் இசையும் ஒண்ணா கலந்து அவங்களுக்குளேருந்து வெளிப்பட்டுது. இமேஜரி இருக்கும்; இல்லைன்னா இமாஜினேஷனாவது இருக்கும்; எமோஷன் நிச்சயமா இருக்கும் அந்தப் பாடல்களிலே. இன்னிக்கு ரொம்ப பாடல்கள் சும்மா நர்ஸரி ரைம் கணக்கா வெறும் யதுகை மோனைக்காக போட்ட மாதிரி இருக்கு. மேடைக்கு அதையெல்லாம் கொண்டுவரதுக்கு முன்னாடி ஆர்டிஸ்ட்ஸ் நல்லா ஸ்டடி பண்ணி லாங்குவேஜ் அன்ட் மியூசிக் எக்ஸ்பர்ட்ஸ் கிட்டே கன்ஸல்ட் பண்ணிட்டுச் செயல்பட்டா என்ன?.

— சுமி

# வரலாற்றில் இடம் பெறும் பன்னீர்!


• ஜி.கே.வாசன்

காதில் விழுந்தவை


• பன்னீர்

● இப்போது அ.இ.அ.தி.மு.க வட்டாரத்தில் மிகவும் பரபரப்பாகப் பேசப்படுவது, அம்மா மீண்டும் முதல்வரானவுடன், பன்னீர் செல்வத்தின் நிலை என்ன என்பதைப் பற்றித்தான். முதல்வர் ஆவதற்கு முன் ப்ரோடகால் படி அமைச்சர்கள் வரிசையில் ஏழாவதாக இருந்தார் பன்னீர். குறைந்தபட்சம் பன்னீருக்கு, அம்மா இரண்டாவது இடமாவது கொடுக்க வேண்டும். ஆனால் பொன்னையன் இருக்கும்போது அது சாத்தியமல்ல. முதல்வராக இருந்துவிட்டு சாதாரண எம்.எல்.ஏவாக பத்தாவது வரிசையிலும் உட்கார முடியாது. "காளிமுத்துவுக்கு அமைச்சர் பொறுப்பு கொடுத்து இரண்டாவது இடத்துக்குப் போட்டு விடலாம்; மரியாதை வாய்ந்த சபாநாயகர் பொறுப்பை, பன்னீருக்குக் கொடுத்துவிடலாம்" என்று யோசனை சொல்கிறார் ஓர் ஆளுங் கட்சிப் பிரமுகர். எம்.எல்.ஏ ஆகிறாரோ இல்லையோ, பட்ஜெட் கூட்டத் தொடருக்கு முன்னர், அம்மா முதல்வர் ஆகி விடுவாராம். தமிழக வரலாற்றில் இதுவரை சட்டமன்றத்தைச் சந்திக்காத முதல்வராக இருந்தது வி.என். ஜானகி மட்டுமே. இப்போது இந்த வரிசையில் பன்னீரும் இடம் பிடிக்க இருக்கிறார்.

● டான்ஸி வழக்கில் தீர்ப்பளித்த நீதிபதி தினகருக்கு உச்சநீதிமன்ற நீதிபதியாக வாய்ப்பிருப்பதாகச் சொல்கிறார்கள். இப்போது அவருக்கு ஸீனியராக இருக்கும் நீதிபதிகள் ஜெகதீசன், வெங்கடாசலமூர்த்தி, சிர்பூகர், ஜெயசிம்மபாடி ஆகியோர் ஓய்வு பெற்ற பின் அந்த வாய்ப்பு நீதிபதி தினகருக்கு அமையலாம். அதே மாநிலத்தைச் சேர்ந்த ஒருவர், அவருடைய மாநிலத்தில் கவர்னராக நியமிக்கும் வாய்ப்பு இல்லாததுபோல், தலைமை நீதிபதி பொறுப்புக்கு நியமிக்கப்படுபவரும் அதே மாநிலத்தைச் சேர்ந்தவராக இருக்கக்கூடாதாம்.

● த.மா.கா தலைவர் ஜி.கே. வாசன் இரண்டு முறை சோனியாவைச் சந்தித்தபோது அவருக்குச் சொல்லப்பட்ட அறிவுரை "உடனே காங்கிரஸில் இணைந்து விடுங்கள்" என்பதுதான். "தொண்டர்கள் கருத்தைக் கேட்டு முடிவு எடுக்கிறேன்" என்று டெல்லியில் சொல்லிவிட்டு இப்போது தமிழகம் முழுவதும் பயணம் செய்து கொண்டிருக்கிறார் வாசன். இதற்கிடையில் வாசனைக் குழப்ப ஆளுங் கட்சியும் தன் பங்குக்கு விளையாடுகிறதாம். மாவட்டத்திலுள்ள த.மா.கா பிரமுகர்களை 'கவனித்து', 'ஆண்டிப்பட்டியில் அ.இ.அ.தி.மு.க.வை ஆதரிக்க வேண்டும்; காங்கிரஸில் இணையக்கூடாது' என்று வீராவேசமாக வாசன் முன் பேச வைக்க ஏற்பாடுகளைச் செய்துவிட்டதாம். சபாஷ்!

● காவல் துறையில் சமீபத்தில் ஏற்பட்ட மேஜரான மாற்றத்துக்குப் பிறகும் கட்டப் பஞ்சாயத்துத் தொடர்கிறது. "தலைவரை இடம் மாற்றினால் என்ன? அவருடைய சிஷ்யர்கள் இன்னும் எங்களுக்கு ஆதரவாய் இருக்கிறார்களே..." என்று கொக்கரிக்கிறார்கள் 'பஞ்சாயத்தார்!

– சஞ்சயன்

படங்கள்: சௌரா

**கா**பி ராகத்தில் 'இந்த சௌக்ய மனிநே' என்ற தியாகராஜ கீர்த்தனைதான் பிரதானம் கச்சேரியில். ஆனால், கன்னியாகுமரியும் அவருடைய சிஷ்யர் எம்பார் கண்ணனும் வழங்கிய வயலின் நிகழ்ச்சி (கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ்) 'எங்கே சௌக்யம்? எங்கே சௌக்யம்?' என்று நம்மைத் தேடித் தேடி ஏங்க வைத்து விட்டது.

நினைத்ததையெல்லாம் பேசின இந்த வித்வான்களின் விரல்கள். எனினும் வேகத்துக்குத் தரப்பட்ட முக்கியத்துவம் விவேகத்துக்குத் தரப்படாததால் எல்லா ராகங்களையும் கீர்த்தனைகளையும் பூதக் கண்ணாடி வழியே பார்ப்பது போன்ற அச்சுறுத்தும் மிகை!

• கன்னியாகுமரி

ஸ்ரீ ராக வர்ணத்தில் ஆரம்பித்த கச்சேரி 'மஹா கணபதிம் மனஸா ஸ்மராமி' (நாட்டை)யில் அண்ணாமலை சைக்கிளைப் போல் இறக்கைக் கட்டிக் கொண்டு ஜாலம் பண்ண ஆரம்பித்து விட்டது. தொடர்ந்த ஆலாபனைகளில் அழகுணர்ச்சியை விட சாகசங்களே அதிகம். கீர்த்தனை வடிவங்களில் வாசிப்பு சாமர்த்தியம் மேலோங்க, வார்த்தைகளின் நயம் அடிவாங்கிக் கொண்டது.

ம்ருதங்கமும் (அர்ஜுன் குமார்) கடமும் (சுகன்யா ராம் கோபால்) இந்த இசை ரகளையில் சேர்ந்து கொண்டு பாடல்களிடையே கிடைத்த சந்து பொந்துகளில் ஊசிப் பட்டாசு, பாடல்களின் முடிவில் சரவெடி, தனியாவர்த்தனத்தில் தவுசன்ட் வாலா என்று தீபாவளி கொண்டாடி விட்டன!



• ஏஷியா பிரதர்(ஸ்)!

சியாமா சாஸ்திரியின் பைரவி ஸ்வரஜதி சௌந்தர்ய ஸ்வரூபமானதொரு படைப்பு. அதன் உள்ளீடான அழகே அதைக் காப்பாற்றிக் கொடுத்தது. இந்தக் கட்டத்தில் இரு வயலின்களும் இழைந்து இணைப்பாற, நாமும் அந்தத் 'தரு நிழலில்' அப்பாடி என்று அடைக்கலம் புகுந்தோம். உடனேயே புயலாக வந்தது 'சரஸ ஸாம தான...' 'ஹிதவு மாடலெந்தோ' என்று நிறுத்திப் பொழிந்த கற்பனை ஸ்வரங்களில் ... வேண்டாம் மீண்டும் சொன்னதையே சொல்ல வேண்டியிருக்கும்!

பட்டான ரீதிகௌளைக்குக் கொடுத்த 'பாலிகாட்' ட்ரீட்மென்ட் 'ஜனனி நின்னுவினா' கிருதிக்குப் பொருந்தவில்லை.



தும்புரு

காபியிலிருந்து ராகமாலிகைக்கு முன்னேறி திச்ரத்துக்கு மாறி பின்னர் யதாஸ்தானம் வந்து சேர்ந்த ஜெட் பயணம், சாமர்த்தியம் மிக்கது.

கன்னியாகுமரி தமது இசையில் முழு ஈடுபாடு கொண்டிருக்கிறார். கண்ணனின் வயலின், பின் பாட்டு பாடும் புது சிஷ்யரின் குரல் போல் அடங்கியிருந்தாலும் சுநாதமாய் ஒலிக்கிறது. குருவை மிஞ்சி விடக் கூடாது என்பதில் ரொம்ப கவனமாய் இருக்கிறார். இருவருமே மகிழ்ச்சி

• கண்ணன்

யாக வாசிக்கிறார்கள். கேட்போரும் மகிழ்ச்சியோடு கேட்கிறபோது தும்புருவின் விமர்சனம் துச்சம் துச்சம்!

மிஞ்சி விடாமல் பவ்யம் காக்கும் மற்றொரு வித்வான் பி. கணேஷ். ரவிகிரணுடன் இவர் வாசிக்கிற கச்சேரிகளுக்கு, 'ஏஷியா பிரதர்ஸ் சித்ரவீணா' என்று அறிவிப்பு வருகிறது. ஒருமையிலேயே போடுவதுதான் முறை. ரவிகிரண் கண் காட்டுகிற வரையில் கணேஷின் கை நகர்வதிலலை. ஆனால் கிடைக்கிற சந்தர்ப்பங்களில் அண்ணனின் அழகுணர்ச்சிக்குத் தாமும் சளைத்தவரில்லை என்று அடக்கமாக நிரூபித்து விடுகிறார்.

சித்ரவீணையை உலகறியச் செய்த ரவிகிரண், அன்றைய கச்சேரியில் (சாந்தி ஆர்ட்ஸ் ஃபவுன்டேஷன்) கர்நாடக சுத்தத்துக்கு முதல் மரியாதை கொடுத்தது நிகழ்ச்சியின் கனத்த அழகுக்கு முதல் காரணமாகியது.

இருந்த சொற்ப ரசிகர்களைக் கண்டு மூட் அவுட் ஆகாமல் அவர்கள் விருப்பத்தை மதித்து அவர்கள் கேட்ட ராகங்களையே வழங்கிய ரஞ்சகம் நிகழ்ச்சியின் வெற்றிக்கு இரண்டாவது காரணம்.

# வருண பகவானுக்கு ஒரு எக்ஸ்பிரஸ் தந்தி!



• அபர்ணா



• வரலக்ஷ்மி

எடுத்துக் கொண்ட அத்தனை உருப்படிகளிலும் proportion எனப்படும் கட்டுப்பாடு வேலி போட்டுக் கொண்டு, இத்துனூண்டு இடத்திலும் 'எவ்வளவு அழகு இருக்கிறது பார் பார்' என்று அழைத்து அழைத்துக் காட்டுவது போலிருந்தது அவர் இழைத்திழைத்து வாசித்த நேர்த்தி.

'எந்தோ ப்ரேம' என்ற சுருட்டி வர்ணத்துடன் கச்சேரி ஆரம்பம். கமகங்களின் கச்சிதம் கடைசி வரை தொடர்ந்து அழகுகளை கம்பீர

நிலைக்கு உயர்த்தியது.

மணிரங்கு ராகத்தில் ஜய ஜெய பத்மநாப. அதையடுத்து ஜகன்மோகினியில் சோபில்லு ஸப்தஸ்வர. என்று பாப்புலர் சாஹித்யங்களை வழங்கி விட்டு நாட்டைக்குறிஞ்சி



"அப்பா வீட்ல இல்ல... வெளில போயிருக்கார்!"

"நாங்க சென்சஸ் எடுக்க வந்தவங்க. கடன் குடுத்தவங்க இல்லம்மா.. சும்மா வெளில வரச் சொல்லு!"

— அம்பை தேவா

ஆலாபனை... அதன் ஜீவ ஸ்வரங்களின் ஆன்மாவைத் தொட்டுக் காட்டி கண் பனிக்கச் செய்து விட்டார் ரவிகிரண்.

கல்யாணி ஆலாபனையும் அதே மரியாதையுடன் கையாளப்பட, பரிபூரண அழகுடன், தொட்ட இடமெல்லாம் துலங்கிப் பிரகாசித்து மீண்டும் கண் பனிக்கச் செய்தது!

கச்சேரியில் நம் கண் பனிக்கச் செய்யக் கூடிய கலைஞர்கள் இன்று குறைவு; ஒரே கச்சேரியில் இவ்வாறு இருமுறை கண் பனிக்கச் செய்யக்கூடிய கலைஞர்களோ மிக மிகக் குறைவு.

வயலின் ஸ்ரீராம் பரசுராம், மிருதங்கம் ஸ்ரீமுஷ்ணம் ராஜாராவ், கஞ்சிரா பி.எஸ். புருஷோத்தமன். மூவருமே பிரதான கலைஞரின் மனோதர்மத்தைப் பின் தொடர்ந்து வாசித்தனர். மாக்கோலத்துக்குக் கவனமாகச் செங்காவி அரண் கட்டியது போல் சித்ரவீணையின் மென்மையான ஒலிகளும் சின்ன சின்ன அழகுகளும் தாள வாத்தியங்களின் முழக்கத்தில் மறைந்து போகாமல் காத்தனர். திஸ்ர நடை ஆதி தாளத்தில் தனியாவர்த்தனம் - சௌக்கியமான லய விருந்து.

வாத்தியக் கச்சேரியென்றபோதும் சாஹித்யங்களைக் கேட்டு மகிழ்ந்த திருப்தியை வழங்க முடிகிறது ஏஷியா சகோதரர்களால். நாட்டைக்குறிஞ்சியில், 'எக்காலத்திலும் மறவேனே...' காலனை மடிய உதைத்த நடராஜனின் அடிமலர் அழகு தெரிந்தது. கல்யாணியில் ஊத்துக்காடு வேங்கடகவியின் அரிய வடமொழி கீர்த்தனை :

ஸரஸிஜ பவஜாயே சரஸ்வதி நமோஸ்துதே

கச்சேரியே கலைமகள் வந்தனம் போலத்தான் அமைந்தது.

படுத்தும் தொண்டை, பாடுபடுத்தும் வயலினிஸ்ட் (எம். பாலகிருஷ்ணன்) என்று பல தடைகளைத் தாண்டி கச்சேரியைக் கரையேற்ற வேண்டுமானால் நல்ல பாடாந்தரம் தேவை. வரலக்ஷ்மி ஆனந்தகுமார் அது வாய்க்கப் பெற்றவர். கச்சேரிக் கலை மன்னராக விளங்கிய டி.கே. ஜெயராமனின் சிஷ்யர். (தற்போது பி.எஸ். நாராயணசாமியிடம் பயில்பவர்) சாஸ்திரி ஹாலில் சாஸ்திரத்துக்கு ரசிகர்கள் என்ற பெயரில் 1X2 டஜன் பேர்தான்..! ஆனாலும் வரலக்ஷ்மி ஆர்வமாய்ப் பாடினார். 'கணபதே மஹாமதே' என்று கல்யாணியில் தீக்ஷிதர் கீர்த்தனையுடன் ஆரம்பிக்கும் தைரியம் எத்தனை பேருக்கு இருக்குமென்று தெரியவில்லை.

நீலாயதாக்ஷி (பரஸ், சியாமா சாஸ்திரி) டி.கே. ஜெயின் 'டச்'சோடு இருந்தது. நாகைப் பட்டிணத்துக் கடற்கரைக் கோயிலில் குடிகொண்டிருக்கும் அம்பாளை வேண்டுகிற கீர்த்தனை இது. அந்த கடற்கரைக் காற்றில் ஒரு ரவுண்ட் வந்ததாலோ என்னவோ அடுத்தபடியாக வரலக்ஷ்மியின் தொண்டை இன்னும் மோசமாகி விட்டது. அழுகிற குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு சமைப்பது போல் அந்தக் குரலுடனேயே ஹிந்தோளத்தை ஆலாபனை செய்ய ஆரம்பித்தார். கரம் மசாலா சேர்த்து மால்கோன்ஸ் ஆக்கிவிடாமல் தென்னிந்திய வெரைட்டி

யாகவே ஹிந்தோளத்தைத் தந்து, மாலையும் மகேசனையும் ஒருங்கே துதிக்கும் 'மாரமணன் உமாரமணன்' என்ற பாபனாம் சிவனின் பாடுலர் ஹிட்டை வழங்கினார். பிரதான ராகம் பூர்வி கல்யாணி. அதற்கு பூச்சி ஸ்ரீநிவாஸ அய்யங்காரின் 'பரம பாவனா ராமா'. விஸ்தாரமாய் நிரவல் ஸ்வரம் வழங்கினாலும் மனத்தைத் தொடும் ரகம் இல்லை.

சரி சரி யென்று வாசித்து வந்த மிருதங்கம் ஈரோடு நாகராஜன், சராசரியான ஒரு தனியாவர்த்தனம் வழங்க, அதன் பிறகு வரலக்ஷ்மி எடுத்த 'ஆசை முகம் மறந்து போச்சே' பாட்டில் அவர் காட்டிய அவசரத்தில், அதுவரை போட்ட மார்க்குகளை அதைவிட அவசரமாக மைனஸ் செய்யத் தோன்றியது.




அபர்ணா, தியாகராஜன் கச்சேரியைக் கேட்பவர்கள், தந்தை ஓ.எஸ். தியாகராஜனின் இசையுடன் இவர் பாட்டை ஒப்புநோக்காமல் திறந்த மனத்துடன் எடை போடுவது நல்லது. பார்த்தசாரதி சுவாமி சபாவில் அவர் பாடிய கச்சேரியை அவ்வாறு எடை போட்டால், நல்ல ஆரம்பத்துக்கு நிறைய மதிப்பெண் தரலாம். கீர்த்தனைகளின் கதம்ப கலவைக்கு மேலும் மதிப்பெண் தரலாம். ஆனால் இரண்டு மணி நேரகச் சேரியில் இத்தனை பாடல்களை அடக்க முயன்றதால் பிரதான ராகத்துக்கு நேரம் குறைந்து போனது - அதற்கு மார்க்கைக் குறைத்தாக வேண்டும்.

பிற்பகல் கச்சேரிகளில் பாடும் இளம் வித்வான்களிடம் இந்தக் குறை தெரியும் போது ஆலாபனையை விஸ்தாரப்படுத்தத் தெரியாததால் இப்படிப் பாடல்களால் நிரப்பிக் கொண்டு போகிறார்களோ என்று சந்தேகம் வரும்.

ஹிந்தோளத்தில் 'ஸாம கான லோலனே' என்ற ஜி.என்.பி. பாடலைப் பாடினார் அபர்ணா. அனாவசியங்கள் இல்லாத அழகான சங்கீதம் என்றாலும் குரலில் அவ்வப்போது வளம் குன்றுகிறது. ஜெயந்தி கேசவ் இடைஞ்சல் பண்ணாமல் வயலினில் ஆதரித்தார். ம்ருதங்கம் ஆர்.எஸ்.ஆர். ஸ்ரீகாந்த்.

தனியாவர்த்தனத்தின் போது ரசிகர்கள் வெளிநடப்புச் செய்யவில்லை. உபயம் : வருண பகவான். தாள வாத்தியக்காரர்கள் கவனத்துக்கு... தனியாவர்த்தனத்தின் போது ரசிகர்கள் ஏன் எழுந்து போகக் கூடாது என்று ஒரு லெக்-டெம் நடத்த மியூசிக் அகாடமி இசை மாநாட்டின் இவ்வாண்டு தலைவர் உமையாள்புரம் சிவராமனை உசுப்பி விடலாம்; தி ஹிந்து அல்லது 'கருதி'க்குக் கடிதம் எழுதலாம்; அல்லது... வருண பகவானுக்கு ஒரு எக்ஸ்பிரஸ் தந்தி அனுப்பி வைக்கலாம்!

# கிறிஸ்துமஸ் மரங்கள்!

சான்பிரான்சிஸ்கோ நகரைச் சேர்ந்த வெர்னர் எர்ஹார்டு என்பவர் கிறிஸ்துமஸின்போது 62 ஆயிரத்து 824 வாழ்த்துக் கடிதங்களை அனுப்பி, சாதனை படைத்தார். அந்த சாதனை இன்று வரை முறியடிக்கப்படவில்லை.

- அரிச்சந்திரன்



கிறிஸ்துமஸ் மரம் என்று மரம் இல்லாவிட்டாலும் 'ஃபிர்' (Fir) மரங்களை கிறிஸ்துமஸ் விழாவுடன் இணைத்து முதன் முதலில் விழா கொண்டாடிய பெருமை 'ஜெர்மன்' நாட்டையே சாரும். கி.பி. 8ம் நூற்றாண்டில் ஜெர்மனிக்கு வந்த 'போனிபாஸ்' என்ற கிறிஸ்தவப் பாதிரியார் 'ஃபிர்' மரத்தை கிறிஸ்து பிறப்புப் பெருவிழா திருப்பலியில் ஆசீர்வதித்து குழந்தை இயேசுவுக்கு அதை ஒப்புக் கொடுத்தார். அதுமுதல் 'ஃபிர்' மரம் கிறிஸ்துமஸ் மரமானது.

ஜெர்மானிய இளவரசர் ஆல்பர்ட்டுக்கும், இங்கிலாந்து இளவரசி விக்டோரியாவுக்கும் திருமணம் நடைபெற்ற பின்னரே கிறிஸ்துமஸ் மரம் இங்கிலாந்துக்கு அறிமுகமானது. 1841ல் இங்கிலாந்து இளவரசர் ஆல்பர்ட் ஒரு கிறிஸ்துமஸ் மரத்தை அரண்மனையில் நட்டு அதில் பரிசுப் பொருட்களைத் தொங்கவிட்டார். மரத்தைச் சுற்றிலும் மெழுகுவர்த்திகளை எரிய விட்டார். இப்பழக்கம் மக்களிடமும் பரவியது.

நமது நாட்டில் பொதுவாக சவுக்கு மரங்களே கிறிஸ்துமஸ் மரங்களாக நடப்பட்டு அலங்கரிக்கப்படுகின்றன. தற்போது செயற்கையான, ஃபிர் மரங்கள் கிறிஸ்துமஸ் மரங்களாக விற்பனை செய்யப்படுகின்றன. பாலி புரொப்பிலீன் என்ற பொருளால் செய்யப்பட்ட கிறிஸ்துமஸ் மரங்களை நாம் வாங்கி பயன்படுத்திவிட்டு, பத்திரமாக நீக்கி, அட்டைப் பெட்டியில் வைத்து மறு ஆண்டும் பயன்படுத்தலாம்!

- சா. அனந்த குமார்.

படம் : யோகா

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

# MIX BUSINESS WITH PLEASURE
# ONLY WITH INDIAN AIRLINES



## Fly in India. Holiday abroad. With a FREE ticket from Indian Airlines



**desh videsh II**
OFFER
From 16th Nov 2001 to 15th Feb 2002

Fly in India worth
**Rs. 75,000 ***
And get a FREE return ticket to any International destination* on our network

Or fly worth
**Rs. 90,000 ***
Get a FREE Business Class return ticket under the same offer

Or fly worth
**Rs. 1,10,000 ***
Get 2 FREE return tickets under the same offer

Or fly worth
**Rs. 1,30,000 ***
Get 2 FREE Business Class return tickets to your chosen destination* on our International network under the same offer

*The more you fly*




Act now ! Make all your travel plans with Indian Airlines. After all, you too need a break.

इंडियन एयरलाइन्स
Indian Airlines
www.indian-airlines.com

**Last Date of submission of the filled - in form : Feb. 28, 2002**

**IA International Sectors:** • From **Ahmedabad** to Kuwait or Muscat or Sharjah • From **Amritsar** to Sharjah • From **Bangalore to** Muscat or Sharjah or Singapore or Bangkok • From **Chennai** to Kuala Lumpur or Bangkok or Singapore or Colombo or Sharjah or Kuwait or Fujairah or Muscat or Ras-Al-Khaimah • From **Cochin** to Kuwait or Muscat or Sharjah • From **Coimbatore** to Sharjah • From **Delhi** to Kathmandu or Sharjah or Singapore or Bangkok or Muscat • From **Goa** to Kuwait or Sharjah • From **Hyderabad** to Dubai or Sharjah or Kuwait or Muscat or Bangkok • From **Kolkata** to Bangkok or Kathmandu or Yangon or Dhaka or Singapore via Bangkok • From **Kozhikode** to Bahrain or Doha or Fujairah or Kuwait or Ras-Al-Khaimah or Sharjah • From **Lucknow** to Sharjah • From **Mumbai** to Sharjah, or Singapore or Bangkok via Chennai, or Muscat or Kuwait via Ahmedabad • From **Tiruchirapalli** to Kuwait or Fujairah or Ras-Al-Khaimah or Sharjah • From **Thiruvananthapuram** to Male • From **Varanasi** to Kathmandu.

* **Conditions apply** • Scheme is applicable for travel against INR fare level only • Prize ticket(s) to be availed (return journey to be completed) by **Feb. 27, 2003** • Black out periods will apply • No request for change in name/ sector of the Free prize ticket will be entertained • This offer is for free international ticket(s) only • All applicable taxes, fees etc., to be borne by the passenger • IA will not offer any free domestic transportation for reaching the gateway point i.e. the city of origin of international travel, except as permitted from Mumbai for specified routings, viz Mumbai to Chennai for onward travel to Bangkok or Singapore and from Mumbai to Ahmedabad for onward travel to Muscat or Kuwait • Only original boarding cards alongwith ticket jacket (photocopy of the ticket jackets attested by IA official) will be accepted • Issuance of authority letter for prize ticket(s) may take one week from the date of receipt of documents as above • IA will not be responsible for any loss or damage of documents, if sent by mail • Contact your nearest IA office or approved IA travel agent for further details.

***Total face value of ticket includes IATT, PSF & Insurance charge.**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka


# ARTHRITIS / மூட்டுவலி

1. OSTEO ARTHRITIS
2. RHEUMATOID ARTHRITIS
3. ANKYLOSING SPONDYLITIS
4. GOUT



1. கை, கால்களில் மூட்டு வீக்கமும், வலியும்.
2. கை, கால் விரல் மூட்டுகளில் வீக்கமும் வலியும்.
3. கழுத்து வலி (Cervical Spondylitis)
4. நடுமுதுகின் கீழ்பகுதியில் வலி (Lumbar vertebra and Sacral Joint area)
5. இடுப்பு எலும்பும் (Pelvis Bone) தொடை எலும்பு தலையும் (Femural Head) சேருமிடம்.
6. குதிகால் இணைப்புகளில் வலி.
7. குதிகால்களில் எலும்பு வளர்ந்து நடக்க முடியாமல் வலி. (Calcaneal Spur)

முதலியவை பல ஆண்டுகளாக இருந்தாலும் வித்தியாசமான இயற்கை வைத்திய முறையில், பக்கவிளைவுகள் இல்லாமல் நலம்பெற செய்கின்றோம்.

சென்னை, பம்பாய், டெல்லி மற்றும் வெளிநாட்டில் இருந்தும், தாங்கமுடியாத மூட்டுவலியுடனும், வீக்கத்துடனும் தசை பிடிப்புடன் நடக்க முடியாமல் சிரமப்பட்டவர்களும், காலையில் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாமல் சிரமப்பட்டவர்களும், எங்களிடம் நல்ல விதமாக சிகிச்சை பெற்று மகிழ்ச்சியுடன் சென்று இருக்கின்றார்கள். மற்ற விபரங்களுக்கு நேரில் வந்து பார்த்தால்தான் நாங்கள் கொடுக்கும் சிகிச்சையின் தன்மை புரியும்.

## அடையார் நேச்சர் கியூர் சென்டர்

## ADYAR NATURE CURE CENTER

No. 6, SECOND CROSS STREET, KASTURBHA NAGAR, ADYAR, CHENNAI - 600 020.
Phone:4413399, 4402470. Tele Fax: 044-4916650 .
(காந்திநகர் பஸ்டெப்போ எதிரில் Aunty Uncle ஷாப் பக்கத்தில் உள்ள தெரு)

ஆர்த்ரிடிஸ் பற்றியும் - மற்றும் அதற்கு ஏற்ற உணவுப் பழக்கம் பற்றியும் தெரிந்து கொள்ள விரும்புபவர்கள் நேரில் வந்து குறிப்பு புத்தகங்களை இலவசமாக பெற்றுக் கொள்ளலாம்.

குறிப்பு: வெளியூரில் இருந்து வருபவர்களுக்கு, குறைந்த செலவில் தங்க, சாதா மற்றும் ஏர்கண்டிஷன் ரூம்கள் வாடகைக்கு எங்கள் ஆஸ்பத்திரியில் கிடைக்கும். இதற்கு முன் பதிவு செய்து கொள்ள வேண்டும். சைவ உணவு வசதி மட்டும் உண்டு. வியாதியஸ்தர்களுக்கு தேவைப்பட்ட மாற்று உணவுகளும் வழங்கப்படும் என்பதையும் அறியவும்.